பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

## நூல் தொகுப்பு :

தொகுதி 9



டாக்டர் பாபா சாகேப்

# அம்பேத்கர் :

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு

## தொகுதி 9



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''இந்து சமூக அமைப்பு, சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தால் நீண்ட காலத்திற்கு முன்பே அது தூக்கியெறியப்பட்டிருக்கும். ஆனால், அது படிப்படியான சமத்துவ மின்மையைக் கொண்டிருப்பதால், சூத்திரர்கள் பிராமணர்களைக் கீழே தள்ள விரும்பினாலும், தீண்டப்படாதவர்கள் தங்களுடைய நிலைக்கு உயர்ந்து வந்துவிடுவதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் தீண்டப்படாதவர்களுடன் சேர்ந்து சமூக முறைமையின் மேல் படிகளையெல்லாம் ஒரே மாதிரியாகக் கீழிறங்குவதை விடத், தங்கள் மீது பிராமணர்கள் சுமத்துகின்ற அவமதிப்புகளைத் தாங்கிக் கொள்வதையே விரும்புகிறார்கள். இதன் விளைவாகத் தீண்டப்படாதவர்களின் போராட்டத்தில் அவர்களுடன் சேர்ந்து கொள்ள யாரும் இல்லை என்று ஆகிவிடுகிறது. அவர்கள் முற்றிலு மாகத் தனிமைப்பட்டு நிற்கிறார்கள். தனிமைப்பட்டிருப்பது மட்டுமின்றி, அவர்களுக்கு இயற்கையாகத் தோழமையாளர்களாக இருக்க வேண்டிய வகுப்புகளே அவர்களை எதிர்த்து நிற்கிறார்கள். இவ்வாறு தனிமைப்பட்டிருக்கும் நிலை தீண்டாமையை ஒழிப் பதற்கு மற்றொரு இடையூறாக உள்ளது.''

*- டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்*

தனிமைப்பட்டு நிற்கும் பிரச்சினை

This Volume IX in Tamil forms the first part of the English Edition Volume 5 : Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches published by the Education Department, Government of Maharashtra, 1989.

முதற் பதிப்பு : 1999
சைத்ர, 1919

மறுபதிப்பு: 2008



விலை ரூ. 25/-

நூலகப் பதிப்பு : ரூ. 85/-

வெளியீட்டாளர் :

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
நல அமைச்சகம், இந்திய அரசு,
புது டில்லி.

விற்பனை நிலையம் :

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

ஒளி அச்சு :

லிங்கப் நெட்வொர்க் பிரைவேட் லிமிடெட்.,
ராயப்பேட்டை, சென்னை - 14.

அச்சிட்டோர் :

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
ராயபேட்டை, சென்னை - 14. போன்: 8532441, 8532973

# ஆலோசனைக் குழு

மாண்புமிகு பல்வந்த்சிங் ராமுவாலியா
நலத்துறை அமைச்சர்
இந்திய அரசு

திரு. கே.கே. பக்ஷி, இ.ஆ.ப.,
செயலாளர், நல அமைச்சகம்

பி.எல். சர்மா, இ.ஆ.ப.,
உறுப்பினர் - செயலாளர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

எச். ஆர். பீமா சங்கர், ஐ.ஆர். எஸ்.,
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் புவுண்டேஷன்

நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்):
டாக்டர் எஸ். பெருமாள், எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.

ஆங்கிலத் தொகுப்பாளர் :

திரு. வஸந்த் மூன்
மும்பாய்

தமிழ் நூல் பதிப்பாளர் :

டாக்டர் எஸ். பெருமாள்

மொழி பெயர்ப்பாளர்கள் :

திரு. ஐ. இசக்கி
திரு. வே. வெ. சந்திரசேகரன் பி.ஏ.,பி.எல்.

பிழைதிருத்த உதவி :

பேரா. எஸ். தேவராசன்




# வாழ்த்துரை

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் பேச்சும் எழுத்தும் தொகுத்தளிக்கப்பட்ட இத்தொகுதியின் இரண்டாம் தமிழ்ப் பதிப்பனை தமிழ் வாசகர்களுக்கு சமர்ப்பிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கரின் படைப்புக்களை தமிழ் வாசகர்கள் படித்து பயன்பெறுவர் என்று நம்புகிறேன்.

புதுடில்லி

(ஒப்பம்) திருமதி மீராகுமார்
இந்திய அரசு சமூகநீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்

## அணிந்துரை

சமுதாயத்தில் சிலர் தம்மை உயர்ந்தவர்கள் என்று கருதிக் கொள் வதும், பிறரை இழிந்தவர்கள் என்று அவ மதிப்பதும் உயர்ந்தவர்கள் என்று கருதிக் கொள்வோர் மற்றவர்களைத் தொடுவதற்குக் கூட அஞ்சுவதும், வெறுத்தொதுக்குவதும் வழக்கமாக உள்ளது. இந்தப் போக்கு மிகுந்த வருத்தத்தை அளிக்கக் கூடியதாகும். இந்த மனநிலை இப்போது மாறிவரக் காண்கிறோம். பழையன கழிந்து, புதியன புகுதல் நிகழ்வதோடு, இந்த மாற்றத்தை ஏற்படுத்த பாடுபடுவோரும் பெருகி வருகின்றனர். இவர்களின் முயற்சி வெற்றி பெற்றே தீரும்.

புத்தரின் நெறியை அறியாதவர்கள் வெகு சிலர். அவர் காட்டிய நெறியைப் பின்பற்றிச் சமத்துவச் சமுதாயத்தை உருவாக்கும் பணியைப் பலரும் மேற்கொண்டுள்ளனர். சமத்துவ மற்ற நிலையைப் போக்கிடப் பாடுபட்டவர்களில் பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கர் அவர்கள் குறிப்பிடத்தக்கவர். அவர் வகுத்தளித்த சமத்துவக் கொள்கையைப் பாரத அரசு நிறைவேற்றப் பாடுபட்டு வருகின்றது.

பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கர் தீண்டாமையைத் தீரமுடன் எதிர்த்த சிறப்புக்குரியவர். மக்களிடையே பிறப்பினால் ஏற்றத்தாழ்வு பாராட்டுவதை அறவே வெறுத்தவர்.

நம் நாட்டின் விடுதலைக்காக எண்ணற்றவர்கள் இரத்தம் சிந்தியுள்ளனர். அவர்கள் சிந்திய இரத்தத்தில் வேற்றுமை இல்லை. இந்த உண்மையை அறிந்த பின் மக்கள் அனைவரும் சமமே என்பதில் நாம் உறுதியாக இருப்பதோடு, மக்களிடையே நிலவும் அனைத்து வகை வேறுபாடுகளையும் களைந்து நாட்டின் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும்.

இந்த இலட்சியத்தை நிறைவேற்றுவதில் ஈடுபட்டிருப்போர் அனைவரும் நமது பாராட்டுக்கு உரியவர்களாகின்றனர்.

புது டில்லி.

பல்வந்த் சிங் ராமுவாலியா
நலத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

## வாழ்த்துரை

*'பாரத் ரத்னா' விருதுபெற்ற டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் அவர்கள் ஒப்பற்ற அறிஞரும், உண்மையான தேசபக்தருமாவார். அவர் நம் நாட்டுக்கு ஆற்றிய பணிகள் மறக்க முடியாதவை; எண்ணற்றவை. நம் நாட்டை நலிவடையச்செய்த பிரச்சினைகளுக்கான காரணங்களைக் கண்டறிந்து அவற்றைப் போக்கும் முயற்சிகளை மேற்கொண்டார்.*

*சமுதாயத்தில் நிலவும் துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் காரணமாக உள்ள சாதி, மத வேறுபாடுகளை ஒழித்தால் தான் நாடும், மக்களும் முன்னேற்றம் காணமுடியும். மக்களிடையே வேற்றுமை பாராட்டும் தீண்டாமைக் கொடுமையை ஒழித்து ஒன்றுபட்டு வாழும்போதே உயர்ந்த பண்பாடுள்ள சமுதாயத்தைச சார்ந்தவர்கள் என்ற நிலையை எய்த முடியும். இத்தகைய கொள்கையை எடுத்துரைத்து நிலைநிறுத்துவதற்காகத் தம் வாழ்நாள் முழுதும் அயராது பாடுபட்டவர் டாக்டர் அம்பேத்கர் அவர்கள். இந்த முயற்சியில் அவர் வெற்றியும் பெற்றார்.*

*டாக்டர் அம்பேத்கர் அவர்கள் தம் கருத்துகளை ஆங்கில மொழியில் அழகாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்துள்ளார். அவருடைய சிந்தனைகளை இந்திய மொழிகளில் வெளியிட்டுப் பரப்பும் பணியை மாண்புமிகு நலத்துறை அமைச்சர் திரு.பல்வந்த்சிங் இராமுவாலியா அவர்களும், நலத்துறைச் செயலாளர் திரு. கே.கே. பக்ஷி அவர்களும் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றனர்.*

*சமத்துவச் சமுதாயத்தை உருவாக்கப் பாடுபட்ட டாக்டர் அம்பேத்கர் அவர்களின் எண்ணங்களையும், கருத்துகளையும் தாங்கிவரும் இந்தத் தொகுதியும், மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெறும் என்பதில் ஐயமில்லை.*

*புது டில்லி*

*பி.எல். சர்மா,*<br>
*உறுப்பினர் - செயலாளர்*<br>
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,*<br>
*நல அமைச்சகம்*

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் மொழி பெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 9 வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் பதிப்பாசிரியர்கள், மொழி பெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியர்வர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவருக்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

புதுடில்லி.

எச். ஆர். பீமா சங்கர்,<br>
இயக்குநர்<br>
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

## தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபா சாகேப் பி.ஆர். அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் ஐந்தாவது தொகுதி, தமிழில் இரு பகுதிகளாக வெளியிடப்படுகின்றது. தமிழில் முதல் பகுதி ஒன்பதாவது தொகுதியாகவும், இரண்டாம் பகுதி பத்தாவது தொகுதியாகவும் அமைந்துள்ளது.

இந்திய நாட்டில் ஒடுக்கப்படும், ஒதுக்கப்பட்டும் அடையாளங் காணமுடியாத வகையில் வைக்கப்பட்டுள்ள ஐந்திலொரு பகுதி மக்களின் அவல வாழ்க்கையையும், அவர்களுடைய மனித உரிமை பற்றிய பிரச்சினைகளையும், சமூகம், சமயம், அரசியல் என்னும் மூன்று கோணங்களில் விரிவாக ஆய்ந்து எழுதப்பட்டுள்ள இந்த நூல், சிறந்ததொரு சமூகவியல் ஆவணமாக அமைந்துள்ளது. பலவகை ஆதாரங்களை ஒருங்கே திரட்டி எழுதப்பட்டுள்ள இந்நூல், டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் மேற்கொண்ட அறிவுப்பணிக்கும், போராட்டத்திற்கும் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

ஆங்கில மொழியில் சிறந்த சிந்தனைக் களஞ்சியமாக உள்ள டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்களை மக்களுக்குப் பயன்படும் வகையில் தமிழிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் வெளியிடும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசின் நலத்துறையும், டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் பாராட்டுதலுக்கு உரியவை. இந்த நூல்களை மொழிபெயர்க்கும் பணியைப் பலர் மெற்கொளவதாலும் விரைந்து வெளியிட வேண்டியுள்ளதாலும் மொழி நடையிலும், சொல்லாட்சியிலும் வேறுபாடு ஏற்படுவது தவிர்க்க இயலாததாகியுள்ளது. இந்தக் குறைகளைத் தமிழ் மக்கள் பொறுத்துக் கொள்வார்கள் என நம்புகின்றோம்.

இந்த அரிய பணியில் ஈடுபட்டுள்ள மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர் ஆகிய யாவரும் நன்றிக்குரியவர்கள். முந்தைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஏற்பார்கள் எனவும் நம்புகின்றோம்.

எஸ். பெருமாள்
தமிழ்நூல் பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

பிரிவு 3

பிரச்சினையின் மூலங்கள்



பிரிவு 4

தீண்டாதவர்கள் எதிர்கொள்ள வேண்டியிருப்பவை

# தீண்டப்படாதவர்கள்

அல்லது

# இந்தியச் சேரிகளின் குழந்தைகள்

மற்றும்

# தீண்டப்படாதவர்கள், தீண்டாமை பற்றிய ஏனைய கட்டுரைகள்

இந்த மனப்பான்மை எவ்வளவு இயற்கையானது என்பது, யூதர்களிடம் 'ஜெண்டைல்' என்று அழைக்கப்படும் யூதரல்லாதவர்கள் காட்டும் மனப்பான்மையிலிருந்து தெளிவாகும். இந்துக்களைப் போலவே ஜெண்டைல்களும் யூதர் பிரச்சினை என்பது சாராம்சத்தில் ஒரு ஜெண்டைல் பிரச்சினை என்பதை ஒப்புக்கொள்வதில்லை. இந்த விஷயம் பற்றி லூயி கூல்டிங் கூறும் கருத்துக்கள் இதைத் தெளிவாக்குகின்றன. யூதர் பிரச்சினை என்பது சாராம்சத்தில் ஒரு ஜெண்டைல் பிரச்சினை என்று காட்டுவதற்கு அவர் பின்வருமாறு கூறுகிறார்:

"யூதர் பிரச்சினை சாராம்சத்தில் ஒரு ஜெண்டைல் பிரச்சினைதான் என்று நான் எந்த வகையில் கருதுகிறேன் என்பதைக் காட்டுவதற்கு ஓர் எளிமையான உதாரணத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். எனக்கு நெருங்கிய பழக்கம் உள்ள ஒரு பிராணி கலப்படமான வம்சத்தைச் சேர்ந்தது. ஜான் ஸ்மித்துக்கு அது இரு கண்மணிகளைப் போன்றது. 'பேடி'க்கு ஸ்காட்ச் டெரியர் நாய்களைப் பிடிக்காது. 'பேடி' க்கு 20 கெஜ தூரத்துக்குள் அந்த இன நாய் ஒன்று போனால் போதும், அது குரைத்துக் தள்ளும்: சவால்களும் வசைமொழிகளும் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களின் காதைச் செவிடுபடுத்திவிடும். இந்தப் பழக்கத்தில் ஜான் ஸ்மித்துக்குச் சம்மதமில்லை. எனவே இதைக் கட்டுப்படுத்துவதற்கு அவர் தம்மால் இயன்ற அளவு முயலுகிறார் - 'பேடி'யின் வெறுப்புக்கு உள்ளாகும் பிராணிகள் பெரும்பாலும் சாதுவானவை, தாங்கள் முதலில் வாயைத் திறக்காதவை என்பதால் அவருக்கு இதில் அக்கறை அதிகம். 'பேடி'யிடம் அவர் மிகுந்த பிரியம் வைத்துள்ள போதிலும், அவரும் என்னைப் போலவே 'பேடி'யின் இந்த ஒழுங்கற்ற நடத்தைக்குக் காரணம் அதனிடம் ஓரளவுக்கு இருக்கும் முதல் பாவம் தான் என்று கருதுகிறார். இந்த விஷயம் ஒரு ஸ்காட்ச் டெரியர் பிரச்சினை என்றோ, மாலைக் காற்றில் அமைதியாக மோப்பம் பிடித்துக் கொண்டிருக்கும் அண்டை நாயை 'பேடி' தாக்கினால், அண்டை நாய் அங்கு இருப்பதன் காரணமாக அந்தத் தாக்குதலைத் தூண்டிவிட்டது என்று அதன்மேல் தான் குற்றம் கூறவேண்டும் என்றோ, இதுவரை யாரும் எங்களிடம் சொல்லவில்லை."

இதில் யூதர் பிரச்சினைக்கும் தீண்டாதோர் பிரச்சினைக்கும் இடையே முழுமையான உவமை அமைந்துள்ளது. ஸ்காட்ச் டெரியருக்கு 'பேடி' எப்படியோ, அப்படித்தான் யூதருக்கு ஜெண்டைலும், தீண்டாதோருக்கு இந்துவும் இருக்கின்றனர். ஆனால் ஒரு விஷயத்தில் யூதர் பிரச்சினை தீண்டாதோர் பிரச்சினையிலிருந்து வேறுபடுகிறது. யூதர்களும் ஜெண்டைல்களும் எதிர் எதிரான கோட்பாடுகளால் பிரிவுபட்டுள்ளனர்.

யூதர்களின் மதக்கோட்பாடு ஜெண்டைல்களின் கோட்பாடுகளுக்கு எதிரானது. இந்துக்களும் தீண்டாதோரும் இவ்வாறு முரணான கோட்பாடுகளால் பிரிக்கப்படவில்லை. இவர்களின் சமயக் கோட்பாடு பொதுவானது; ஒரே மாதிரியான சமயப் பிரிவுகளையே இவர்கள் பின்பற்றுகிறார்கள்.

இரண்டாவதாக ஒரு விளக்கம், யூதர்கள் ஜெண்டைல்களிடமிருந்து தனிப்பட்டு இருக்கவே விரும்புகிறார்கள் என்பதாகும். முதல் விளக்கம், குறுகிய இனவெறி மனப்பான்மையைச் சுட்டிக்காட்டுகிறது; இரண்டாம் விளக்கம், வரலாற்று உண்மையை அடிப்படையாகக் கொண்டது. கடந்த காலத்தின் ஜெண்டைல்கள் யூதர்களைத் தங்களுடன் ஒன்றிணைத்துக் கொள்வதற்குப் பல முயற்சிகள் செய்தனர். ஆனால் யூதர்கள் இவற்றை எதிர்த்து நின்றுள்ளனர். இதற்கு இரண்டு உதாரணங்களைக் குறிப்பிடலாம்.

முதல் உதாரணம் நெப்போலியனின் ஆட்சியில் நடந்தது. 'மனிதனின் உரிமைகள்' யூதர்களுக்கும் உண்டு என்ற பிரகடனத்திற்கு பிரான்சின் தேசிய சபை சம்மதம் அளித்தபின், அல்ஸாஸின் வர்த்தக சபையினரும் சமயப் பிற்போக்குவாதிகளும் யூதர் பிரச்சினையை மீண்டும் எழுப்பினார்கள். இதை யூதர்களின் பரிசீலனைக்கே விட்டுவிட நெப்போலியன் முடிவுசெய்தார். அவர், பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி ஆகிய நாடுகளிலிருந்து யூதப் பிரமுகர்களின் சபை ஒன்றைக் கூட்டினார். யூதர்களைப் பெரும்பான்மை மக்களுடன் ஒன்றிக் கலக்கச் செய்ய வேண்டும் என்று அவர் விரும்பினார். எனவே யூத சமயத்தின் கொள்கைகள், நாட்டின் குடிமக்களாயிருப்பதற்குரிய நிபந்தனைகளுக்கு இணக்கமானவையா என்பது பற்றி இந்தச் சபையின் கருத்தை அறிய அவர் விரும்பினார். 111 பிரதிநிதிகளைக் கொண்ட இந்தச் சபை பாரிஸ் நகர மன்றத்தில் 1806 ஜூலை 26-ஆம் தேதி கூடியது. பன்னிரண்டு வினாக்களுக்கு விடை அளிக்குமாறு இந்தச் சபையிடம் கோரப்பட்டது. இந்த வினாக்கள் முக்கியமாக யூத தேசபக்திக்கான சாத்தியக்கூறு, யூதர்களும் யூதரல்லாதவர்களும் கலப்புமணம் செய்துகொள்ள அனுமதி உண்டா என்பது, கடும் வட்டி வாங்குவது சட்டபூர்வமானதா என்பது முதலான விஷயங்கள் பற்றிக் கேட்கப்பட்டன. இந்தச் சபை அளித்த பதில்கள் நெப்போலியனுக்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தன. இவற்றை ஒரு சட்டமன்றத்தின் ஆணைகளாக வெளியிட வேண்டுமென்று அவர் விரும்பினார். இதற்காகப் பண்டைக்கால ஜெருசலமில் இருந்த 'சானிட்ரிம்' என்ற உயர் சபையின் மாதிரியில் அவர் ஒரு சபையைக் கூட்டினார். பிரான்ஸ், ஜெர்மனி, ஹாலந்து, இத்தாலி ஆகிய நாடுகளைச் சேர்ந்த 71 பிரதிநிதிகளைக் கொண்ட இந்த 'சானிட்ரிம்' 1807 பிப்ரவரி 9-ஆம் தேதி ஸ்ட்ராஸ்புர்க் நகரைச் சேர்ந்த ஸின்ஜைம் என்ற 'ரேபை'

(யூதமத அறிஞர்) தலைமையில் கூடியது. இந்தச் சபை ஒரு சாசனத்தை வெளியிட்டது. யூதர்கள் பிரான்சைத் தங்கள் தாய்நாடாகவும், அந்நாட்டின் குடிமக்களைத் தங்கள் சகோதரர்களாகவும் கருதவேண்டும் என்றும், அந்நாட்டின் மொழியைப் பேசவேண்டும் என்றும் இந்தச் சாசனம் கூறியது. யூதர்களும் கிறிஸ்தவர்களும் தங்களுக்குள் கலப்பு மணம் செய்து கொள்வதைச் சகித்துக்கொள்ளவேண்டும் என்றும், ஆனால் இத்தகைய கலப்பு மணங்களுக்கு யூதர்களின் திருச்சபையான 'ஸினகாக்' ஒப்புதல் அளிக்காது என்றும் இந்தச் சாசனம் கூறியது. யூதர்களுக்கும் யூதரல்லாதவர்களுக்குமிடையே கலப்பு மணங்களை யூதர்கள் ஏற்கவில்லை என்பது கவனிக்கத்தக்கது. இவற்றைச் சகித்துக்கொள்ள மட்டுமே யூதர்கள் இணங்கினார்கள்.

இரண்டாம் உதாரணமாகக் குறிப்பிடத்தக்கது, 1795 -இல் படேவிய குடியரசு அமைந்தபோது என்ன நடந்தது என்பதாகும். யூதர்கள் மீது விதிக்கப்பட்டிருந்த பல கட்டுப்பாடுகளை நீக்கவேண்டும் என்று எழுச்சி மிக்க யூதர்கள் சிலர் வற்புறுத்தினார்கள். ஆனால் இவர்கள் இவ்வாறு குடியுரிமையை அதிக அளவில் பெறுவதற்குச் செய்த முயற்சியை ஆம்ஸ்டர்டாம் யூத சமூகத் தலைவர்களே எதிர்த்தார்கள். சமமான குடியுரிமைகள் பெறுவது யூத சமயத்தைப் பாதுகாப்பதற்கு இடையூறாகும் என்று அவர்கள் அஞ்சினார்கள். தங்கள் சகோதர யூதர்கள் தங்கள் சமயத்தின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து குடியுரிமையைக் கைவிடுவதாக அவர்கள் அறிவித்தார்கள். யூதர்கள், சமுதாயத்தின் உறுப்பினர்களாக வாழ்வதைவிட அன்னியர்களாக வாழ்வதையே விரும்பினார்கள் என்பதையே இது காட்டுகிறது.

ஜென்டைல்கள் கூறும் விளக்கங்களின் மதிப்பு என்னவாயிருந்தாலும், யூதர்கள் விஷயத்தில் தங்களுடைய இயற்கைக்கு முரணான மனப்போக்கிற்குக் காரணம் காட்ட வேண்டிய பொறுப்பு தங்களுக்கு இருப்பதையாவது உணர்ந்திருந்தார்கள். ஆனால் இந்துக்கள், தீண்டாதவர்களைத் தாங்கள் நடத்தும் விதத்தை நியாயப்படுத்தும் பொறுப்பு தங்களுக்கு இருப்பதை ஒருபோதும் உணரவில்லை. இந்துக்களுக்கு உள்ள பொறுப்பு மிகவும் அதிகம். ஏனென்றால் தீண்டாமையை நியாயப்படுத்திக் கூறுவதற்குப் பொருத்தமான காரணம் எதுவும் இல்லை. தீண்டாதவர் தொழுநோயாளி என்றோ, ஒழுக்கத்தில் இழிந்தவர் என்றோ காரணங்கூறி அவரை விலக்கிவைக்க வேண்டும் என்று இந்து கூறமுடியாது. தமக்கும் தீண்டாதவருக்கும் இடையே சமய முரண்பாடு இட்டு நிரப்ப முடியாத பெரிய இடை வெளியாக உள்ளது என்றும் அவர் கூறமுடியாது. தீண்டாதவர்தான் இந்துக்களுடன் இணைந்து வாழ விரும்பவில்லை என்றும் அவர் காரணம் கூற முடியாது.

தீண்டாதவர்தள் விஷயம் அப்படியில்லை. அவர்களும் வேறொரு பொருளில் மற்றவர்களிடமிருந்து தனிமையாக உள்ள வெளிப்புற மக்களாக உள்ளனர். ஆனால், அவர்கள் தனியாக இருப்பது, பிரித்து வைக்கப்பட்டிருப்பது, அவர்களுடைய விருப்பத்தால் அல்ல. கலந்து வாழ விரும்பவில்லை என்பதற்காக அவர்கள் தண்டிக்கப்படவில்லை. இந்துக்களுடன் ஒன்றாகச் சேர்ந்து இருக்கவேண்டும் என்று விரும்புவதனால் அவர்கள் தண்டிக்கப்படுகிறார்கள். வேறு விதமாகச் சொன்னால், யூதர்களின் பிரச்சினையும் தீண்டாதோரின் பிரச்சினையும் இந்தப் பிரச்சினைகள் மற்றவர்களால் உருவாக்கப்பட்டவை என்ற அளவில் ஒரே மாதிரியானவை என்றாலும் - சாராம்சத்தில் வெவ்வேறு விதமானவை. யூதர்கள் தாமாகவே விரும்பித் தனித்து வாழ்கிறார்கள். தீண்டாதோர் கட்டாயமாகப் பிரித்து வைக்கப்பட்டுள்ளனர். தீண்டாமை சுமத்தப்பட்டுள்ளது, தெரிந்தெடுக்கப்பட்டதல்ல.

□□□

# இயல் - 2

## தீண்டாதோர் - அவர்களின் எண்ணிக்கை

தீண்டாதவர் என்ற நிலைமையின் கொடுமை எப்படிப்பட்டது என்பதைக் காண்பதற்கு முன், இந்தியாவில் தீண்டாதவர்களின் மொத்த மக்கள் தொகை என்ன என்று அறிந்து கொள்ளவேண்டும். இதற்கு நாம் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையைப் பார்க்கவேண்டும்.

இந்தியாவின் முதலாம் பொதுமக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1881-இல் நடத்தப்பட்டது. பல்வேறு சாதிகளையும் சமயப் பிரிவுகளையும் பட்டியலிட்டு இவற்றின் மக்கள் தொகைகளைக் கூட்டி இந்தியாவின் மொத்த மக்கள் தொகையைக் கணக்கிட்டதைத் தவிர 1881-இன் மக்கள் தொகைக கணக்கெடுப்பில் வேறெதுவும் செய்யப்படவில்லை. இந்துச் சாதிகளை மேல், கீழ் என்றோ, தீண்டத்தக்கவர், தீண்டாதவர் என்றோ வகைபபடுத்துவதற்கு அதில் முயற்சி செய்யப்படவில்லை. இந்தியாவின் இரண்டாம் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1891-இல் நடத்தப்பட்டது. இந்தக் கணக்கெடுப்பில்தான் முதல் முறையாக மக்கள் தொகையைச் சாதி, இனம் என்ற அடிப்படையில் வகைப்படுத்தி, மேல், கீழ் என்று தரவரிசைப்படுத்தவும் முயற்சி செய்யப்பட்டது. ஆனால் இது ஒரு முயற்சி மட்டுமே.

இந்தியாவின் மூன்றாம் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1901-இல் நடத்தப்பட்டது. இந்தக் கணக்கெடுப்பில் ஒரு புதிய வகைப்படுத்தும்

முறை பின்பற்றப்பட்டது. "நாட்டின் பொதுமக்கள் கருத்தினால் ஏற்கப்பட்ட சமூகவரிசைப்படி வகைப்படுத்தல்" என்பது இந்த முறை. சாதிகளின் அடிப்படையில் மக்கள் தொகையைக் கணக்கிடுவதைச் சாதி இந்துக்கள் கடுமையாக எதிர்த்தார்கள். சாதி பற்றிய கேள்வியை விட்டுவிட வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தினார்கள்.

இந்த எதிர்ப்பை மக்கள் தொகை ஆணையர் பொருட்படுத்தவில்லை. சாதி அடிப்படையில் மக்கள் தொகையைக் கணக்கிடுவது முக்கியமானதும் அவசியமானதும் ஆகும் என்று அவர் கருதினார். ஒரு சமூக அமைப்பு என்ற முறையில் சாதியின் நன்மை தீமைகள் என்னவாயிருந்தபோதிலும், சாதியை ஒரு முக்கிய அம்சமாகக் கொள்ளாமல், இந்தியாவில் மக்கள் தொகைப் பிரச்சினை பற்றி விவாதிக்க முடியாது என்று மக்கள்தொகை ஆணையர் வாதம் செய்தார். இன்னமும் 'சாதிதான் இந்திய சமூக அமைப்புக்கு அடிப்படையாக' உள்ளது. சாதியைப் பற்றிய பதிவுதான் 'இந்திய சமூகத்தில் பல்வேறு சமூக அடுக்குகளில் ஏற்படும் மாற்றங்களை அறிவதற்குச் சிறந்த வழிகாட்டியாகும்' . ஒவ்வொரு இந்துவும் ( இந்தச் சொல் இதன் மிக விரிவான பொருளில் பயன்படுத்தப்படுகிறது ) ஒரு சாதியில் பிறக்கிறார்; சாதிதான் அவருடைய சமய, சமூக, பொருளாதார, குடும்ப வாழ்க்கையைத் தொட்டில் முதல் சுடுகாடு வரையில் தீர்மானிக்கிறது. மேற்கு நாடுகளில் சமூகத்தின் பல்வேறு அடுக்குகளைத் தீர்மானிக்கும் விஷயங்களான செல்வம், கல்வி, தொழில் ஆகியவை பிறப்பினாலும், பரம்பரை முறையிலும் வருகின்ற அந்தஸ்துகளின் இறுக்கத்தைத் தளர்த்த உதவுகின்றன. இந்தியாவில், ஒரு ஆன்மிக, சமூக சமுதாயச் சார்பும் மரபு வழிப்பட்ட தொழிலும் மற்ற எல்லா அம்சங்களையும் விட முக்கியமாகின்றன. மேற்கு நாடுகளின் மக்கள்தொகைக் கணக்குகளில் மக்களைப் பொருளாதார அல்லது தொழில் அடிப்படையில் பல்வேறு பிரிவுகளாக வகைப்படுத்துவது மக்கள் தொகைப் புள்ளி விவரங்களை இணைத்துத் தொகுப்பதற்கு அடிப்படையாக அமைகிறது. இந்திய மக்கள் தொகைக் கணக்கில் சாதி, சமய வேறுபாடுகளே இது போன்ற அடிப்படையாக அமைக்கின்றன. ஒரு தேசிய அல்லது சமூக அமைப்பு என்ற முறையில் சாதியைப் பற்றி என்ன கருத்தைக் கொண்டாலும், அதைப் புறக்கணிப்பது பயனற்றது. ஒரு தனி மனிதனின் அதிகார பூர்வ மற்றும் சமூக நிலையை அடையாளங்காட்டும் முக்கிய அம்சங்களில் ஒன்றாகச் சாதி பயன்படுத்தப்படும் வரை, பத்தாண்டுகளுக்கு ஒரு முறை அதைக் கணக்கெடுப்பது விரும்பத்தகாத ஒரு அமைப்பை நிரந்தரமாக்க உதவுகிறது என்று கூறமுடியாது.

1901-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் தீண்டாதோரின் மொத்த மக்கள்தொகை பற்றிக் குறிப்பான எண்ணிக்கை எதுவும் கிடைக்கவில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன.

முதலாவதாக, யார் தீண்டாதவர் என்பதைத் தீர்மானிப்பதற்குக் குறிப்பான உரைகல் முறை எதுவும் பின்பற்றப்படவில்லை. இரண்டாவதாகப், பொருளாதாரத்திலும் கல்வியிலும் பின் தங்கிய, ஆனால் உண்மையில் தீண்டாதோர் அல்லாத ஒரு பிரிவு மக்கள், திண்டாதோருடன் சேர்த்துக் கணக்கிடப்பட்டார்கள்.

1911-இல் நடத்தப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஒரு படி முன்சென்றது. தீண்டாதோரைத், தீண்டத்தக்கவர்களிடமிருந்து தனியே பிரித்துக் காண்பதற்குப் பத்து நெறிமுறைகள் நிர்ணயிக்கப்பட்டன. இந்த நெறிமுறைகளின் படி, மக்கள்தொகைக் கணக்கெடுப்புக் கண்காணிப்பாளர்கள் பின்வரும் அடிப்படையில் தனியான சாதிகளையும் பழங்குடிகளையும் கணக்கெடுத்தார்கள்: (1) பிராமணர்கள் அனைவரிலும் உயர்ந்தவர்கள் என்பதை மறுப்பவர்கள்; (2) பிராமண குரு அல்லது அங்கீகரிக்கப்பட்ட வேறு இந்து குருவிடமிருந்து மந்திர உபதேசம் பெறாதவர்கள்; (3) வேதங்களின் அதிகாரத்தை மறுப்பவர்கள்; (4) பெரிய இந்துக் கடவுளர்களை வழிபடாதவர்கள்; (5) நல்ல பிராமணர்களின் சேவை அளிக்கப்படாதவர்கள்; (6) பிராமணப் புரோகிதர்களே இல்லாதவர்கள்; (7) சாதாரண இந்துக் கோவில்களில் உள்ளே அனுமதிக்கப்படாதவர்கள்; (8) தீட்டு ஏற்படுத்துபவர்கள்; (9) தங்களில் இறந்தவர்களைப் புதைப்பவர்கள்; (10) மாட்டிறைச்சி உண்பவர்கள், பசுவைப் புனிதமாகக் கருதாதவர்கள்.

தீண்டாதோரை இந்துக்களிடமிருந்து தனியாகப் பிரித்துக் கருதவேண்டும் என்று முஸ்லிம்கள் 1910 ஜனவரி 27-ஆம் தேதியிட்டு அரசுக்களித்த ஒரு மனுவில் கோரியிருந்தார்கள். நாட்டின் அரசியல் அமைப்புகளில் தங்களுக்கு அளிக்கப்படும் பிரதிநிதித்துவம் தீண்டத்தக்க இந்துக்களின் மக்கள் தொகை விகிதாசாரப்படி இருக்க வேண்டும் என்றும் இந்துக்கள் அனைவரையும் சேர்த்த மொத்த அடிப்படையில் இருக்கக் கூடாது என்றும் அவர்கள் கூறினார்கள். ஏனென்றால், தீண்டாதோர் இந்துக்களல்ல என்று அவர்கள் வாதிட்டார்கள்.

இது ஒரு புறம் இருக்கட்டும்.1911 மக்கள்தொகைக் கணக்கெடுப்பு தான் தீண்டாதோரின் மக்கள் தொகையைக் கண்டறிவதற்குத் தொடக்கமாக அமைந்தது. 1921 மற்றும் 1931 மக்கள் தொகைக் கணக்கெடுப்புகளிலும் இதே போன்ற முயற்சி தொடர்ந்தது.

இந்த முயற்சிகளின் விளைவாக,1930-இல் இந்தியாவுக்கு வந்த சைமன் கமிஷன் பிரிட்டிஷ் இந்தியாவில் தீண்டாதோரின் தொகை 4.45 கோடி என்று ஓரளவு நிச்சயமாகக் கூற முடிந்தது.

ஆனால், திடீரென்று 1932-இல், இந்துக்கள் சவால் விடும் மனப்போக்கை மேற்கொண்டு இந்தக் கணக்கை ஏற்க மறுத்தார்கள்.

அந்த ஆண்டில், சீர்திருத்தப்பட்ட சட்ட சபைகளுக்கான வாக்குரிமை பற்றி ஆராய்வதற்காக லோதியன் கமிட்டி இந்தியாவுக்கு வந்து, தனது ஆய்வுகளைத் தொடங்கிய போது இந்தியாவின் தீண்டாதோர் தொகை என்று சைமன் கமிஷன் கூறிய எண்ணிக்கையை இந்துக்கள் ஏற்க மறுத்தார்கள். சில மாகாணங்களில் இந்துக்கள், தீண்டாதோர் என்று யாருமே இல்லை என்று கூடக் கூறினார்கள். தீண்டாதோர் இருப்பதாக ஒப்புக்கொள்வதன் அபாயத்தை இந்துக்கள் இதற்குள் உணர்ந்து கொண்டதே இதற்குக் காரணம். இந்துக்கள் தாங்கள் அனுபவித்து வந்த பிரதிநிதித்துவத்தில் ஒரு பகுதியைத் தீண்டாதோருக்கு விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கும் என்பதே இந்த அபாயம்.

1941-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள முடியாது. ஏனென்றால், போர்க்காலத்தில் நடத்தப்பட்ட அந்தக் கணக்கெடுப்பு ஒரு சுமாரான மதிப்பீடேயாகும்.

கடைசியாக நடந்துள்ளது 1951-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு. பின்வரும் புள்ளி விவரங்கள் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆணையர் வெளியிட்ட அறிக்கையிலிருந்து எடுத்துத் தரப்படுகின்றன. இந்தியாவில் ஷெட்யூல் வகுப்பினரின் மக்கள் தொகை 513 லட்சம் என்று மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆணையர் தெரிவிக்கிறார்.

1951 மக்கள் தொகைக் கணக்கெடுப்புப்படி இந்தியாவின் மொத்த மக்கள் தொகை 3,567 லட்சம். இந்தக் கணக்கில், ஜலந்தரில் உள்ள மக்கள் தொகை பட்டியலிடும் அலுவலகத்தில் ஏற்பட்ட தீவிபத்தில் அழிந்து போன ஆவணங்களில் சம்பந்தப்பட்ட 1.35 லட்சம் பேர் மக்கள் தொகை சேர்க்கப்படவில்லை.

மொத்த மக்கள் தொகையான 3,567 லட்சத்தில் 2,949 லட்சம் மக்கள் கிராமப் பகுதிகளிலும், 618 லட்சம் மக்கள் நகரப் பகுதிகளிலும், வசிக்கிறார்கள். கிராமப் புறங்களில் உள்ள ஷெட்யூல் சாதி மக்களின் தொகை 462 லட்சம்; நகர்ப் புறங்களில் உள்ள ஷெட்யூல் சாதி மக்கள் 51 லட்சம் பேர்.

விவசாய மல்லாத தொழில் செய்யும் வகுப்பினர் மொத்த மக்கள் தொகையில் 1,076 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 132 லட்சம்.

முற்றிலுமாக அல்லது முதன்மையாகத் தங்களுக்குச் சொந்தமல்லாத நிலத்தில் பயிரிடுவோரும் அவர்களைச் சார்ந்தவர்களும் நாடு முழுவதிலும் 316 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 56 லட்சம்.

சாகுபடித் தொழிலாளர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் இந்தியா முழுவதிலும் 448 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 148 லட்சம்.

விவசாயமல்லாத தொழில் பிரிவுகளுக்கான புள்ளிவிவரங்கள் வருமாறு :

சாகுபடியல்லாத வேறு உற்பத்தித் தொழில்கள் : மொத்தம் 377 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 53 லட்சம்.

வர்த்தகம் : மொத்தம் 213 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 9 லட்சம்.

போக்குவரத்து : மொத்தம் 56 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 6 லட்சம்.

மற்ற சேவைகளும் பலவகைத் தொழில்களும் : மொத்தம் 430 லட்சம்; ஷெட்யூல் சாதிகளில் 64 லட்சம்.

ஷெட்யூல் சாதிகளின் மொத்த மக்கள் தொகையான 513 லட்சத்தில் 114 லட்சம் பேர் வட இந்தியாவில் (உத்தரப் பிரதேசம்) வசிக்கிறார்கள்; 128 லட்சம் பேர் கிழக்கு இந்தியாவில் (பீகார், ஒரிசா, மேற்கு வங்காளம், அசாம், மணிப்பூர், திரிபுரா) வசிக்கிறார்கள்; 110 லட்சம் பேர் தென்னிந்தியாவில் ( சென்னை, மைசூர், திருவாங்கூர் - கொச்சி, குடகு ) வசிக்கிறார்கள்; 31 லட்சம் பேர் மேற்கு இந்தியாவில் ( பம்பாய், சௌராஷ்ட்ரா, கட்ச் ) வசிக்கிறார்கள்; 76 லட்சம் பேர் மத்திய இந்தியாவில் ( மத்தியப் பிரதேசம், மத்திய பாரத், ஹைதராபாத், போபால், விந்தியப் பிரதேசம் ) வசிக்கிறார்கள்; 52 லட்சம் பேர் வட மேற்கு இந்தியாவில் ( ராஜஸ்தான், பஞ்சாப், பட்டியாலா மற்றும் கிழக்கு பஞ்சாப் சமஸ்தானங்கள் யூனியன், அஜ்மீர், தில்லி, பிலாஸ்புர், இமாசலப் பிரதேசம் ) வசிக்கிறார்கள்.

□□□

# இயல் - 3

## அடிமைகளும் தீண்டாதோரும்

இந்துக்கள், தீண்டாமையைப் பற்றி வெட்கப்படுவதற்குப் பதிலாக அதை ஆதரித்துப் பேசுகிறார்கள். இந்துக்கள் அடிமை முறையை ஒருபோதும் ஆதரிக்கவில்லை என்றும், ஆனால் மற்ற நாடுகளின் மக்கள் அதை மோசமானதல்ல என்றும் அவர்கள் வாதம் செய்கிறார்கள். காலஞ்சென்ற லாலா லாஜ்பத்ராய் ' மகிழ்ச்சியற்ற இந்தியா ' என்ற தமது புத்தகத்தில் இந்த வாதத்தைப் பயன்படுத்தியிருக்கிறார். இந்த எதிர்க் குற்றச்சாட்டை மறுத்துக் கூறுவதில் காலத்தை வீணாக்க அவசியம் இருந்திராது. ஆனால், இந்த வாதம் பொருத்தமானதாகத் தோன்றுவதனால் அடிமை முறையைவிட மோசமான எதையும் கண்டிராத வெளி உலகம், தீண்டாமை அடிமை முறையைவிட மோசமாக இருக்கமுடியாது என்பதை நம்பிவிடும் என்பதால் இதை மறுத்துக் கூறவேண்டியுள்ளது.

இந்துக்கள் கூறும் எதிர்க் குற்றச்சாட்டுக்கு முதல் பதில், அடிமை முறையை இந்துக்கள் ஆதரிக்கவில்லை என்பது முற்றிலும் உண்மையற்றது என்பதே. அடிமை முறை இந்துக்களின் மிகப் பழமையான அமைப்பாகும். இந்துக்களின் சட்டத்தை உருவாக்கிய மனு இதை அங்கீகரித்திருக்கிறார். அவருக்குப் பின் வந்த ஸ்மிருதி ஆசிரியர்கள் இதைப் பற்றி விரிவாகக் கூறி முறைப்படுத்தியிருக்கிறார்கள். அடிமை முறை, இந்துக்களிடையே ஏதோ ஒரு பண்டைக் காலத்தில் இருந்த அமைப்பு அல்ல. இந்திய வரலாறு நெடுகிலும் 1843 வரை

அடிமை முறை செயலில் இருந்து வந்தது. அந்த ஆண்டில் பிரிட்டிஷ் அரசு, சட்டத்தின் மூலம் அடிமை முறையை ஒழித்திராவிட்டால் இன்று வரையும் கூட அது நீடித்திருக்கும்.

அடுத்து, அடிமை முறை, தீண்டாமை ஆகியவற்றின் தன்மை பற்றிய எதிர்க்குற்றச் சாட்டுக்குப் பதில் கூறுவதற்குத் தீண்டாமையையும், பண்டைக் கால ரோமிலும், நவீன கால அமெரிக்காவிலும் வழக்கத்திலிருந்த அடிமை முறையையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

ரோமப் பேரரசில் அடிமைகளின் நிலை நடைமுறையில் எப்படி இருந்தது ? இதைப்பற்றி நான் அறிந்த மிகச் சிறப்பான வர்ணனை திரு.பாரோ எழுதிய ' ரோமப் பேரரசில் அடிமை முறை ' என்ற புத்தகத்தில் காணப்படுகிறது. திரு. பாரோ கூறுகிறார்:[1]

"இதுவரை, வீடுகளில் அடிமைகளை வைத்திருக்கும் முறையின் கொடூரமான அம்சங்கள் விவரிக்கப்பட்டன. மற்றுமொரு அம்சமும் உள்ளது. பெரும் எண்ணிக்கையில் ஆட்களைக் கொண்ட வீடுகள் சாதாரணமாகக் காணப்படுபவை என்று இலக்கியம் காட்டுகிறது. ஆனால், இது விதிவிலக்கானது தான். பெரும் எண்ணிக்கையில் அடிமைப் பணியாளர்கள் இருந்தார்கள் என்பதில் சந்தேகமில்லை; இவர்கள் பொதுவாக ரோம் நகரில் காணப்பட்டார்கள். இத்தாலியிலும் மாகாணங்களிலும் பெருமைக்காகக் காட்சி காட்டுவதற்கு அதிகத் தேவை இருக்கவில்லை. மாளிகையின் பணியாளர்களில் பலர், நிலமும் விளைபொருள்களும் தொடர்பான உற்பத்தி வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டார்கள். மேற் பார்வையாளருக்கும் அடிமைக்கும் இடையிலான பழமையான உறவுமுறை அங்கும் இருந்தது. ஆனால் பல சமயங்களில் அடிமை ஒரு சகதொழிலாளியாக இருந்தார். பிளினி, தமது பணியாளர்களிடம் காட்டிய அன்பு பற்றி நாம் நன்றாக அறிவோம். தமது சொந்த நேர்மை உணர்ச்சியைக் காட்டுவதற்காகவோ, வருங்காலத் தலை முறையினர் தமது கடிதங்களைப் படிப்பார்கள் என்று நம்பி அவர்களிடம் நல்ல பெயர் பெறவேண்டும் என்ற எண்ணத்துடனோ அவர் தமது அடிமைகளின் உடல் நலக்குறைவு பற்றியும் அவர்களின் மரணம் பற்றியும் தமது மனவேதனையை வெளிப்படுத்தவில்லை.

( பிளினியின் ) குடும்ப வீடு அடிமைகளின் குடியரசு. பிளினி தமது அடிமைகளை நடத்திய விதம் பற்றிக் கூறியிருப்பது சில சமயங்களில் பொதுவான நடைமுறையிலிருந்து மிகவும் முன்னேறியதாக உள்ளதால் அதைச் சான்றாக மதிக்க முடியாது என்று கருதப்படுகிறது. இவ்வாறு கருதுவது சரியல்ல.

---

1. ரோமானியப் பேரரசில் அடிமைத்தனம், பக். 47-49.

பெருமையாகக் காட்டிக் கொள்வதற்காகவும் உண்மையான இலக்கிய ஆர்வத்தினாலும் செல்வம் மிக்க குடும்பங்கள் தங்கள் வீடுகளில் இலக்கியத்திலும் கலைகளிலும் பயிற்சி பெற்ற அடிமைகளை வைத்திருந்தார்கள். கிளாவிஸிஸெஸ் சேபினஸ், தம்மிடம் ஹோமர், ஹெஸியாயிட், மற்றும் ஒன்பது கவிஞர்களின் கவிதைகளை மனப்பாடமாக ஒப்பிக்கப் பயிற்சி பெற்ற பதினொரு அடிமைகளை வைத்திருந்ததாக ஸெனெடா கூறுகிறார். ' புத்தக அலமாரி வைத்துக் கொள்வது செலவு குறைவாயிருக்கும் ' என்று முரட்டுத்தனமாகப் பேசும் நண்பர் ஒருவர் கூறினார். " அப்படியில்லை" என்று அவருக்குப் பதில் கூறப்பட்டது. இவ்வாறு தவறான முறையில் பயன்படுத்தப்பட்டது ஒரு புறம் இருந்தாலும், அச்சுக்கலை தோன்றாத அந்தக் காலத்தில் கல்வி கற்ற அடிமைகள் வீட்டுக்கு அவசியமாயிருந்திருக்க வேண்டும்....வழக்கறிஞர்கள், பொழுது போக்காகக் கவிதை எழுதுவோர், தத்துவ அறிஞர்கள், கல்விகற்ற கனவான்கள் முதலானவர்களுக்குப் படி எழுதுபவர்கள், வாசிப்பவர்கள்,செயலாளர்கள் ஆகியோர் தேவைப்பட்டிருப்பார்கள். இத்தகைய ஆட்கள் இயல்பாகப் பன்மொழித் திறமையும் பெற்றிருந்தார்கள். இருபது வயதில் இறந்து போகும் ஒரு ' புத்தக மனிதன் ' தாம் கிரேக்கமும் லத்தீனும் அறிந்தவர் ' என்று பெருமையுடன் கூறிக்கொள்கிறார், சொல்வதைக் கேட்டு எழுதுபவர்கள் சாதாரணமாயிருந்தனர். தனியார் மற்றும் பொது நூலகங்களில் நூலகர்கள் இருந்தனர்....பேரரசில் சுருக்கெழுத்து பரவலாகப் பயன்படுத்தப்பட்டது. இந்தப் பணிக்கென அடிமைகள் அமர்த்தப்பட்டார்கள். வாக்கு வன்மை பெற்ற பேச்சாளர்கள், இலக்கண அறிஞர்கள் ஆகியோரின் உரைகள் பலவற்றை ஸ்னெட்டோனியஸ் ஒரு புத்தகமாகத் தொகுத்துள்ளார். வெரியஸ் ஃப்ளாக்கஸ் என்பவர் ஆஸ்டஸின் பேரர்களுக்கு ஆசிரியராயிருந்தார். அவர் இறந்தபின் அவருக்குச் சிலை வைத்துக் கௌரவித்தார்கள். ஸெரிபோனியஸ் அபியோடிஸியஸ் என்பவர் ஆர்பிலியஸின் அடிமையாகவும் மாணவராகவும் இருந்தார்; பின்பு அவர் ஸெரிபேணியாவால் விடுதலை செய்யப்பட்டார். ஹைஜினஸ் என்பவர் அவருக்குப்பின், அவரிடம் அடிமையாயிருந்து விடுதலைபெற்ற ஜூலியஸ் மாடெஸ்டஸ் அந்தப் பதவிக்கு வந்தார். அடிமையான தத்துவ அறிஞர் ஒருவரின் வரலாற்றை எழுதிய சுதந்திர மனிதர்கள் பற்றியும் நாம் கேள்விப்படுகிறோம். இந்த அடிமை அறிஞர், தமது எஜமானருடனும் அடிமைகளின் நண்பர்களுடனும் வாதங்கள் நடத்த ஊக்குவிக்கப்பட்டார். சுதந்திரம் பெற்ற அடிமைகள் மருத்துவர்களாகப் பணிபுரிந்தது பற்றியும் கல்வெட்டுக்கள் உள்ளன. இவர்களில் சிலர் குறிப்பிட்ட மருத்துவத் துறைகளில் தனித் தேர்ச்சி பெற்றவர்கள்.

இத்தகையவர்கள் பெரிய வீடுகளில் அடிமைகளாக இருந்தபோது பயிற்சி பெற்றவர்கள என்று சில உதாரணங்களிலிருந்து தெரிகிறது. இவர்கள விடுதலை பெற்றபின் தங்கள் துறைகளில் மிக உயர்ந்த நிலையை அடைந்து, மிக அதிகமாகக் கட்டணம் வாங்குபவர்கள் என்ற பெயரைப் பெற்றனர்."

சமூகத்தில் சில பிரிவினரின் ரசனைகளுக்கு நடனக் கலைஞர்கள், பாடகர்கள், இசைக் கலைஞர்கள், பல கலைகள் நிகழ்த்துவோர், உடற்பயிற்சிப் பயிற்சியாளர்கள், உடல் பிடிப்பவர்கள் போன்ற பலருடைய சேவைகள் வேண்டியிருந்தன. இத்தகைய பணிகள் எல்லாவற்றையும் செய்த அடிமைகள் இருந்தனர். இவர்கள் இந்தத் துறைகளில் புகழ்பெற்ற ஆசிரியர்களிடம் பயிற்சி பெற்றிருந்தனர்.[1]

ஆகஸ்டஸின் காலம் வர்த்தகமும் தொழில்களும் விரிவடையத் தொடங்கிய காலம்....அடிமைகள் ( கலைகளிலும் கைத் தொழில்களிலும்) முன்பும் ஈடுபடுத்தப்பட்டனர்; ஆனால் திடீரென்று வர்த்தகத்தில் ஏற்பட்ட வளர்ச்சியினால்...முன்பு தேவைப்படாத அதிக எண்ணிக்கையில் அவர்களை ஈடுபடுத்த வேண்டியிருந்தது, ரோமானியர்கள் பல்வேறு வர்த்தக, தொழில் முயற்சிகளில் மிகத் தாராளமாகவும் திறந்த முறையிலும் ஈடுபட்டார்கள். ஆயினும் வர்த்தக நடவடிக்கைகள் மிகவும் விரிவடைந்ததால் அவர்களுக்கு முகவர்கள் தேவைப்பட்டார்கள். இத்தகைய முகவர்களாகப் பெரும்பாலும் அடிமைகளே செயல்பட்டனர்....( இவ்வாறு இருந்ததற்கு ) காரணம் என்னவென்றால், அடிமைத் தளைகள் ( தளர்த்தக் கூடியனவாக உள்ளன). ( இவற்றை ) அடிமையாயிருப்பவர் செல்வத்தையும் சுதந்திரத்தையும் பெறமுடியும் என்ற நம்பிக்கையுடன் வேலை செய்ய ஊக்குவிக்கும் வகையில் தளர்த்தவும், அடிமையின் தவறான செயலால் எஜமானருக்கு இழப்பு ஏற்படாமல் உத்தரவாதம் செய்யும் வகையில் இறுக்கமாக்கவும் முடியும்.

வர்த்தகத்தில், ஓர் அடிமை தனது எஜமானருடன் அல்லது மற்றொருவருடன் ஒப்பந்தம் செய்து கொள்வது சாதாரணமாகக் காணப்பட்டது. இவ்வாறாகச் செய்யப்பட்ட வேலையும், ஈட்டப்பட்ட லாபமும் கணிசமாக இருந்தன......அடிமைக்கு நிலத்தைக் குத்தகைக்கு விடுவது பற்றி முன்பே கூறப்பட்டுள்ளது.... தொழில்களிலும் இதே முறை பல்வேறு வடிவங்களில் வழக்கத்தில் இருந்தது. எஜமானர் ஒரு வங்கியை அல்லது கப்பலைப் பயன்படுத்தும் தொழிலை அடிமையிடம் குத்தகைக்குக் கொடுக்கலாம். இதற்கு ஈடாக அவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகை கொடுக்கப்படலாம் அல்லது அடிமைக்கு விகித அடிப்படையிலான தொகை கொடுக்கப்படலாம்.[2]

1. ரோமானியப் பேரரசில் அடிமைத்தனம், ப. 63.

2. உரோமானியப் பேரரசில் அடிமைத்தனம், பக் 101-102.

அடிமை சம்பாதிக்கும் பொருள் சட்டப்படி அவனுடைய சொந்தப் பணம் ஆகும். அதைச் சேமித்துப் பல வழிகளில் பயன்படுத்தலாம். பலர் இதை உணவுப் பொருள்களுக்கும் உல்லாசத்திற்கும் செலவிட்டிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்தத் தனிப்பணம் ஏதோ கொஞ்சம் கையில் சேர்ந்தது, கரைந்து போயிற்று என்று சொல்லும் படியாக இருக்கவில்லை. எஜமானருடைய வர்த்தகத்தில் அவருக்கு லாபம் ஈட்டிக் கொடுக்கத் தெரிந்த அடிமை தன்னுடைய பொருளையும் எப்படி லாபமான முறையில் பயன்படுத்தலாம் என்பதை அறிவான். பல சமயங்களில் அவன் தன் எஜமானரின் வர்த்தகத்தில் அல்லது முற்றிலும் வேறான தொழில் முயற்சியில் முதலீடு செய்தான். அவன் தன் எஜமானருடனேயே வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். அப்போது அவன் எஜமானரிடமிருந்து முற்றிலும் தனிப்பட்ட மனிதனாகக் கருதப்பட்டான். மூன்றாம் மனிதர் ஒருவருடனும் அடிமை, ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். அவன் தன்னுடைய சொத்துக்களையும் நலன்களையும் மேலாண்மை செய்வதற்கு முகவர்களை வைத்துக் கொள்ளலாம். இவ்வாறாக அடிமையின் தனிப்பணத்துடன் சம்பந்தப்பட்டவையாக நிலம், வீடுகள், கடைகள் ஆகியவை மட்டுமின்றி உரிமைகளும் பாத்தியதைகளும் காணப்பட்டன.

வர்த்தகத்தில் அடிமைகள் எண்ணற்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்: பலர் கடைகள் வைத்திருந்தார்கள்; இவற்றில் உணவு, ரொட்டி, இறைச்சி, உப்பு, மீன், மது, காய்கறிகள், தேன், தயிர், பன்றியிறைச்சி, வாத்துகள், மீன் முதலானவை விற்கப்பட்டன. வேறு சில கடைகளில் துணி, காலணிகள், அங்கிகள் முதலானவை விற்கப்பட்டன.

ரோம் நகரில் இவர்கள் தங்கள் தொழில்களை மேமிமஸ் வட்டம், ட்ரைஜெமிமஸ் வாசல், எஸ்க்விலைன் மார்க்கெட், ( காவோலியன் குன்றின்மேல் உள்ள ) பெரிய அங்காடி, முதலான இடங்களில் நடத்தினார்கள்[1]

அடிமைகளான செயலாளர்களும் முகவர்களும் தங்களுடைய எஜமானர்கள் சார்பில் எந்த அளவுக்குச் செயல்பட்டார்கள் என்பதை பாம்பேயில் ஸீஸிலியஸ் ஜகண்டஸ் என்பவருடைய வீட்டில் கண்டெடுக்கப்பட்ட ரசீதுகளிலிருந்து தெளிவாகத் தெரிகிறது.[2]

அரசு தனக்குச் சொந்தமாக அடிமைகளை வைத்திருந்தது என்பது ஆச்சரியமல்ல; ஏனென்றால், போர், அரசு சம்பந்தப்பட்ட விஷயம் ஆதலால், போரில் சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் அரசின்

1. மேலது, ப.105.

2. ரோமானியப் பேரரசில் அடிமைத்தனம், ப.186.

உடைமையாகவே இருக்கலாம். ஆனால் அரசின் அடிமைகள் எத்தகைய குறிப்பிடத்தக்க முறையில் பயன்படுத்தப்பட்டார்கள் என்பதும், அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த தனிப்பட்ட சமூக அந்தஸ்தும் மிகுந்த ஆச்சரியம் அளிக்கின்றன....

"பொது அடிமை' என்றால் பேரரசின் கருத்தில் அரசு தன்னுடைய பல பணிகளில் ஈடுபடுத்துகின்ற அடிமைகள் என்று பொருள்பட்டது. அவ்வாறு அழைக்கப்படுபவருக்கு ஒரு குறிப்பிட்ட அரசுப்பணி இருப்பதையும் அது குறிப்பிட்டது. அரசின் அடிமைகள், நகரங்களின் அடிமைகள், பல சமயங்களில் ஒரு சமூக அந்தஸ்து இருப்பதையும் அது குறிப்பிட்டது. அரசின் அடிமைகள், நகரங்களின் அடிமைகள், ஸீஸரின் அடிமைகள் ஆகியோர் செய்த பணிகளில், இப்போது அரசு நிர்வாகப் பணித்துறையின் மேற் பிரிவின் ஒரு பகுதியினரும் கீழ்ப்பிரிவினர் அனைவரும், நகரசபைகளின் பணியாளர்களும் செய்கின்ற மூளை உழைப்பு, உடல் உழைப்பு ஆகிய எல்லாப் பணிகளும் அடங்கியிருந்தன...( கருவூலத்தின் ) சார்நிலைப் பணிகளில் எழுத்தர்களாகவும் நிதி அதிகாரிகளாகவும் பணிபுரிந்த பலர் அடிமைகளும், விடுதலை பெற்ற அடிமைகளும் ஆவார்கள். இவர்கள் செய்த பணிகள் மிகப் பலவகையாக இருந்திருக்க வேண்டும்... நாணய சாலை....இதன் தலைவராக 'நைட்' எனப்பட்ட உயர்நிலைப் போர்வீரர் இருந்தார்; நாணயம் அச்சிடும் செயல் முறையின் பொறுப்பாளராக.... விடுதலைபெற்ற அடிமை ஒருவர் இருந்தார்; அவருக்குக் கீழே விடுதலை பெற்ற அடிமைகளும், அடிமைகளும் பணி செய்தார்கள்.... ஆயினும் அரசுப் பணியின் ஒரு பிரிவிலிருந்து, மிக நெருக்கடியான ஓரிரண்டு சந்தர்ப்பங்களில் தவிர, அடிமைகள் கண்டிப்பாக விலக்கப்பட்டிருந்தார்கள். ராணுவத்தில் சேர்ந்து போர் புரிய அவர்கள் அனுமதிக்கப்படவில்லை; அவர்கள் கௌரவத்துக்குத் தகுந்தவர்களாகக் கருதப்படாததே இதற்குக் காரணம். வேறு காரணங்களும் இருந்தன என்பதில் சந்தேகமில்லை. பெரும் எண்ணிக்கையில் அடிமைகளுக்கு ஆயுதப் பயிற்சி அளிப்பது ஆபத்தான பரிசோதனை ஆகிவிடும். அடிமைகள் போர்முனையில் அரிதாயிருந்த போதிலும், போர்முனையின் பின்னணியில் வேலைக்காரர்களாகவும், உணவு வழங்குதல் போக்குவரத்து ஆகிய பிரிவுகளில் பணியாளர்களாகவும் பெரும் எண்ணிக்கையில் எப்போதும் காணப்பட்டனர். கடற்படைக் கப்பல்களில் அடிமைகள் பணி செய்வது சாதாரணமாயிருந்தது."

1. மேலது, பக். 139-1 7.

## II

இப்போது அமெரிக்காவில் நீக்ரோக்கள் சட்டத்தின் பார்வையில் அடிமைகளாயிருந்த காலத்தில் அவர்களின் நடைமுறை நிலைமை எவ்வாறு இருந்தது என்று பார்க்கலாம். நீக்ரோக்களின் நிலைமை பற்றி நன்றாக விளக்கும் சில விவரங்கள் கீழே தரப்படுகின்றன:[1]

"புரட்சியின் போது வெள்ளையரும் கருப்பரும் ஆகிய கடற்படை வீரர்கள் ஒன்றாகப் போரிட்டு, ஒன்றாக உணவு உண்டனர் என்று லஃபாயத் கூறியிருக்கிறார். வட கரோலனாவின் கிரான்வில் கவுண்ட்டியில், அசல் நீக்ரோவான ஜான் சேவிஸ் என்பவர் வெள்ளை மாணவர்களுக்குத் தனியான பள்ளிக்கூடம் ஒன்றை நடத்தி வந்தார். பிரின்ஸ்டன் பக்கலைக் கழகத்தில் கல்விகற்ற அவர் உள்ளூர் மதகுருக்கள் சபையின் உரிமப்பட்டயம் பெற்று, அம்மாநிலத்தில் வெள்ளையர்களைக் கொண்ட திருச்சபைகளில் உபதேச உரைகள் நிகழ்த்தி வந்தார். அவருடைய மாணவர்களில் ஒருவர், வட கரோலினாவின் ஆளுநர் ஆனார்; மற்றொருவர், மாநிலத்தின் மிகப் பிரபலமான விக் கட்சி செனட் உறுப்பினர் ஆனார். அவருடைய மாணவர்களில் இருவர், வட கரோலினாவின் தலைமை நீதிபதியின் மகன்கள். மாநிலத்தின் மிகப்பெரிய ராணுவப் பயிற்சிக் கழகத்தை நிறுவியவரின் தந்தை அவரது பள்ளியில் படித்து அவரது வீட்டில் உணவு உண்டு வந்தார்.... அடிமைகளின் உழைப்பு எல்லாவிதமான வேலைகளிலும் பயன்படுத்தப்பட்டது. நீக்ரோக்களில் அதிக அறிவுத் திறன் உள்ளவர்கள் கைத்தொழில்களில் பயிற்சி அளிக்கப்பட்டு, அந்தத் தொழில்களில் பயன்படுத்தப்பட்டார்கள், அல்லது அவர்களது பணி மற்றவர்களுக்குக் குத்தகைக்கு விடப்பட்டது.

தொழிலாளர்களை வேலைக்கமர்த்துவோர் சாதாரணத் தொழிலாளர்களைவிட அடிமைத் தொழிலாளர்களை அமர்த்திக் கொள்வதற்கு இரண்டு மடங்கு பணம் கொடுத்தார்கள். தலைமைக் கைத்தொழிலாளர்கள் தங்கள் கீழ் வேலைசெய்யும் தொழிலாளர்களின் உரிமையாளர்களாயிருந்தனர். இந்த முறை மேலும் வளர்ச்சி பெற்ற போது, சில தலைமைக் கைத்தொழிலாளர்கள் தங்களுடைய அடிமைத் தொழிலாளர்களின் கீழ் வேலை செய்வதற்கு வேறு அடிமைகளை அமர்த்தினார்கள். பல அடிமைக்கைத்தொழிலாளர்கள் தங்களிடம் எதிர்பார்க்கப்பட்டதற்கு அதிகமாகச் செய்த வேலைக்காகக் கூடுதலாக அனுமதிக்கப்பட்ட பணத்தைச் சேமித்து அதை விலையாகக் கொடுத்துத் தங்கள் சுதந்திரத்தை வாங்கினார்கள்."

1. சார்லஸ் சி. ஜான்சன் அமெரிக்க நாகரிகத்தில் நீக்ரோவர்.

"ஓடிப்போன அடிமைகள் பற்றியும் அடிமை விற்பனை பற்றியும் கொடுக்கப்பட்ட விளம்பரங்கள் அவர்களின் திறமைக்குச் சான்று கூறுகின்றன. அவர்கள், ஏழை வெள்ளைத் தொழிலாளருக்குச் சமமாக அல்லது கூடுதலாக ஊதியம் பெற்றார்கள். தங்களுடைய உடமையாளரின் செல்வாக்கினால் மிக நல்ல வேலைகளைப் பெற்றார்கள். ஜார்ஜியா மாநிலம் ஆதென்ஸில் கொத்து வேலைக்கும் தச்சு வேலைக்கும் ஒப்பந்தம் எடுப்பவர்கள் நீக்ரோ தொழிலாளர்களுக்கு முன்னுரிமை கொடுப்பதை நிறுத்தவேண்டும் என்று 1838 - இல் அவர்களிடம் மனுக் கொடுக்கப்பட்டது. "வெள்ளையர்கள் தான் இந்த நாட்டின், இந்த மாநிலத்தின், உண்மையான, சட்டபூர்வமான, அறநெறிப்படியான சொந்தக்காரரார்கள். இந்த உரிமை அவர்களுக்கு உலகம் உருண்டையானது என்ற உண்மையைக் கண்டறிந்து கூறிய கோபர்னிகஸ், கலீலியோ ஆகிய வெள்ளையர்களிடமிருந்து கிடைத்திருக்கிறது; இந்த உண்மையின் அடிப்படையில் மற்றொரு வெள்ளையர் கொலம்பஸ், உலகில் புதிய நிலப்பகுதிகளைக் கண்டுபிடிப்பதற்கு மேற்கு நோக்கிக் கடற்பயணம் செய்யலாம் என்று உணர்ந்தார். எனவே இந்தக் கண்டம் வெள்ளையர்களாலேயே கண்டுபிடிக்கப்பட்டது; இந்த வெள்ளையர்களுக்குத்தான் நீங்கள் வேலை கொடுக்க மறுத்து அவர்களுடைய பசியினால் வாடும் குடும்பங்களுக்கு உணவும் உடையும் கிடைக்காமல் செய்கிறீர்கள். அதுமட்டுமின்றி நீக்ரோக்களுக்கே நீங்கள் ஆதரவளிக்கிறீர்கள்."

அட்லாண்டாவில் 1858-இல் இரண்டு வெள்ளையந்திரப் பணியாளர்கள் கொடுத்த ஒரு மனுவில் தங்கள் பகுதிகளில் வசிக்கும் தலைமைத் தொழிலாளர்களின் கருப்பு அடிமைத் தொழிலாளர்களிடமிருந்து தங்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். அடுத்த ஆண்டிலேயே சில வெள்ளையர்கள் தங்கள் மத்தியில் ஒரு நீக்ரோ பல்வைத்தியர் இருப்பதையும் தொழில் செய்வதையும் நகர சபை சகித்துக் கொள்கிறது என்று புகார் கூறினார்கள். 'எங்களுக்கும் சமுதாயத்திற்கும் நியாயம் செய்வதற்கு இதை நிறுத்தியாகவேண்டும். அட்லாண்டா நகரவாசிகளான நாங்கள் உங்களிடம் நீதி கேட்கிறோம்." ஜார்ஜியா மாநிலம் ரிச்மண்ட் கவுண்டியில் 1819-இல் சுதந்திரமான நீக்ரோக்கள் பற்றி நடத்தப்பட்ட கணக்கெடுப்பில் அவர்கள் தச்சுவேலை, முடிதிருத்தல், படகு பழுது பார்த்தல், குதிரைச் சேணம் செய்தல், நூல் நூற்றல், இயந்திரங்களில் மாவரைத்தல், துப்பாக்கி உறைகள் தைத்தல், நெசவு, மரம் அறுத்தல், நீராவிப் படகுக்கு வழிகாட்டிச் செலுத்துதல் போன்ற வேலைகளைச் செய்வதாகத் தெரியவந்தது. அமெரிகக் குடியரசுத் தலைவர் மன்ரோ பதவி ஏற்றபோது அணிந்திருந்த

காலணிகளை நீக்ரோ காலணித் தொழிலாளா ஒருவர் கையினால் செய்து கொடுத்திருந்தார். மாண்டிஸெலோவில், தாமஸ் ஜெபர்ஸனின் வீட்டில் ஓடு பாவிய தரையை நேர்த்தியாக உருவாக்கிய அடிமையின் தொழில் திறமையை ஹாரியட் மார்ட்டினோ வியந்துரைத்தார். பழைய பருத்தித் தோட்டத்தின் அந்தப் பெரிய வீட்டில் நீக்ரோ கைவினைஞர்களின் கைத்திறனின் அடையாளங்கள் இன்னமும் காணப்படுகின்றன. தோட்டம் அமைப்பதற்கு முன் அங்கு நின்ற ஓக் மரங்களை வெட்டியெடுத்து அவற்றின் கட்டைகளை இணைத்து அமைக்கப்பட்ட வலுவான மாளிகைகள் இன்றும் நிற்கின்றன. நூல் நூற்பதிலும் நெசவிலும் தேர்ச்சி பெற்ற நீக்ரோ பெண்கள் ஆலைகளில் வேலை செய்தார்கள். ஜார்ஜியா மாநிலம் ஆதன்ஸில் அவர்கள் வெள்ளை இனப் பெண்களுடன் வேலை செய்வதையும், அதைப்பற்றி ஆட்சேபமோ வெறுப்போ காட்டப்படவில்லை என்பதையும் பக்கிங்ஹாம் 1839-இல் பார்த்தார். தென்பகுதியில் உள்ள நீக்ரோ கைத்தொழிலாளர்கள் - அடிமைகள், சுதந்திரமானவர்கள் ஆகிய இருசாராருமே - வட பகுதியில் உள்ள தங்கள் சகோதரர்களைவிட நல்ல நிலையில் இருந்தார்கள். 1856-இல் பிலடெல்பியாவில் இருந்த 1637 நீக்ரோ கைத்தொழிலாளர்களுக்கு எதிரான பாரபட்சம் காரணமாக அவர்களில் மூன்றில் இரண்டு பங்குக்கும் குறைவானவர்களே தங்கள் தொழில்களைச் செய்ய முடிந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே அமெரிக்காவுக்குப் பெரும் எண்ணிக்கையில் வந்து கொண்டிருந்த ஐரிஷ் மக்கள், நீக்ரோ அடிமைத்தனத்திற்கு அடிப்படையாகக் கொடுத்துப் பயன்படுத்தப்பட்டனர். அவர்களுக்குச் சாதகமாக இவ்வாறு கூறப்பட்டது: ‘ஐரிஷ் கத்தோலிக்கர் ஒருவர் தாம் எந்த நிலையில் வைக்கப்படுகிறாரோ அதைவிட மேலே உயர்வதற்கு முயலமாட்டார்; ஆனால், நீக்ரோ, பல சமயங்களில் முயற்சி செய்து வெற்றி பெற்றுவிடுகிறார்.’ பியூரிட்டனான ஆலிவர் க்ராம்வெல், கருப்பு அடிமைகள் வர்த்தகம் நடந்து கொண்டிருந்த காலத்தில், ட்ரோகேடா படுகொலையில் கொல்லப்படாத ஐரிஷ் மக்கள் அனைவரையும் பார்படாஸில் உள்ளவர்களுக்கு விற்றுவிடவில்லையா? நியூயார்க்கிலும் பென்சில்வேனியாவிலும் உள்ள சுதந்திரமானவர்களும் ஓடிவந்த அடிமைகளுமான நீக்ரோக்கள் இந்த மக்களுடன் எப்போதும் போராடிக் கொண்டிருந்தார்கள். நியூயார்க்கில் நடந்த கட்டாய ராணுவ சேவைக் கழகங்களில் இந்தப் பகைமை, மிகுந்த வன்முறையாக வெளிப்பட்டது. இந்த ஐரிஷ் மக்கள் சிற்றாள் வேலை முதலான சாதாரண வேலைகளைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். இந்த வேலைகளில் நீக்ரோக்கள் இடம் பெறும் முயற்சி ஒவ்வொன்றையும் அவர்கள் எதிர்த்தார்கள். இந்த முயற்சிகள் அமெரிக்காமீது தங்களுக்கிருந்த லேசான பிடிப்புக்கும், வாழ்க்கை

ஆதாரமான தொழிலுக்கும் அபாயமானவை என்று அவர்கள் கருதினார்கள்.

ரோமானிய அடிமை, அமெரிக்க நீக்ரோ அடிமை ஆகியோரின் நடைமுறை நிலைமை இவ்வாறு இருந்தது. இந்தியாவில் உள்ள தீண்டாதோரின் நிலைமையில், ரோமானிய அடிமையின் நிலைமையுடனும் அமெரிக்க நீக்ரோ அடிமையின் நிலைமையுடனும் ஒப்பிடக் கூடியதாக ஏதேனும் இருக்கிறதா? தீண்டாதோரின் நிலைமையையும் ரோமப் பேரரசில் அடிமையின் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு அதே காலகட்டத்தை எடுத்துக் கொள்வது தவறாகாது. ஆயினும் ரோமப் பேரரசில் இருந்த அடிமைகளின் நிலைமையுடன் இப்போது உள்ள தீண்டாதோரின் நிலைமையை ஒப்பிட்டுப் பார்க்க நான் இணங்குகிறேன். இது ஒரு புறம் மிக மோசமானதையும் மறுபுறம் மிகச் சிறந்ததையும் எடுத்து ஒப்பிடுவதாகும். ஏனென்றால் இப்போதைய காலம் தீண்டாதோரின் பொற்காலம் என்று கருதப்படுகிறது. தீண்டாதோரின் நடைமுறை நிலைமை அடிமைகளின் நிலைமையுடன் ஒப்பிடும் போது எவ்வாறு உள்ளது ? ரோமானிய அடிமைகளைப் போல எத்தனைத் தீண்டாதோர் நூலகர்களாகவும், சொல்லுவதை எழுதுவோராகவும், சுருக்கெழுத்தாளர்களாகவும் வேலையில் உள்ளனர் ? ரோம் நகரில் அடிமைகள், பேச்சாளர்கள், இலக்கண ஆசிரியர்கள், தத்துவ அறிஞர்கள் போன்ற அறிவுத் துறைப் பணிகளில் அமர்த்தப்பட்டது போல எத்தனைத் தீண்டாதவர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர் ? ரோமில் அடிமைகள் ஈடுபடுத்தப்பட்டது போன்ற பணிகளில் தீண்டாதவர்கள். எத்தனைப் பேர் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர் ? எந்த இந்துவும் இவற்றில் எந்தக் கேள்விக்காவது உடன்பாடான பதில் கூற முடியுமா ? அடிமைகள் மிகப் பெருமளவில் இடம்பெற்றிருந்த இந்தப் பணிகள் எல்லாவற்றிலுமிருந்து தீண்டாதோர் முற்றிலுமாகத் தள்ளிவைக்கப்பட்டுள்ளனர். தீண்டாமையை நியாயப்படுத்துவதற்கு இந்துக்கள் சொல்லும் வாதங்கள் எவ்வளவு பலனற்றவை என்பதை இது நிரூபிக்கிறது. இதில் இரங்கத்தக்கது என்னவென்றால், பெரும்பாலானவர்கள், ஒரு மனிதன் அல்லது ஒரு வகுப்பினர் மற்றொரு மனிதனின் வாழ்வு அல்லது மரணத்திற்கான அதிகாரத்தைச் சட்டப்படி பெற்றிருப்பது தவறு என்று கூறி, அடிமை முறையைக் கண்டனம் செய்வதாகும். ஆனால் அடிமைத்தனம் இல்லாத போதும் கூட மிகக் கொடுமையான ஒடுக்குமுறையும் கொடுங்கோன்மையும் துன்புறுத்தலும் இவற்றின் விளைவான துன்பங்களும் ஏமாற்றமும் மனத்தளர்ச்சியும் இருக்கமுடியும் என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். அடிமைகளின் நடைமுறை நிலைமை பற்றி மேலே கூறப்பட்ட விவரங்களைக் கவனிப்பவர்கள், அடிமையின் [illegible] ான நிலைமையை மட்டும்

கருத்தில் கொண்டு அடிமை முறையை அவசரப்பட்டுக் கண்டனம் செய்வது சரியல்ல என்று ஒப்புக் கொள்வார்கள். சட்டம் அனுமதிக்கிறது என்பது, அந்த நடைமுறைகள் சமூகத்தில் உள்ளன என்பதற்குச் சான்றாகிவிடாது. தாங்கள் பெற்றுள்ள எல்லாம் அடிமை முறையினால் கிடைத்தவையே என்று பல அடிமைகள் ஒப்புக் கொண்டிருப்பார்கள். அவ்வாறு ஒப்புக் கொண்டாலும் இல்லாவிட்டாலும் பல அடிமைகள் தாங்கள் பெற்றவற்றையெல்லாம் அடிமைமுறை காரணமாகவே அடைந்திருந்தனர்.

அடிமை முறை, சுதந்திரமான சமூக அமைப்பு அல்ல என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால், தீண்டாமை சுதந்திரமான சமூக அமைப்பு என்று கூற முடியுமா? தீண்டாமையை ஆதரிக்கும் இந்துக்கள், இது சுதந்திரமான சமூக அமைப்புதான் என்று கூறலாம். ஆனால் தீண்டாமைக்கும் அடிமை முறைக்கும் இடையில் உள்ள சில வேறுபாடுகள் தீண்டாமையை அடிமை முறையைவிட மோசமான சுதந்திரமற்ற சமூக அமைப்பு ஆக்கிவிடுவதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். அடிமைமுறை ஒருபோதும் கட்டாய மாக்கப்படவில்லை. ஆனால் தீண்டாமை கட்டாயமானது. ஒரு மனிதன், மற்றொரு மனிதனை அடிமையாக வைத்திருப்பது அனுமதிக்கப்பட்டது. அவ்வாறு அடிமையாக வைத்திருக்க விரும்பவில்லையென்றால் அவர்மீது கட்டாயம் எதுவும் இல்லை. ஆனால் தீண்டாதவருக்கு வேறு எந்த வழியும் இல்லை. தீண்டாதவராகப் பிறந்துவிட்டால் தீண்டாதவருக்கு உள்ள எல்லாத் துன்பங்களையும் அவர் அனுபவித்தேயாக வேண்டும். அடிமை முறைச் சட்டம் அடிமையை விடுதலை செய்வதை அனுமதித்தது. ஒரு முறை அடிமையாகிவிட்டால் எப்போதுமே அடிமைதான் என்ற நிலை கிடையாது. தீண்டாமையிலிருந்து தப்பிக்க வழியே கிடையாது. தீண்டாதவர் என்றால் எப்போதுமே தீண்டாதவர்தான். மற்றொரு வேறுபாடு என்னவென்றால், தீண்டாமை மறைமுகமான அடிமை முறையாகும்; எனவே அது மிக மோசமான அடிமை முறையாகும். ஒரு மனிதனின் சுதந்திரத்தைத் திறந்த முறையில் நேரடியாகப் பறித்துக்கொள்வது அதைவிட மேலானது. அடிமையான மனிதன் தன்னுடைய அடிமைத்தனத்தை உணர்ந்து கொள்கிறான். அவ்வாறு உணர்வதே சுதந்திரத்தைப் பெறுவதற்கான போராட்டத்தின் முதல் படியாகும். ஆனால், ஒரு மனிதனின் சுதந்திரம் மறைமுகமாகப் பறிக்கப்பட்டால் அவன் தன்னுடைய அடிமைத்தனத்தை உணராமலிருக்கிறான். தீண்டாமை மறைமுக வடிவிலான அடிமைத்தனமாகும். தீண்டாதவரிடம் 'நீ சுதந்திரமானவன், நீ ஒரு குடிமகன், குடிமகனின் எல்லா உரிமைகளும் உனக்கு உண்டு' என்று கூறிக்கொண்டு, அவர் இந்த இலட்சியம் எதையும் அடைய வாய்ப்புப் பெறமுடியாத வகையில்

கயிற்றை இறுக்குவது கொடுமையான ஏமாற்று வேலையாகும். இது தீண்டாதோர் தங்களுடைய அடிமைத்தனத்தை உணராமலே அவர்களை அடிமையாக்குவதாகும். இது, தீண்டாமை என்றாலும் இது அடிமைத்தனமே. இது, மறைமுகமானது என்றாலும் உண்மையானது. இது, உணரப்படாமலே இருப்பதால், இது, நீடித்து நிற்கிறது. தீண்டாமை, அடிமை முறை ஆகிய இரண்டில் சந்தேகமில்லாமல் தீண்டாமைதான் மோசமானது.

அடிமை முறை, தீண்டாமை ஆகிய இரண்டுமே சுதந்திரமான சமூக அமைப்புகள் அல்ல. ஆனால், இந்த இரண்டுக்குமிடையே வேறுபாடு கூறவேண்டுமானால் - வேறுபாடு உள்ளது என்பதில் சந்தேகம் இல்லை - கல்வி, ஒழுக்கம், மகிழ்ச்சி, பண்பாடு, செல்வம் ஆகியவற்றைப் பெறுவது அடிமை முறையில் சாத்தியமா, தீண்டாமையில் சாத்தியமா என்று பார்க்கவேண்டும். அடிமை முறையில் கல்வி, ஒழுக்கம், மகிழ்ச்சி, பண்பாடு, செல்வம் ஆகியவற்றை அடைவதற்கு இடம் இருக்கிறது. தீண்டாமையில் இதற்கெல்லாம் இடமே இல்லை. அடிமை முறையும் சுதந்திரமில்லாத சமூக அமைப்புதான் என்றாலும், அதில் உள்ள அனுகூலங்களில் எதுவுமே தீண்டாமையில் இல்லை. அதே சமயம் சுதந்திரமான சமூக அமைப்பில் உள்ள பிரதிகூலங்கள் அனைத்தும் தீண்டாமையில் உள்ளன. அடிமை முறை போன்ற சுதந்திரமற்ற சமூக அமைப்பில், வர்த்தகம், கைத்தொழில், கலை ஆகியவற்றில் பயிற்சி பெறுவதற்கு அல்லது பேராசிரியர் ம்யூர்ஸ் கூறுவதுபோல 'மேலான ஒரு பண்பாட்டில் அடி எடுத்து வைப்பதற்கு' வாய்ப்பு இருக்கிறது. தீண்டாமையின் அழுத்தும் பாரமோ, தனிமனித வளர்ச்சிக்கு உள்ள தடையோ அடிமை முறையின் அம்சங்களாக இல்லை. எனவே, அடிமை முறையைவிடத் தீண்டாமை நல்லது என்று கூறுவது அவசரப்பட்ட கூற்றாகும்.

இந்தப் பயிற்சியும் பண்பாட்டின் அறிமுகம் பெறுதலும் அடிமை முறையின் பெரிய நன்மை என்பதில் சந்தேகமில்லை. அடிமைக்குப் பயிற்சி அளிப்பதற்கும் பண்பாட்டின் அறிமுகம் செய்துவைப்பதற்கும் எஜமானுக்குக் கணிசமான செலவு பிடித்தது. அடிமையாவதற்கு முன்பே கல்வியோ பயிற்சியோ பெற்ற அடிமைகள், இளம் அடிமைகளாயிருக்கும்போது வீட்டு வேலையில் அல்லது கைத்தொழிலில் பயிற்சி அளிப்பதேயாகும். பேரரசு உருவாவதற்கு முன் ஓரளவுக்கு இவ்வாறுதான் செய்யப்பட்டது. உதாரணமாக, மூத்த கேட்டோ இவ்வாறுதான் செய்தார். அடிமையின் உடைமையாளரும், ஏற்கெனவே உள்ள பணியாளர்களும் இந்தப் பயிற்சியை அளித்தார்கள்... உண்மையில், செல்வர்களின் வீடுகளில் இதற்கெனத் தனி ஆசிரியர்களே இருந்தார்கள். இந்தப் பயிற்சி, தொழில், வர்த்தகம், கலைகள், இலக்கியம் ஆகியவற்றில் அளிக்கப்பட்டது.

அடிமைக்கு இவ்வாறு உயர்வான உழைப்புகளிலும் பண்பாட்டிலும் பயிற்சி அளிப்பதற்கு உடைமையாளர் முயற்சி எடுத்தற்குக் காரணம் சந்தேகமில்லாமல் லாபநோக்கம் தான். பயிற்சி பெறாத அடிமையை விட, பயிற்சி பெற்ற அடிமைக்கு ஒரு வர்த்தகப் பொருள் என்ற முறையில், மதிப்பு அதிகம். அவனை விற்றால் அதிக விலை கிடைக்கும்; மற்றவர்களுக்கு வாடகைக்கு விடப்பட்டால், அவன் அதிக ஊதியம் ஈட்டி வருவான். எனவே உடைமையாளர் தனது அடிமைக்குப் பயிற்சி அளிப்பது அவருக்கு முதலீடாகும்.

அடிமை முறை போன்ற சுதந்திரமில்லாத சமூக அமைப்பில் அடிமையின் உயிரையும் உடம்பையும் பராமரிக்கும் பொறுப்பு உடைமையாளரைச் சார்ந்தது. அடிமை தன்னுடைய உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றைத் தேடும் பொறுப்புகள் எல்லாவற்றிலுமிருந்து விடுதலை பெற்றான். இவையெல்லாவற்றையும் அளிக்கவேண்டியது உடைமையாளரின் பொறுப்பாயிற்று. அடிமை, தனக்கு ஆகும் செலவை விட அதிகமாகவே ஈட்டியதால் உடைமையாளருக்கு, இது சுமையாக இருக்கவில்லை. ஆனால், சுதந்திர மனிதர் ஒவ்வொருவரும் தமது உணவுக்கும் உறைவிடத்துக்கும் உத்தரவாதம் பெறுவது எப்போதும் சாத்தியமில்லை என்பதை ஊதியத்துக்கு உழைப்பவர்கள் தங்கள் அனுபவத்தில் அறிந்துள்ளனர். உழைக்கத் தயாராயிருப்பவர்கள் எல்லோருக்கும் வேலை எப்போதும் கிடைத்துவிடுவதில்லை. வேலை இல்லை என்றால் உணவு இல்லை என்ற விதியிலிருந்து உழைப்பாளர் தப்பிக்க முடியாது. இந்த விதி வேலை இல்லை என்றால் உணவு இல்லை என்பது - அடிமைக்குப் பொருந்தாது. அவனுக்கு உணவு தேடித்தருவதும், வேலை தேடித்தருவதும் உடைமையாளரின் கடமை. உடைமையாளர் வேலை தேடித்தரத் தவறினால், அடிமை, தனக்கு உணவு பெறும் உரிமையை இழந்துவிடுவதில்லை. வர்த்தகத்தின் ஏற்ற இறக்கங்கள், வளர்ச்சிகள், தளர்ச்சிகள் ஆகியவற்றின் விளைவுகளை சுதந்திரமான ஊதியத் தொழிலாளர்கள் அனுபவித்தே தீரவேண்டும். இவையெல்லாம் அடிமையை பாதிப்பதில்லை. இவை அடிமையின் எஜமானரை பாதிக்கலாம்; ஆனால், அடிமை இவற்றிலிருந்து விடுதலை பெற்றிருக்கிறான். அவனுக்கு உணவு, அநேகமாக அதே உணவு, கிடைத்துவிடும். வர்த்தகம் வளர்ந்தாலும் தளர்ந்தாலும் அடிமைக்கு உணவு கிடைத்துவிடும்.

அடிமை முறை போன்ற சுதந்திரமற்ற சமூக அமைப்பில் எஜமான் தன்னுடைய அடிமையின் ஆரோக்கியத்திலும் நல்வாழ்விலும் மிகுந்த கவனம் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறான். அடிமை, தன்னுடைய எஜமானின் உடைமையாவான். இந்தப் பிரதிகூலமான நிலையே அவனுக்குச் சுதந்திர மனிதனைவிட அனுகூலமாக அமைந்துவிடுகிறது. அடிமை தம்முடைய உடைமை என்பதாலும், எனவே மதிப்புள்ள

பொருள் போன்றவன் என்பதாலும், உடைமையாளர் தமது சுயநலத்துக்காகவேனும் அடிமையின் ஆரோக்கியத்திலும் நல்வாழ்விலும் மிகுந்த கவனம் செலுத்தினார். ரோம் நகரில் அடிமைகள் ஒருபோதும் சதுப்பு நிலங்களிலோ மலேரியா வரக்கூடிய நிலத்திலோ வேலையில் அமர்த்தப்படவில்லை. இப்படிப்பட்ட நிலங்களில் சுதந்திர மனிதர்கள் தான் வேலைக்கு அமர்த்தப்பட்டார்கள். அடிமைகளை ஒருபோதும் சதுப்பு நிலத்தில் அல்லது மலேரியா வரக்கூடிய நிலத்தில் பயன்படுத்த வேண்டாம் என்ற ரோமானிய விவசாயிகளுக்குக் கேட்டோ என்பவர் அறிவுரை கூறுகிறார். இது விசித்திரமாகத் தோன்றுகிறது. ஆயினும், சற்று யோசித்துப் பார்த்தால் இது மிகவும் இயல்பானது என்று தெரியும். அடிமை, மதிப்பு மிக்க உடைமையாவான்; எனவே தன்னுடைய நலனை உணர்ந்திருக்கும் விவேகமுள்ள மனிதன், தனது மதிப்புமிக்க உடைமையை மலேரியாவின் சீர்கேடுகளுக்கு உட்படுத்த மாட்டான். சுதந்திர மனிதன் விஷயத்தில் இதேபோன்ற கவனம் செலுத்த வேண்டியதில்லை; ஏனென்றால், அவன் மதிப்புள்ள உடைமை அல்ல. உடைமையாளரின் இந்தக் கருத்து அடிமைக்குப் பெரிய அனுகூலத்தைத் தந்தது. யாருக்கும் அளிக்கப்படாத கவனிப்பு அடிமைக்கு அளிக்கப்பட்டது.

சுதந்திரமற்ற சமூக அமைப்பில் காணப்பட்ட இந்த மூன்று அனுகூலங்களில் ஒன்றுகூடத் தீண்டாமையில் இல்லை.

தீண்டாதவருக்கு நாகரிகத்தின் உயர்கலைகளில் பிரவேசிக்க அனுமதி இல்லை. பண்பாடான வாழ்க்கைக்கு எந்த வழியும் அவருக்குத் திறந்திருக்கவில்லை. அவர் குப்பை கூட்ட வேண்டும்; அதைத்தவிர வேறு எதுவும் செய்யக்கூடாது. தீண்டாதவரின் வாழ்க்கைக்கு எந்தப் பாதுகாப்பையும் தீண்டாமை உறுதி செய்யவில்லை. தீண்டாதவரின் உணவுக்கும் உடைக்கும் உறைவிடத்துக்கும் இந்துக்களில் எவரும் பொறுப்பானவர் அல்லர். தீண்டாதவரின் ஆரோக்கியம் யாருக்கும் அக்கறையுள்ள விஷயம் அல்ல. உண்மையில், ஒரு தீண்டாதவர் இறந்தால், வேண்டாதது ஒழிந்ததாகவே கருதப்பட்டது. ஓர் இந்துப் பழமொழி ' தீண்டாதவன் செத்தான், தீட்டுப் பயம் ஒழிந்தது ' என்று கூறுகிறது.

மறு புறத்தில், சுதந்திரமான சமூக அமைப்பின் எல்லாப் பிரதிகூலங்களும் தீண்டாமையில் உள்ளன. சுதந்திரமான சமூக அமைப்பில் வாழ்க்கைப் போராட்டத்தில் வென்று உயிர் வாழ்வது அந்தந்த மனிதரின் பொறுப்பாகும். இந்தப் பொறுப்பு சுதந்திரமான சமூக அமைப்பின் மிகப் பெரிய பிரதிகூலங்களில் ஒன்றாகும். ஒரு தனி மனிதன் இந்தப் பொறுப்பை நிறைவேற்ற முடிகிறதா என்பது வாழ்க்கையில் நியாயமான ஆரம்பம், சம வாய்ப்பு, நியாயமாக

நடத்தப்படுவது ஆகியவற்றைப் பொறுத்தது. தீண்டாதவர் சுதந்திரமான மனிதராக இருந்தாலும் அவருக்கு வாழ்க்கையில் நியாயமான ஆரம்பமோ சம வாய்ப்போ, நியாயமாக நடத்தப்படுவதோ கிடைப்பதில்லை. இந்தக் கோணத்தில் பார்க்கும்போது தீண்டாமை, அடிமை முறையை விட மோசமானது மட்டுமின்றி, அடிமை முறையுடன் ஒப்பிடும்போது உண்மையிலேயே கொடுமையானதுமாகும். அடிமை முறையில், அடிமைக்கு வேலை கிடைக்கச் செய்யும் பொறுப்பு எஜமானுக்கு இருக்கிறது. சுதந்திரமான தொழிலாளர்களைக் கொண்ட முறைமையில் வேலை பெறுவதற்குத் தொழிலாளர்கள், தொழிலாளர்களுடன் போட்டியிட வேண்டியுள்ளது. இந்தப் போட்டிப் போராட்டத்தில் தீண்டாதவர் நியாயமாக நடத்தப்படுவதற்கு என்ன வாய்ப்பு இருக்கிறது ? சுருக்கமாகச் சொன்னால், சமூக இழிவு முத்திரை காரணமாக வாழ்க்கையின் துலைக்கோல் தமக்கெதிராகவே சாய்ந்திருக்கும் நிலையில் தீண்டாதவர் வேலை அளிக்கப்படுவதில் கடைசி இடத்தையும், வேலையிலிருந்து நீக்கப்படுவதில் முதல் இடத்தையும் பெறுகிறார். அடிமை முறையுடன் ஒப்பிடும்போது தீண்டாமை கொடுமையானது; ஏனென்றால், உயிர்வாழ்வதற்கு வேண்டிய பொருள் ஈட்டுவதற்கு எல்லா வழிகளையும் தீண்டாதவருக்கு முழுமையாகத், திறந்துவிடாமல் தம்மைப் பராமரித்துக் கொள்ளும் பொறுப்பைத் தீண்டாமை அவர் மீது சுமத்துகிறது.

மொத்தத்தில், அடிமைகளைப் போலன்றி, தீண்டாதோர் இந்துக்களின் நலன்களுக்குத் தேவையான விஷயங்களில் அவர்களின் உடைமையாகவும், தீண்டாதோர் இந்துக்களின் உடைமையாக இருந்தால் இந்துக்களுக்குப் பொறுப்பு ஏற்படும் விஷயங்களில் அவர்களால் சொந்தமில்லை என்று கைவிடப்பட்டவர்களாகவும் உள்ளனர். தீண்டாதோர் சுதந்திரமற்ற சமூக அமைப்பின் நன்மைகள் எதையும் பெறமுடியாமலும் சுதந்திரமான சமூக அமைப்பின் தீமைகள் எல்லாவற்றையும் சுமக்கவேண்டியும் உள்ள நிலைமைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார்கள்.

□□□

## இயல் - 4

### இந்தியச் சேரி - தீண்டாமையின் மையம்

சமூகத்துக்கு வெளியே இந்து சமூக அமைப்பில் தீண்டாதோரின் இடம் என்ன? அவர்களின் இடம் பற்றி உண்மையான சித்திரம் ஒன்றைத் தருவதே இந்த இயல்களின் முக்கிய நோக்கம். ஆனால், இந்து சமூக அமைப்பில் தீண்டாதோர் எப்படி வாழ்கிறார்கள் அல்லது வாழச் செய்யப்பட்டுள்ளனர் என்பது பற்றி எதுவுமே அறியாத ஒருவருக்கு அதை உள்ளது உள்ளபடி உருவாக்கிக் காட்டுவதற்கு மிகச் சிறந்த முறையைத் தீர்மானிப்பது எளிதல்ல. இதற்கு ஒரு வழி, இந்து சமூக அமைப்பின் மாதிரி வரைபடம் ஒன்றை வரைந்து அதில் தீண்டாதோருக்குத் தரப்பட்டுள்ள இடத்தைக் காட்டுவதாகும். இதற்கு, இந்து கிராமம் ஒன்றுக்குச் செல்வது அவசியமாகும். நமது நோக்கத்துக்கு இதைவிடச் சிறந்த வழி வேறில்லை. இந்து கிராமம் இந்து சமூக அமைப்பின் செயல் முறை விளக்க வரைபடமாகும். அதில், இந்து சமூக அமைப்பு முழுவீச்சில் செயல்படுவதைக் காணலாம். சராசரி இந்து, இந்தியக் கிராமத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம் பேரானந்தத்தில் திளைக்கிறார். உலகிலேயே வேறெங்கும் ஈடு, இணை காணமுடியாத இலட்சிய சமூக அமைப்பு அது என்று அவர் எண்ணுகிறார். சமூக அமைப்புத் தத்துவத்துக்கு இது ஒரு சிறப்பான பங்களிப்பு என்றும் இதைப்பற்றி இந்தியா பெருமைப்பட முடியும் என்றும் கூறப்படுகிறது.

இந்தியக் கிராமம் இலட்சிய சமூக அமைப்பின் உருவம் என்பதில் இந்துக்கள் எவ்வளவு வெறித்தனமான நம்பிக்கை கொண்டுள்ளனர்

என்பதை, இந்திய அரசியல் நிர்ணய சபையில் இந்து உறுப்பினர்கள் கோபாவேசத்துடன் பேசிய பேச்சுக்களிலிருந்து காணலாம். சுயாட்சியுள்ள நிர்வாகப் பகுதிகளைக் கொண்ட அரசியல் சாசன கோபுரக் கட்டமைப்புக்கு, இந்தியக் கிராமத்தை அடித்தளமாகக் கொள்ளவேண்டும் என்றும், கிராமத்துக்கெனச் சொந்த சட்ட மன்றம், நிர்வாக அமைப்பு, நீதிமன்ற அமைப்பு ஆகியவை இருக்க வேண்டும் என்றும் அவர்கள் வாதிட்டார்கள். தீண்டாதோரைப் பொறுத்தமட்டில் இதைவிடப் பெரிய கேடு வேறெதுவும் இல்லை. கடவுள் செயலாக அரசியல் நிர்ணய சபை இதை ஏற்கவில்லை. என்றாலும், இந்தியக் கிராமம் ஓர் இலட்சிய சமூக அமைப்பு என்ற நம்பிக்கை இந்துக்களிடம் இன்னமும் வலுவாக உள்ளது. இந்துக்களின் இந்த நம்பிக்கை பரம்பரையாக உள்ள நம்பிக்கையோ, பண்டைக் காலத்திலிருந்தே வருவதோ அல்ல. கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிப் பணியில் இருந்த சர் சார்ல்ஸ் மெட்காஃப் என்பவரிடமிருந்து இரவல் பெற்ற நம்பிக்கை இது. வருவாய் அதிகாரியாக இருந்த மெட்காஃப், தம்முடைய வருவாய்த் துறை அறிக்கையொன்றில் இந்தியக் கிராமத்தைப் பற்றிப் பின்வருமாறு வர்ணித்தார் :[1]

" கிராம சமுதாயங்கள் சிறிய குடியரசுகளாக உள்ளன. தங்களுக்குத் தேவையான எல்லாவற்றையும் அவை தங்களிடமே கொண்டுள்ளன; அநேகமாக வெளி உறவுகள் எவையும் இல்லாமல் சுதந்திரமாக உள்ளன. வேறெதுவும் நிலைத்து நிற்காத போதும் இவை மட்டும் நிலைத்து நிற்பதாகத் தோன்றுகிறது. அரச வம்சங்கள் அடுத்தடுத்து வருகின்றன, வீழ்கின்றன, புரட்சிக்குப் பின் புரட்சியாக அடுத்தடுத்து நடக்கின்றன; இந்துக்கள், பட்டானியர், முகலாயர், மராட்டியர், சீக்கியர், ஆங்கிலேயர், என்று ஆட்சியாளர்கள் மாறுகிறார்கள் ; ஆனால், கிராம சமுதாயங்கள் அப்படியே இருக்கின்றன. படையெடுப்புகள் ஏற்படும் போது அவை ஆயுதங்களைத் தயார் செய்து கொண்டு கோட்டைகளை அமைத்துக் கொள்கின்றன. நாட்டின் வழியே பகைப்படை செல்லும் போது கிராம சமுதாயங்கள் தங்களுடைய கால்நடைகளைக் கோட்டைச் சுவருக்குள்ளே சேர்த்து வைத்துக் கொண்டு படையைப் போகவிடுகின்றன. கொள்ளையும் அழிவுச் செயல்களும் தங்கள் மீதே திரும்பினால், பகைப்படை தங்களால் எதிர்த்து நிற்கமுடியாத அளவுக்குப் பெரிதாக இருந்தால், அவை தூரத்தில் உள்ள நேசமான கிராமங்களுக்கு ஓடிப்போகின்றன. பகைப்புயல் கடந்து சென்றபின் அவை திரும்பி வந்து, தங்கள் தொழில்களை முன்போல மீண்டும் நடத்தத் தொடங்குகின்றன. நாட்டில் தொடர்ந்து பல ஆண்டுகளுக்குக் கொள்ளையும்

1. பேடன் பவல் தம்முடைய "பிரிட்டிஷ் இந்தியாவில் நிலமுறை, தொகுதி - 1 என்ற புத்தகத்தில் இதை மேற்கோள் காட்டுகிறார்.

கொலையும் நடந்து கொண்டு கிராமங்களில் வசிக்கமுடியாமல் போனால், சிதறிக்கிடக்கும் சமுதாயமக்கள், அமைதியாகத் திரும்பிச் செல்லச் சமயம் கிடைக்கும் போது மீண்டும் சென்று விடுகிறார்கள். ஒரு தலைமுறையே முடிந்து போகலாம் என்றாலும் அடுத்த தலைமுறையினர் திரும்பிச் செல்கிறார்கள். தந்தைகளின் இடங்களுக்கு மகன்கள் திரும்புகிறார்கள். கிராமம் அதே இடத்தில் அமையும் ; அவரவர் வீடுகளுக்கும் அதே இடம் ; வெளியே விரட்டியடிக்கப்பட்டவர்களின் சந்ததியினர் கிராமத்துக்குத் திரும்பி வந்து முன்னோரின் அதே நிலங்களை மீண்டும் தாங்கள் எடுத்துக்கொள்கிறார்கள். அவர்களை வெளியே விரட்டுவதும் எளிதான செயலல்ல ; ஏனென்றால், பல சமயங்களில் அவர்கள் கலவரங்களிலும் குழப்பங்களிலும் தங்கள் இடங்களை விடாமல் நிலைகொண்டு கொள்ளையையும் கொடுங்கோலையும் எதிர்த்து நிற்கப் போதிய பலமும் பெற்றுவிடுவார்கள். ஒவ்வொன்றும் ஒரு சிறியநாடு போன்ற இந்தக் கிராம சமுதாயங்கள் சேர்ந்த அமைப்புதான் வேறெதையும் விட இந்திய மக்கள் அழிந்துவிடாமல் பாதுகாத்துள்ளது என்று நான் கருதுகிறேன்; அவர்களிடம் உயர்ந்த அளவில் காணப்படும் மகிழ்ச்சிக்கும், அவர்கள் பெருமளவு சுதந்திரத்தை அனுபவிப்பதற்கும் இதுவே காரணமாகும்."

ஆளும் வர்க்கத்தின் உயர் அதிகாரி ஒருவர் இந்தியக் கிராமத்தைப் பற்றி எழுதிய இந்த வர்ணனையைப் படித்துவிட்டு, இந்துக்கள் மகிழ்ந்துபோய் இதைத் தங்களுக்கு அளிக்கப்பட்ட பாராட்டாகக் கொண்டு அவரது கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். இந்துக்கள் இந்தக் கருத்தை ஏற்றுக் கொண்டதில் அவர்களது அறிவுத் திறனோ புரிந்துகொள்ளும் சக்தியோ காணப்படவில்லை. அடக்கியாளப்படும் எல்லா மக்களுக்கும் பொதுவாக உள்ள பலவீனம் தான் காணப்படுகிறது. வெளிநாட்டினர் பலர் இந்தியக் கிராமத்தைப் பற்றிய இலட்சியரீதியான இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்கிறார்கள். ஆதலால் இந்தியக் கிராமங்களில் சமூகத்தின் நிலை பற்றி உண்மையான சித்திரத்தைத் தருவது நல்லது.

இந்தியக் கிராமம் ஒரே ஒரு சமூக அலகாக இல்லை. அது பல சாதிகளை கொண்டது. ஆயினும் நமது நோக்கத்திற்குப் பின்வரும் விவரங்கள் போதுமானவை-

**I.** கிராமத்தின் மக்கள் தொகை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது - (1) தீண்டத்தக்கவர்கள் **(ii)** தீண்டாதவர்கள்.

**II.** தீண்டத்தக்கவர்கள் பெரிய சமுதாயமாகவும், தீண்டாதோர் ஒரு சிறிய சமுதாயமாகவும் உள்ளனர்.

**III**. தீண்டத்தக்கவர்கள் கிராமத்தின் உள்ளேயும், தீண்டாதோர் கிராமத்துக்கு வெளியேயும் தனித்தனிப் பகுதிகளில் வசிக்கிறார்கள்.

**IV**. பொருளாதார ரீதியில், தீண்டத்தக்கவர்கள் பலமான, சக்தி வாய்ந்த சமுதாயமாக உள்ளனர்; தீண்டாதோர் ஏழையான, சார்ந்து வாழ்கின்ற சமுதாயமாக உள்ளனர்.

**V**. சமூக ரீதியில், தீண்டத்தக்கவர்கள், ஆளும் இனம் என்ற இடத்தில் உள்ளனர்; தீண்டாதவக்ள் பரம்பரையான பிணை வேலைக்காரர்களைக் கொண்ட ஆளப்படும் இனம் என்ற இடத்தில் உள்ளனர்.

இந்தியக் கிராமத்தில் தீண்டத்தக்கவர்களும் தீண்டாதோரும் என்ன நிபந்தனைகளில் இணைந்து வாழ்கிறார்கள் ? ஒவ்வொரு கிராமத்திலும் தீண்டத்தக்கவர்கள் சில விதிகள் வைத்திருக்கிறார்கள் ; இவற்றைத் தீண்டாதவர்கள் பின்பற்றி நடக்கவேண்டும். என்ன செயல்களைச் செய்தால் குற்றம், என்ன செயல்களைச் செய்யத்தவறினால் குற்றம் என்று தீண்டத்தக்கவர்கள் கருதுவார்கள் என்பதை இந்த விதிகள் கூறுகின்றன. இத்தகைய குற்றங்களின் பட்டியல் கீழே தரப்படுகிறது:

1. தீண்டாதவர்கள், இந்துக்கள் வசிக்கும் இடத்துக்கு அப்பால் தனியான பகுதிகளில் வசிக்கவேண்டும். இவ்வாறு பிரித்துவைக்கும் விதியை மீறுவது குற்றமாகும்.

2. தீண்டாதோர் வசிக்கும் பகுதிகள் தெற்குத் திசையில் இருக்க வேண்டும், ஏனென்றால் தெற்கு தான் நான்கு திசைகளில் மிகவும் அமங்கலமானது. இந்த விதியை மீறி நடப்பது குற்றமாகக் கருதப்படும்.

3. தீண்டாதவர்கள் தீட்டு ஏற்படுத்தும் தூரம் அல்லது நிழல் தீட்டு பற்றிய விதியைப் பின்பற்ற வேண்டும். இந்த விதியை மீறுவது குற்றமாகும்.

4. தீண்டாத சமுதாயத்தின் உறுப்பினர்கள் நிலம், கால்நடைகள் போன்ற செல்வங்கள் சேர்ப்பது குற்றம்.

5. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் ஓட்டுக்கூரை உள்ள வீடு கட்டுவது குற்றம்.

6. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் சுத்தமான உடை உடுப்பது, ஷு அணிவது, கைக் கடிகாரம் அல்லது தங்க நகை அணிவது குற்றம்.

7. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கம்பீரமாக ஒலிக்கும் பெயர்களை வைப்பது குற்றம். அவர்களின் பெயர்கள் இகழ்ச்சியைக் குறிப்பனவாக இருக்க வேண்டும்.

8. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் ஓர் இந்துவின் முன்னால் நாற்காலியில் உட்காருவது குற்றம்.

9. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் கிராமத்தின் வழியே குதிரை மீதோ பல்லக்கிலோ அமர்ந்து செல்வது குற்றம்.

10. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் கிராமத்தின் வழியே தீண்டாதோரின் ஊர்வலத்தை நடத்திச் செல்வது குற்றம்.

11. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் இந்துவுக்கு வணக்கம் தெரிவிக்காமலிருப்பது குற்றம்.

12. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் பண்பட்ட மொழியொன்றைப் பேசுவது குற்றம்.

13. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர் யாரேனும், இந்துக்கள் உண்ணாவிரதமிருக்கின்ற புனித நாளிலும், உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டு உணவு உண்ணப் போகும் நேரத்தில் அல்லது உண்ணும் நேரத்தில் கிராமத்தினுள் செல்ல நேர்ந்தால் பேசிக் கொண்டு செல்வது குற்றமாகும் ; ஏனென்றால் அவர்களின் மூச்சு, ஊரின் காற்றையும் இந்துக்களின் உணவையும் மாசுபடுத்துவதாகக் கருதப்படுகிறது.

14. தீண்டாதவர் ஒருவர், தீண்டத்தக்கவரின் புறச் சின்னங்கள் எதையும் அணிந்து தம்மைத் தீண்டத்தக்கவர் போலக் காட்டிக் கொள்வது குற்றம்.

15. தீண்டாதவர் தம்முடைய தாழ்ந்த அந்தஸ்துக்கு ஏற்றபடி நடந்து கொண்டு, பொது மக்கள் அவரை அறிந்து அடையாளம் கண்டு கொள்ளும் வகையில் பின்வருவன போன்ற புறச் சின்னங்களைக் கொண்டிருக்க வேண்டும் :

(அ) இழிவான பெயரைக் கொண்டிருப்பது,

(ஆ) சுத்தமான உடை அணியாதிருப்பது,

(இ) வீட்டுக்கு ஓட்டுக்கூரை இல்லாமலிருப்பது,

(ஈ) வெள்ளி, தங்க நகைகள் அணியாமலிருப்பது.

இந்த விதிகளில் எதையும் மீறுவது குற்றமாகும்.

அடுத்தபடியாகத், தீண்டாதவர்கள், தீண்டத்தக்கவர்களுக்காகச் செய்யவேண்டிய கடமைகள் இந்த விதிகளில் கூறப்படுகின்றன. இதன்கீழ் பின்வருனவற்றைக் குறிப்பிடலாம் :

1. தீண்டாத சமுதாயத்தைச் சேர்ந்தவர், இந்துவின் வீட்டில் மரணம், திருமணம் போன்ற நிகழ்ச்சிகள் பற்றிய செய்தியை மற்ற கிராமங்களில் வசிக்கும் அந்த இந்துவின் உறவினர்களுக்கு, அந்தக் கிராமங்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும், அங்குப் போய்த் தெரிவிக்க வேண்டும்.

2. ஒரு இந்துவின் வீட்டில் திருமணம் நடக்கும் போது, தீண்டாதவர் அங்கு விறகு உடைத்தல், எடுபிடி வேலைகள் போன்ற வேலைகளைச் செய்யவேண்டும்.

3. ஒரு இந்துப் பெண் தனது பிறந்த வீட்டிலிருந்து கணவனின் கிராமத்துக்குச் செல்லும்போது, அந்தக் கிராமம் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும், தீண்டாதவர் அவளுடன் கூடச் செல்ல வேண்டும்.

4. கிராம சமுதாயம் முழுவதும் ஹோலி, தசரா போன்ற விழாக்களைக் கொண்டாடுவதில் ஈடுபட்டிருக்கும்போது, தீண்டாதவர்கள், விழாவின் முக்கிய நிகழ்ச்சிக்கு முன் தேவைப்படும் தாழ்ந்த வேலைகளையெல்லாம் செய்ய வேண்டும்.

5. சில விழாக்களின்போது தீண்டாதவர்கள் தங்கள் பெண்களை கிராம சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் கண்ணியமற்ற முறையில் கேலிப்பொருளாக்குவதற்குக் கொடுக்கவேண்டும்.

இந்தக் கடமைகளையெல்லாம் ஊதியம் பெறாமல் செய்ய வேண்டும்.

இந்தக் கடமைகளின் உட்பொருளை உணர்வதற்கு, இவை ஏன் விதிக்கப்பட்டன என்பதை அறிவது அவசியம். கிராமத்தில் உள்ள ஒவ்வொரு இந்துவும் தீண்டாதவர்களைவிடத் தாம் உயர்ந்தவர் என்று கருதுகிறார். தாம் எஜமானர் என்பதால் தம்முடைய கௌரவத்தை நிலைநிறுத்த வேண்டும் என்று நினைக்கிறார். தம்முடைய கட்டளைப்படி ஆடுகின்ற ஒரு பரிவாரம் இல்லாவிட்டால் இந்தக் கௌரவத்தை அவர் காப்பாற்ற முடியாது. இதற்குக் கிடைப்பவர்கள் தீண்டாதவர்கள்தான்; அவர்களைப் பயன்படுத்துவதற்கு அவர் கால்காசு கூடச் செலவிடவேண்டியதில்லை. தீண்டாதவர்கள் ஒன்றும் செய்யமுடியாத உதவியற்ற நிலையில் இருப்பதால், இந்த வேலைகளைச் செய்ய மறுக்க முடியாது. தங்கள் கௌரவத்தை நிலைநிறுத்த இவர்களின் சேவை இன்றியமையாததாய் இருப்பதால் கிராமத்து இந்துக்கள் கொஞ்சமும் தயக்கமின்றி இவர்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்.

இந்தக் குற்றங்களில் எதுவும் பிரிட்டிஷ் அரசினால் இயற்றப்பட்ட தண்டனைச் சட்டத்தில் இடம்பெறவில்லை. என்றாலும், தீண்டாதவர்களைப் பொறுத்தமட்டில் இவை உண்மையில் குற்றங்களாக உள்ளன. இந்த விதிகளில் எந்த ஒன்றை மீறினாலும் தீண்டாதவர்களுக்கு நிச்சயமாகத் தண்டனை உண்டு. இவை எப்படிச் செயல்படுத்தப்படுகின்றன என்பது இயல் 5 மற்றும் 6-இல் தெளிவாக்கப்படுகிறது.

மற்றொரு முக்கிய அம்சம், இந்தக் குற்றங்களுக்கான தண்டனை எப்போதுமே பொதுத் தண்டனையாக விதிக்கப்படுவதாகும். குற்றத்தைச்

செய்தவர் ஒரு தனி நபராக இருந்தாலும், தீண்டாதோர் சமுதாயம் முழுவதுமே தண்டனைக்குரியதாகும்.

தீண்டாதவர்கள் எப்படி வாழ்கிறார்கள், தங்கள் வாழ்க்கைக்கு எப்படிப் பொருள் தேடுகிறார்கள் ? தீண்டாதவர்கள் பொருள் தேடுவதற்கு என்ன வழிகள் திறந்திருக்கின்றன என்பதை அறிந்துகொள்ளாமல், இந்து சமூகத்தில் அவர்களின் இடம் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ளமுடியாது.

ஒரு விவசாய நாட்டில், விவசாயம் வாழ்க்கைக்கு முக்கிய ஆதாரமாக இருக்கமுடியும். ஆனால் பொருள் ஈட்டுவதற்கான இந்த வழி பொதுவாகத் தீண்டாதவர்களுக்குத் திறந்திருப்பதில்லை. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, நிலம் வாங்குவது அவர்களின் சக்திக்கு அப்பாற்பட்டது. இரண்டாவதாகத், தீண்டாதவரிடம் நிலம் வாங்குவதற்குப் பணம் இருந்தாலும், வாங்குவதற்கான வாய்ப்பு அவருக்கு இருப்பதில்லை. பல பகுதிகளில், தீண்டாதவர் நிலம் வாங்க முன்வருவதையும், அதன் மூலம் தீண்டத்தக்கவர்களுடன் சமம் ஆக முயலுவதையும் இந்துக்கள் எதிர்ப்பார்கள். தீண்டாதவரின் இந்த முயற்சியை இந்துக்கள் ஏற்கமாட்டார்கள் என்பது மட்டுமின்றி, அவருக்குத் தண்டனையும் கிடைக்கக்கூடும். சில பகுதிகளில் அவர்கள் நிலம் வாங்க முடியாமல் சட்டமே தடையாக உள்ளது. உதாரணமாக, பஞ்சாபில் நில பராதீனச் சட்டம் என்ற சட்டம் உள்ளது. இந்தச் சட்டம் நிலம் வாங்க அனுமதியுள்ள சமுதாயங்களைப் பட்டியலிட்டுக் கூறுகிறது. இந்தப் பட்டியலில் தீண்டாதவர்கள் விலக்கப்பட்டிருக்கிறார்கள். இதன் விளைவாகப் பெரும்பாலான பகுதிகளில் தீண்டாதவர்கள் நிலமற்ற உழைப்பாளிகளாகவே இருக்கவேண்டிய கட்டாயம் உள்ளது. உழைப்பாளிகள் என்ற முறையில் அவர்கள் நியாயமான ஊதியங்களையும் கேட்கமுடியாது. இந்து விவசாயிகள் தங்கள் விருப்பம் போல் கொடுக்கும் ஊதியத்தைத்தான் அவர்கள் பெறமுடியும். இந்து விவசாயிகள் கூட்டுச் சேர்ந்துகொண்டு மிகக் குறைந்த அளவில் ஊதியம் கொடுக்கமுடியும். இவ்வாறு செய்வது அவர்களின் நலனுக்கு ஏற்றதாயிருக்கும். ஆனால் தீண்டாதவர்களுக்கு இதை எதிர்த்து நிற்கும் சக்தி இல்லை. அவர்கள் ஏதேனும் ஊதியம் பெற்றாகவேண்டும்; இல்லையென்றால் பட்டினிதான். பேரம் பேசும் சக்தியும் அவர்களுக்கு இல்லை. நிர்ணயிக்கப்படும் ஊதியத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டேயாக வேண்டும்; இல்லையென்றால் அவர்கள் வன்முறைக்கு உள்ளாவார்கள்.

தீண்டாதவர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம் பணமாக அல்லது தானியமாகக் கொடுக்கப்படுகிறது. உத்தரப்பிரதேசத்தின் சில பகுதிகளில் தீண்டாதோருக்குக் கொடுக்கப்படும் தானியம் " கோபரஹா "

எனப்படுகிறது. " கோபரஹா " என்றால் ஒரு விலங்கின் சாணத்தில் உள்ள தானியம் என்று பொருள். மார்ச் அல்லது ஏப்ரல் மாதத்தில் தானியம் விளைந்து, முற்றிப் பயிர் அறுவடையாகி, உலர்த்தப்பட்டுக் களத்து மேட்டில் பரப்பப்படுகிறது. அதன்மேல் மாடுகள் சுற்றிச்சுற்றி நடக்கவிடப்படுகின்றன. இந்த மாடுகளின் குளம்புகளால் மிதிக்கப்பட்டு தானியம் வைக்கோலிலிருந்து பிரிக்கப்படுகிறது. இவ்வாறு பிணையல்டித்துச் சுற்றிவரும் போது, மாடுகள் வைக்கோலையும் அதனுடன் சேர்ந்துள்ள தானியத்தையும் தின்றுவிடுகின்றன. இவற்றை மாடுகள் அளவுக்கதிமாகத் தின்பதால் சரியாகச் சீரணமாகாமல் மறுநாள் சாணத்துடன் தானியமும் சேர்ந்து வெளியாகிறது. இந்தச் சாணத்தை வடிகட்டி அதிலிருந்து தானியம் பிரித்தெடுக்கப்படுகிறது. இந்தத் தானியம் தீண்டாதவர்களான தொழிலாளர்களுக்கு ஊதியமாகக் கொடுக்கப்படுகிறது. இதைத்தான் அவர்கள் மாவாக்கி ரொட்டி செய்து உண்கிறார்கள்.

விவசாயப் பருவம் முடிந்தபின் தீண்டாதவர்களுக்கு வேலை கிடையாது; அதனால் வருமானமும் கிடையாது. அந்தக் காலங்களில் அவர்கள் காடுகளில் புல்வெட்டியும் விறகு வெட்டியும் அவற்றைப் பக்கத்து நகர்களில் கொண்டு சென்று விற்கிறார்கள். அரசு காட்டிலிருந்து இவற்றை வெட்டிக் கொண்டு செல்வதற்கு வனக்காவலரின் தயவு வேண்டும். அவருக்கு லஞ்சம் கொடுத்தால் தான் கொண்டு செல்ல முடியும். நகருக்குக் கொண்டு சென்றபின், வாங்குவோர் கேட்கும் விலைக்குத்தான் விற்க முடியும். வாங்குவோர் பெரும்பாலும் இந்துக்கள்தான். அவர்கள் சதி செய்து விலைகளைக் குறைத்தே வைப்பார்கள். தீண்டாதவர்கள் தங்கள் பொருள்களை விற்காமல் நிறுத்திவைக்க முடியாதாகையால், கிடைக்கும் விலைக்கு விற்றுவிடவேண்டியுள்ளது. பல சமயங்களில் அவர்கள் இவற்றை விற்பதற்குத் தங்கள் கிராமத்திலிருந்து 10 மைல் தூரத்தில் உள்ள நகருக்கு நடந்துபோய் வரவேண்டியுள்ளது.

இவர்கள் பொருள் ஈட்டுவதற்கு எந்தவொரு வியாபாரமும் செய்ய முடியாது. அதற்கு வேண்டிய முதல் இவர்களிடம் இல்லை. அப்படியே இருந்தாலும், இவர்களிடமிருந்து யாரும் வாங்கமாட்டார்கள்.

இவர்களுடைய வருமான ஆதாரங்களெல்லாம் நிச்சயமில்லாதவை; சிறிது காலம் மட்டும் கிடைத்து மறைந்துவிடுபவை. நாட்டின் சில பகுதிகளில் இவர்களுக்கு நிச்சயமான ஒரேயொரு வாழ்க்கை வழி இருப்பதைத்தான் நான் அறிவேன். கிராமத்தின் இந்து விவசாயிகளின் வீடுகளில் பிச்சை கேட்கும் உரிமைதான் அந்த வழி. ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு நிர்வாக யந்திரம் உள்ளது. இந்த நிர்வாகத்தில், தீண்டாதவர்கள் பரம்பரையாகத் தாழ்ந்த வேலைகளில்

ஈடுபடுத்தப்படுகிறார்கள். இதற்காக இவர்களுக்கு அளிக்கப்படும் ஊதியத்தின் ஒரு பகுதியாகத் தீண்டாதவர்கள் அனைவருக்குமாகச் சேர்த்து ஓரளவு நிலம் பண்டைக் காலத்திலிருந்தே ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த நிலத்தின் அளவு ஒரு போதும் அதிகரிக்கப்படாது. இந்த நிலமும் மிகப்பல துண்டுகளாகச் சிதறி அமைந்திருப்பதால், தீண்டாதவர்கள் அதைப் பயிர் செய்யாமல் விட்டுவிடுகிறார்கள். இதனுடன் சேர்ந்ததாகப் பிச்சை எடுக்கும் உரிமையும் கொடுக்கப்பட்டுள்ளது.

இது ஓர் அதிர்ச்சி தரும் உண்மை என்றாலும், இது தீண்டாதவர்களின் வழக்க முறையான உரிமையாகிவிட்டது. தீண்டாதவர் ஒருவர் அரசு வேலையில் அமர்த்தப்பட்டால் அவருக்கு ஊதியம் நிர்ணயிக்கும் போது பிச்சையெடுப்பதன் மூலம் அவர் பெறக்கூடிய உணவின் மதிப்பையும் அரசு கணக்கிலெடுத்துக் கொள்கிறது.

தீண்டத்தக்கவர்களிடமிருந்து உணவைப் பிச்சை எடுப்பதற்கான உரிமைதான் இப்போது இந்தியாவின் 6 கோடி தீண்டாத மக்களின் முதன்மையான வாழ்க்கை ஆதாரமாகும். கிராமத்தில் வழக்கமான உணவு நேரத்திற்குப் பின் போய்ப்பார்த்தால் தீண்டாதவர்கள், கூட்டம் கூட்டமாகச் சென்று இதைச் சொல்லிக் கொண்டு பிச்சை கேட்பதைக் காணலாம்.

தீண்டாதவர்களுக்கு வாழ்க்கை ஆதாரமாகக் கொடுக்கப்பட்ட இந்தப் பிச்சையெடுக்கும் உரிமை, ஒரு முறைமையாகவே ஆக்கப்பட்டுவிட்டது. மத்தியகால ஐரோப்பாவில் குறுநிலப் பகுதிகளின் பிரபுக்களின் கீழ், பரம்பரை நிலத் தொண்டூழியக்காரர்கள் இணைக்கப்பட்டிருந்தது போலத் தீண்டாதவர் குடும்பங்கள் கிராமத்திலுள்ள தீண்டத்தக்கவர்களின் பல்வேறு குடும்பங்களுடன் இணைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இணைக்கப்பட்ட தீண்டாதார் குடும்பங்கள், அந்தந்த் தீண்டத்தக்க குடும்பங்களின் கட்டளைப்படி நடக்கக் கடமைப்பட்டுள்ளன. இந்தத் தொடர்பு தனிப்பட்ட மனிதர்களுக்கிடையிலான தொடர்பாக மாற்றப்பட்டுவிட்டது. தீண்டத்தக்கவர் ஒருவர் தீண்டாதவர் ஒருவரை ' என்னுடைய ஆள் ' என்று - அவர் தமது அடிமை என்பது போலக் குறிப்பிட்டுப் பேசுவதைக் கேட்கிறோம். இந்தத் தொடர்பு, தீண்டாதவர்கள் தீண்டத்தக்க குடும்பங்களிடம் பிச்சை கேட்பதை ஒரு முறைமையாக உருவாக்க உதவியுள்ளது.

இதுதான், இந்துக்கள் மிகப் பெருமையாகப் பேசுகின்ற கிராமக் குடியரசு. இந்தக் குடியரசில் தீண்டாதவர்களின் நிலைமை என்ன ? அவர்களின் இடம் கடைசியானது மட்டுமல்ல, அதன் முக்கியத்துவமும் குறைந்தது. அவர்மீது தாழ்ந்தவர் என்ற முத்திரை குத்தப்பட்டு, ஒரு பெரும்பான்மையினருக்கு எத்தனை வழிகள் கிடைக்கின்றனவோ

அத்தனை வழிகளிலும், அவர் அந்தத் தாழ்ந்த நிலையில் அமுக்கிவைக்கப்படுகிறார். இந்தத் தாழ்ந்த நிலையில் வாழ்வது ஒரு தனிப்பட்டவருக்கு மட்டும் அன்றி, ஒரு வகுப்பு முழுவதற்கும் விதித்த விதியாக உள்ளது. வயது, தகுதி என்ற எதையுமே கருதாமல் தீண்டாதவர்கள் எல்லோருமே தீண்டத்தக்கவர்களைவிடத் தாழ்ந்தவர்களாக வைக்கப்படுள்ளனர். தீண்டத்தக்க இளைஞர் ஒருவர் தீண்டாதவரான முதியவரைவிட உயர்ந்தவராகக் கருதப்படுகிறார்; அதேபோலக் கல்விகற்ற தீண்டாதவர் ஒருவர் எழுத்து வாசனையே இல்லாத தீண்டத்தக்கவரை விடத் தாழ்ந்தவராகக் கருதப்படுகிறார்.

இப்போதுள்ள நிறுவப்பட்ட அமைப்பு முறை தீண்டத்தக்கவர்களால் செய்யப்பட்ட சட்டமாகும். தீண்டாதவர் அதை மதித்துக், கீழ்ப்படிந்து நடப்பதைத் தவிர அதில் வேறெந்தப் பங்கும் அவர்களுக்கு இல்லை.

தீண்டத்தக்கவர்களுக்கெதிராகத் தீண்டாதவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. அவர்களுக்குச் சமஉரிமை என்பது கிடையாது. தீண்டாதவர்களுக்கு உரிமையானதை அனுமதிக்க வழிசெய்யும் நீதி எதுவும் கிடையாது. தீண்டத்தக்கவர்கள் என்ன கொடுக்க மனம் இசைகிறார்களோ அதைத் தவிரத், தீண்டாதவர்களுக்கு உரிமையானது என்று எதுவும் இல்லை. தீண்டாதவர்கள் உரிமைகளை வலியுறுத்தக்கூடாது. தங்களுக்கு இரக்கமும் சலுகையும் காட்டவேண்டுமென்று அவர்கள் கும்பிட்டுக் கேட்டுக்கொள்ள வேண்டும்; என்ன கொடுக்கப்படுகிறதோ அதைப் பெற்றுத் திருப்தியடைய வேண்டும்.

இப்போதுள்ள இந்த அமைப்பு முறையில் அந்தஸ்தும் பணிகளும் பரம்பரை வழியாக வருகின்றன. தீண்டத்தக்கவர் என்றால் எப்போதுமே தீண்டத்தக்கவர்; தீண்டாதவர் என்றால் எப்போதுமே தீண்டாதவர்தான். பிராமணர் என்றுமே பிராமணர்தான், தோட்டி என்றுமே தோட்டிதான். இந்த அமைப்பில் உயர்ந்த பிறப்பைப் பெற்றவர்கள் உயர்ந்தவர்களாகவே உள்ளனர். தாழ்ந்த பிறப்பைப் பெற்றவர்கள் தாழ்ந்த நிலையிலேயே உள்ளனர். வேறு விதமாகச் சொன்னால், இந்த அமைப்பு முறை மாற்றமுடியாத கர்ம விதியை அல்லது நிரந்தரமாக நிர்ணயிக்கப்பட்ட தலைவிதியை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இந்தத் தலைவிதிக்கும் இதற்கு உட்பட்ட தனிநபரின் தகுதிகளுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. தீண்டாதவர் ஒருவர் அறிவிலும் ஒழுக்கத்திலும் எவ்வளவு உயர்ந்தவராக இருந்தாலும், அறிவிலும் ஒழுக்கத்திலும் தாழ்ந்தவரான தீண்டத்தக்கவர் ஒருவரைவிட, அந்தஸ்தில் குறைந்தவராகவே வைக்கப்படுகிறார். எவ்வளவுதான் ஏழையாக இருந்தாலும் தீண்டத்தக்கவர் ஒருவரின் அந்தஸ்து, எவ்வளவுதான் செல்வராக இருந்தாலும் தீண்டாதவர் ஒருவரின் அந்தஸ்தைவிட உயர்ந்ததே ஆகும்.

இதுதான், இந்தியக் கிராமத்தின் உட்புற வாழ்க்கையின் சித்திரம். இந்தக் குடியரசில் ஜனநாயகத்துக்கு இடமேயில்லை. இதில், சமத்துவத்துக்கு இடமே கிடையாது. இதில், சுதந்திரத்துக்கோ சகோதரத்துவத்துக்கோ இடம் இல்லவே இல்லை. இந்தியக் கிராமம், குடியரசின் தத்துவங்கள் எல்லாவற்றையும் மறுப்பதாக உள்ளது. இது ஒரு குடியரசு என்றால், தீண்டத்தக்கவர்களால் தீண்டத்தக்கவர்களுக்காக நடத்தப்படும் தீண்டத்தக்கவர்களின் குடியரசாகும். இது தீண்டாதவர்களைச் சுரண்டி வாழ்வதற்காக இந்துக்களால் உருவாக்கப்பட்ட ஒரு வகைக் காலனி ஆதிக்கமாகும். தீண்டாதவர்களுக்கு உரிமைகள் எதுவும் இல்லை. அவர்கள் வாழ்வதெல்லாம் காத்திருக்கவும், பணி செய்யவும் பணிந்து நடக்கவுமே. செய்வதற்கு அல்லது செத்து மடிவதற்கே அவர்கள் உள்ளனர். அவர்கள் கிராமக் குடியரசுக்கு வெளியே உள்ளவர்கள் என்பதால், அவர்களுக்கு உரிமைகள் இல்லை. குடியரசு என்று கூறப்படுகின்ற அதற்கு வெளியே உள்ளதால் அவர்கள் இந்து சமூகத்துக்கு வெளியே உள்ளனர். இது ஒரு விஷச் சக்கரம். ஆனால் இது மறுக்கமுடியாத உண்மை.

□□□

# இயல் - 5

## மனித உறவுக்குத் தகுதியற்றவர்கள்

முந்திய இயலில் விவரித்தபடி தீண்டாதவர்கள் இந்து சமூகத்துக்கு வெளியே உள்ளனர். ஆயினும் ஒரு கேள்வி எழுகிறது : இந்துக்களிடமிருந்து அவர்கள் எவ்வளவு தூரம் தள்ளி வைக்கப்பட்டுள்ளனர்? அவர்களுக்கு இந்துக்கள் என்ற முறையில் இல்லாவிட்டாலும், மனிதர்கள் என்ற முறையிலேனும் இந்துக்கள் எவ்வளவு மரியாதை அல்லது பரிவு காட்டுகின்றனர் ? இந்தக் கேள்விகளுக்கு விடை பெறாமல், தீண்டாதவர்களின் வாழ்க்கையைப் பற்றி முழுமையான சித்திரத்தைக் காணமுடியாது. கவனிக்க விரும்பும் எவரும் இந்தக் கேள்விகளுக்கான விடைகளை எளிதில் காணலாம். இதை எப்படிச் சொல்லுவது என்பதுதான் பிரச்சினையாகும். விளக்க உரையாகக் கூறுவதா, அல்லது உதாரணங்களை எடுத்துக்காட்டுவதா ? பின்னே கூறிய முறையையே நான் பின்பற்ற விரும்புகிறேன். பல உதாரணங்களைக் கூறிப் படிப்பவர்களைக் களைப்படையச் செய்ய நான் விரும்பவில்லை. நிலைமையை மிகத் தெளிவாக விளக்கும் சில உதாரணங்களையே நான் குறிப்பிடுவேன்.

முதல் உதாரணம் சென்னை மாநிலத்திலிருந்து வருகிறது. திரு.வெங்கடசுப்பா ரெட்டியும் மற்றும் சிலரும் ( இவர்கள் அனைவரும் இந்துக்கள் ) 1909 - இல் சென்னை உயர்நீதி மன்றத்தில் ஒரு மேல் முறையீட்டு மனு தாக்கல் செய்தனர். இடையூறு விளைவித்ததற்காக, 339 - ஆம் பிரிவின்படி, மாஜிஸ்ட்ரேட் விதித்த தண்டனையை எதிர்த்து

இவர்கள் மேல் முறையீடு செய்தார்கள். இவர்கள் மீது குற்றம் சாட்டியவரும் அவரது குழுவினரும் கூட சாதி இந்துக்களே. சென்னை உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பு[1] வழக்கின் விவரங்களை எடுத்துக் கூறி இந்துக்களின் முன் தீண்டாதவர்களின் நிலையை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

எனவே இந்தத் தீர்ப்பை மேற்கோளாகத் தருவது பொருத்தமாகும். தீர்ப்பு பின்வருமாறு :

“ மேல் முறையீடு செய்தவர்கள் ( வெங்கடசுப்பா ரெட்டியும் மற்றவர்களும் ) சிலரைச் சட்ட விரோதமான முறையில் தடுத்து வைத்திருந்ததற்காகத் தண்டனை அளிக்கப்பட்டுள்ளனர். ஒரு கோவிலுக்கருகே பொதுத் தெருவில் சில பறையர்களை[2] அவர்கள் நிற்கச் செய்தனர். வழக்கில் வாதியாக உள்ளவர், அந்தக் கோவிலிலிருந்து அந்தத் தெருவின் வழியே ஊர்வலம் ஒன்றை நடத்தாமல் தடுப்பது இதன் நோக்கம். பறையர்களின் பக்கமாகச் சென்றால் தமக்குத் தீட்டு ஏற்படும் என்ற அச்சத்தினால், வாதி அந்த ஊர்வலத்தை நடத்தவில்லை என்றும், வாதி தாம் செல்வதற்கு உரிமையுள்ள ஓரிடத்திற்குச் செல்லாமல் தடுக்கும் ஒரே நோக்கத்துடனேயே குற்றம் சாட்டப்பட்டவர் தெருவில் பறையர்களை நிற்கச் செய்தார் என்றும் தெரியவந்துள்ளது.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் சட்ட விரோதமான முறையில் தடுத்து வைத்த குற்றத்தைச் செய்ததாக நாம் நினைக்கவில்லை : நமது கருத்தின்படி, இந்தச் செயல் 339 - ஆம் பிரிவின் பொருளின்படி தடை ஏற்படுத்திய செயல் என்று கொள்ளத்தக்கதல்ல. பறையர்கள் ஒரு தடை அல்ல ; உண்மையில், வாதி, தமது ஊர்வலத்தை அவர்களைக் கடந்து நடத்திச் செல்வதைத் தடுக்கும்படியான எதுவும் இல்லை. அவர்கள் இருந்த இடத்தில் இருந்திட அவர்களுக்கு உரிமை உண்டு ; அவர்கள் அங்கே இருந்ததனால் ஊர்வலத்துக்குத் தீட்டு ஏற்படும் என்பதைத் தவிர, வாதிக்கு உடல் தீங்கு ஏற்படக்கூடும் என்ற அச்சத்தையோ அல்லது வேறு எந்த அச்சத்தையோ ஏற்படுத்தும் நோக்கம் இருந்ததாகக் கூறப்படவில்லை. வாதி, தாம் விரும்பிய இடத்துக்குப் போகாமல் தடுத்தது பறையர்கள் அங்கு இருந்தது அல்ல; அவர்களின் அருகே செல்வதற்கு அவருக்கு இருந்த விருப்பமின்மைதான் அதைத்தடுத்தது ;

1. பார்க்க :11 கிரிமினல் லா ஜர்னல், ப. 363.

2. பறையர்கள் சென்னை மாநிலத்தின் உள்ள தீண்டாத சமுதாயத்தினர்.

2. 'பறையர்கள்': சென்னை மாநிலத்தில் உள்ள தீண்டாத சமுதாயத்தினர் திரு. குப்புசுவாமி அய்யர் கூறியதுபோல, அவருடைய சொந்த விருப்ப முடிவுதான் அவரைக் கோவிலிலிருந்து புறப்பட்டுச் செல்லாமல் தடுத்தது ; தமது சொந்த சம்மதத்துடனேயே அவர் அங்கேயே இருந்துவிட்டார்; இது சுதந்திரமான சம்மதமாயிருப்பதைத் தடுப்பதற்கு, தீங்கு ஏற்படும் என்பதாகக் குற்றச் சட்டத்தின் பொருள் வரம்புக்கு உட்பட்ட அச்சம் எதுவும் இருக்கவில்லை. இவ்வாறு இன்றி, வேறு விதமாக இருந்தால் வாதியின் நிலையில் உள்ள ஒருவர், எந்த ஒரு பறையரும் தமது சொந்த வேலை காரணமாகப் பொதுத் தெருவில் சட்டபூர்வமாக இருக்கும்போது, தாம் அங்கே இருப்பதனால் தம்மருகே செல்லும்போது தீட்டு ஏற்படும் என்ற பயம் காரணமாக வாதி தடுக்கப்படுவார் என்று தெரிந்திருந்தும், அந்த இடத்தைவிட்டுப் போகும்படிச் சொல்லப்பட்டபோது அவ்வாறு செய்ய மறுத்தால், அவர் மீது தடை ஏற்படுத்தியதாகக் குற்றச்சாட்டுக் கூறமுடியும்.

இத்தகைய நிகழ்ச்சியில் சட்ட விரோமாகத் தடுத்துவைக்கும் செயல் எதுவும் இல்லை என்பது தெளிவு. வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர் பறையர்களைத் தெருவில் நிற்கச் செய்திருந்தார் என்பதால் இதில் மாற்றம் எதுவும் ஏற்படவில்லை என்று நாம் கருதுகிறோம்.[1]

எனவே, நாம் தண்டனையை ரத்து செய்து, அபராதம் செலுத்தப்பட்டிருந்தால் அதைத் திருப்பிக் கொடுக்க உத்தரவிடுகிறோம்."

இந்த வழக்கு மிகவும் விளக்கந்தருவதாக உள்ளது. வழக்கில் இரண்டு தரப்பினர் இருந்தனர். வெங்கடசுப்பா ரெட்டி ஒரு தரப்பின் தலைவர். இரு தரப்பினருமே சாதி இந்துக்கள். ஓர் ஊர்வலத்தை நடத்தும் உரிமை பற்றித் தாவா ஏற்பட்டுள்ளது. வெங்கடசுப்பா ரெட்டி தமக்கெதிரான தரப்பினர் ஊர்வலத்தை நடத்தாமல் தடுக்க விரும்பினார் ; ஆனால் அதை எப்படிச் செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை. இதற்குச் சரியான வழி, தீண்டாதவர்கள் சிலரைக் கொண்டு வந்து சாலையில் நிற்கச் செய்து, அங்கிருந்து நகராமலிருக்கும்படிக் கூறுவதே என்று அவருக்குத் தோன்றியிருக்கிறது. இந்த யோசனை பலித்தது ; எதிர்த் தரப்பினர் தீட்டு ஏற்படும் என்ற பயம் காரணமாக ஊர்வலத்தை நடத்தத் துணியவில்லை. பறையர்களைச் சாலையில் நிற்கச் செய்தது தடை ஏற்படுத்தும் செயல் அல்ல என்று சென்னை உயர் நீதிமன்றம் தீர்ப்பளித்தது என்பது வேறு விஷயம். பறையர்கள் அங்கு இருந்தார்கள் என்பதே இந்துக்களை

1. பறையர்களை நிற்கச் செய்திருந்ததே தடை ஏற்படுத்துவதற்குப் போதுமானது என்று கூறி விசாரணை மாஜிஸ்ட்ரேட் தண்டனை விதித்திருந்தார்.

விரட்டிவிடப் போதுமானதாயிருந்தது என்ற உண்மை மறுக்கமுடியாமல் உள்ளது. இதற்கு என்ன அர்த்தம் ? தீண்டாதவகளிடம், இந்துக்களுக்கு, முற்றிலுமான அறுவெறுப்பு உள்ளது என்பதே இதன் பொருள்.

இரண்டாவது உதாரணமும் இதேபோல் மிகுந்த விளக்கமளிப்பதாகும். இது, கத்தியவாரைச் சேர்ந்த தீண்டாதவரான பள்ளி ஆசிரியர் ஒருவர் சம்பந்தப்பட்டது.

திரு. காந்தி வெளியிடும் ' யங் இந்தியா ' பத்திரிகையின் 1929 டிசம்பர் 12-ஆம் தேதியிட்ட இதழில், பின்வரும் கடிதத்தில் இதன் விவரம் கூறப்பட்டுள்ளது. அந்த ஆசிரியர் அப்போது தான் பிரசவமாகியிருந்த தமது மனைவிக்கு மருத்துவ உதவி அளிக்க வருமாறு ஒரு இந்து டாக்டரை இணங்கச் செய்வதற்குத் தாம் பட்ட கஷ்டங்களையும், மருத்துவ உதவி கிடைக்காமல் மனைவியும் குழந்தையும் இறந்துபோனதையும் தமது கடிதத்தில் விவரித்திருக்கிறார். கடிதம் பின்வருமாறு கூறுகிறது :

" இந்த மாதம் 5 - ஆம் தேதி எனக்கு ஒரு குழந்தை பிறந்தது. 7 - ஆம் தேதி அவள் நோய் வாய்ப்பட்டு, பேதியாகிக் கொண்டிருந்தது. அவளுடைய ஜீவசக்தி மங்கிக்கொண்டு வருவதாகத் தோன்றியது ; நெஞ்சு வீங்கிப் போயிற்று. மூச்சுவிடுவதே கஷ்டமாகி நெஞ்சு எலும்புகளில் வலி ஏற்பட்டது. நான் டாக்டரை அழைக்கச் சென்றேன் - ஆனால் தாம் ஒரு ஹரிஜனின் வீட்டுக்கு வரமுடியாதென்று அவர் கூறிவிட்டார். குழந்தையைப் பரிசோதித்துப் பார்க்கவும் அவர் தயாராயில்லை. பின்பு நான் நகர்சேத்திடமும் கராசியா தர்பாரிடமும் சென்று எனக்கு உதவி செய்யும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டேன். நகர்சேத் டாக்டருக்குக் கொடுக்க வேண்டிய இரண்டு ரூபாய் கட்டணத்திற்குத் தாம் பொறுப்பேற்பதாக உத்தரவாதமளித்தார். அதன் பிறகு, ஹரிஜனக் காலனிக்கு வெளியில்தான் அவர்களைப் பரிசோதிக்க முடியும் என்ற நிபந்தனையுடன் டாக்டர் வந்தார். நான் என் மனைவியையும் புதிதாகப் பிறந்த குழந்தையையும் ஹரிஜனக் காலனிக்கு வெளியே கொண்டு சென்றேன். பிறகு டாக்டர் தமது தர்மாமீட்டரை ஒரு முஸ்லிமிடம் கொடுக்க, அவர் அதை என்னிடம் தர, நான் என் மனைவியிடம் கொடுத்தேன். அதைப் பயன்படுத்திய பின், இதே முறையில் டாக்டரிடம் அது திருப்பிக் கொடுக்கப்பட்டது. அப்போது இரவு எட்டு மணி. விளக்கு வெளிச்சத்தில் டாக்டர் தர்மாமீட்டரைப் பார்த்துவிட்டு நோயாளிக்கு நிமோனியா ஏற்பட்டிருப்பதாகக் கூறினார். பின்பு டாக்டர் திரும்பிச் சென்று மருந்து அனுப்பினார். நான் கடைத்தெருவிலிருந்து கொஞ்சம் ஆளிவிதை வாங்கி வந்து

நோயாளியின்மீது பயன்படுத்தினேன். டாக்டருக்கு நான் இரண்டு ரூபாய் கட்டணம் கொடுத்தேன் என்றாலும், அவர் பின்பு அவளைப் பார்க்க மறுத்துவிட்டார். இந்த நோய் ஆபத்தானது ; கடவுள் தான் எங்களுக்கு உதவுவார்.

என் வாழ்க்கையின் விளக்கு அணைந்துவிட்டது. அவள் இன்று பிற்பகல் இரண்டு மணிக்கு இறந்துவிட்டாள்."

தீண்டாதவரான ஆசிரியரின் பெயர் கொடுக்கப்படவில்லை. டாக்டரின் பெயரும் தெரிவிக்கப்படவில்லை. தம் மீது பழிவாங்கப்படும் என்று அஞ்சி அவர் கேட்டுக் கொண்டதன் காரணமாகவே பெயர் வெளியிடப்படவில்லை. ஆனால் இந்த உண்மைகள் மறுக்கமுடியாதவை. விளக்கம் எதுவும் தேவையில்லை. டாக்டர் கல்வி கற்றவராக இருந்தும்கூட, நோய்வாய்ப்பட்டு மிக ஆபத்தான நிலையிலிருந்த ஒரு பெண்ணிடம் தர்மாமீட்டரைத் தாமே பயன்படுத்தவோ, அவளுக்குச் சிகிச்சை அளிக்கவோ முடியாதென்று மறுத்துவிட்டார். அவர் சிகிச்சை அளிக்க மறுத்ததன் விளைவாக அந்தப் பெண் இறந்துவிட்டாள். தமது தொழிலுக்குரிய நடத்தைக் கோட்பாடுகளை ஒதுக்கித் தள்ளியதில் அந்த டாக்டருக்கு மனச்சாட்சியின் உறுத்தல் இல்லாமல் போய்விட்டது. ஒரு இந்து, தீண்டாதவர் ஒருவரைத் தொடுவதைவிட மனிதத்தன்மை அற்றவராக இருந்துவரவே விரும்புகிறார்.

மூன்றாவது உதாரணம் 1932 ஆகஸ்ட் 23 - ஆம் தேதியிட்ட ' பிரகாஷ் ' பத்திரிகையிலிருந்து தரப்படுகிறது :

" ஜபர்வால் வட்டம், ஜக்வால் கிராமத்தில் ஒரு கன்றுக்குட்டி கிணற்றுக்குள் விழுந்துவிட்டது. டோம்[1] சாதியைச் சேர்ந்த ராம் மகாஷயா அருகில் நின்றிருந்தார். அவர் உடனே கிணற்றில் குதித்துக் கன்றுக் குட்டியைத் தமது கைகளில் தூக்கிக் கொண்டார்.

மூன்று, நான்கு பேர் உதவிக்கு வந்தபின் கன்றுக்குட்டி பத்திரமாக வெளியே எடுக்கப்பட்டது. ஆனால் அந்தக் கிராமத்தின் இந்துக்கள் தங்கள் கிணறு தீட்டுப்பட்டுவிட்டது என்று கூப்பாடு போட்டு, அந்த அப்பாவி மனிதரைப் பழிவாங்கினார்கள். அதிர்ஷ்டவசமாக ஒரு பாரிஸ்டர் அங்கு வந்திருந்தார். அவர் சாதுராமைத் துன்புறுத்திக் கொண்டிருந்த ஆட்களைக் கண்டித்துப் பேசி, அவர்களை நிதானத்துக்குக் கொண்டு வந்தார். இவ்வாறாக, அவருடைய உயிர் காப்பாற்றப்பட்டது. இல்லையென்றால் என்ன நடந்திருக்கும் என்று சொல்லமுடியாது."

எது முக்கியமானது : தீண்டாதவர் கன்றுக்குட்டியைக் காப்பாற்றி கிணற்றைத் தீட்டுப்படுத்துவதா, அல்லது கன்றுக்குட்டியைச் சாகவிட்டு

1. 'டோம்' சாதி உத்தரப்பிரதேசம், பீகார் மாநிலங்களில் உள்ள தீண்டாத சமுதாயம்.

கிணறு தீண்டாதவரால் தீட்டுப்படாமல் காப்பாற்றுவதா ? இந்துக்களின் பார்வையில், தீண்டாதவர் கன்றுக்குட்டியைக் காப்பாற்றுவதற்காகக்கூட கிணற்றைத் தீட்டுப்படுத்துவதை விடக், கன்றுக்குட்டி இறப்பதே மேலாகும்.

இதே போன்ற மற்றொரு உதாரணம் ' பம்பாய் சமாசார் ' 1939 டிசம்பர் 19-ஆம் தேதி இதழில் செய்தியாக வெளியிடப்பட்டுள்ளது.

" கோழிக்கோட்டைச் சேர்ந்த காலடி கிராமத்தில், ஒரு இளம பெண்ணின் குழந்தை கிணற்றில் விழுந்துவிட்டது. அந்தப் பெண் தன் குழந்தையைக் காப்பாற்றும்படி அலறிக்கொண்டிருந்தாள்; ஆனால் அங்கே இருந்தவர்கள் யாரும் கிணற்றில் இறங்கத் துணியவில்லை. அந்த வழியாகச் சென்று கொண்டிருந்த ஒரு அயல் மனிதர் கிணற்றில் குதித்துக் குழந்தையைக் காப்பாற்றினார். பின்பு, அங்கிருந்தவர்கள், அவர் யார் என்று கேட்டபோது, தாம் ஒரு தீண்டாதவர் என்று அவர் தெரிவித்தார். அதைக் கேட்டவர்கள் குழந்தையைக் காப்பாற்றியதற்காக அவருக்கு நன்றி சொல்வதற்குப் பதில் அவர் கிணற்றைத். தீட்டுப்படுத்திவிட்டார் என்று அவரைத் திட்டி அடித்தார்கள்."

ஒரு இந்துவுக்குத் தீண்டாதவர் எவ்வளவு அசுத்தமானவர், தொடர்புக்குத் தகுதியற்றவர் என்பதைப் பின்வரும் சம்பவத்திலிருந்து காணலாம். லக்னோவிலிருந்து வெளியாகும் 'ஆதி இந்து ' பத்திரிகையின் 1937 ஜூலை இதழில் இந்தச் சம்பவம் பற்றி வெளியான செய்தி வருமாறு

" மெட்ராஸ் ஹோல்ம்ஸ் கம்பெனியில் வேலை பார்த்த ஒருவர் சமீபத்தில் காலமானார். அவர், தாம் உயர் சாதியைச் சேர்ந்தவர் என்று கூறிக்கொண்டவர். மயானத்தில் அவருடைய சிதைக்குத் தீ மூட்டப்பட்டபோது அவரது நண்பர்களும் உறவினர்களும் அதன் மேல் அரிசி போட்டார்கள். நண்பர்களில் ஒருவர் தீண்டாதவர்: சென்னை மாநிலத்தைச் சேர்ந்த ஆதி திராவிடர். அவரும் மற்றவர்களுடன் சேர்ந்து அரிசி போட்டார். அதைப் பார்த்த உள்ளூர் உயர்சாதி இந்துக்கள் அவர் சிதையைத் தீட்டுப்படுத்தி விட்டார் என்று அவரைக் கண்டித்தார்கள் இதைத் தொடர்ந்து சூடான வாக்குவாதம் ஏற்பட்டது. அது முற்றிப்போய் இரண்டு பேர் வயிற்றில் கத்தியால் குத்தப்பட்டார்கள்.இவர்களில் ஒருவர் மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்பட்டவுடனேயே இறந்துவிட்டார். மற்றவரின் நிலை அபாயமாயிருப்பதாகக் கூறப்படுகிறது."

இதைவிட மிக விளக்கமான மற்றொரு சம்பவம் உள்ளது. 1938 மார்ச் 6 - ஆம் தேதி பங்கிகளின் கூட்டம் ஒன்று பம்பாய், தாதரில் உள்ள கசர்வாடியில் ( கம்பளி ஆலையின் பின்புறம் ) திரு. இந்துலால் யாக்னிக்

தலைமையில் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் பங்கி சிறுவன் ஒருவன் தனது அனுபவங்களைப் பின்வருமாறு வர்ணித்தான் :

" நான், வெர்னாகுலர் இறுதித் தேர்வில் 1933 - இல் தேர்ச்சி பெற்றேன். நான் நான்காம் வகுப்புவரை ஆங்கிலம் படித்தேன். பம்பாய் நகரசபையின் பள்ளிக்கூடங்கள் கமிட்டிக்கு ஆசிரியர் வேலைக்கு நான் மனுச் செய்தேன். ஆனால் வேலை காலி இல்லாததால் எனக்கு வேலை கிடைக்கவில்லை. பின்பு நான் அகமதாபாத் பிற்படுத்தப்பட்ட வகுப்புகள் அதிகாரிக்கு தலாட்டி (பிராமப் பட்வாரி ) வேலைக்கு மனுச்செய்தேன். எனக்கு வேலை கிடைத்தது. 1936 பிப்ரவரி 19 ஆம் தேதி நான் கேதாமாவட்டம் போர்சாட் வட்டத்தின் மாம்லத்தார் அலுவலகத்தில் தலாட்டியாக நியமிக்கப்பட்டேன்.

என்னுடைய குடும்பம் பூர்விகமாக குஜராத்தைச் சேர்ந்தது என்றாலும், நான் இதற்குமுன் குஜராத்துக்குச் சென்றதில்லை. அதேபோல, அரசு அலுவலகத்தில் தீண்டாமை பின்பற்றப்படும் என்பதும் எனக்குத் தெரியாது. மேலும் என்னுடைய விண்ணப்பத்தில் நான் ஒரு ஹரிஜன் என்பதைக் குறிப்பிட்டிருந்ததால் என்னுடைய சக அலுவலர்கள் நான் யார் என்பதை அறிந்திருப்பார்கள் என்று எதிர்பார்த்தேன். எனவே, தலாட்டி வேலையில் சேருவதற்கு நான் சென்றபோது மாம்லத்தார் அலுவலகத்தின் எழுத்தர் காட்டிய மனப்பான்மை எனக்கு வியப்பளித்தது.

அந்த எழுத்தர் மிக இளக்காரத்துடன் " நீ யார்? " என்று கேட்டார். " ஐயா, நான் ஒரு ஹரிஜன்," என்று நான் பதில் கூறினேன். அதற்கு அவர் " விலகிப் போ, தூரமாக நில். எனக்கு இவ்வளவு அருகில் வருவதற்கு உனக்கு எவ்வளவு துணிச்சல் ! நீ அலுவலகத்தில் இல்லாமல் வெளியில் இருந்திருந்தால் உனக்கு ஆறு உதை கொடுத்திருப்பேன். இங்கே வேலை செய்ய வருவதற்கு என்ன துணிச்சல் ! " என்று சொன்னார். அதன்பின் அவர் என்னுடைய சான்றிதழையும் நியமன உத்தரவையும் தரையில் போடச் சொன்னார். பின்பு அவர் அவற்றை எடுத்துக் கொண்டார். போர்சாடில் மாம்லத்தார் அலுவலகத்தில் வேலை பார்த்தபோது குடிக்கத் தண்ணீர் பெறுவதற்கு நான் மிகவும் கஷ்டப்பட்டேன். அலுவலகத் தாழ்வாரத்தில் தண்ணீர் கேன்கள் வைக்கப்பட்டிருந்தன. அவை தண்ணீர்க்காரர் ஒருவரின் பொறுப்பில் இருந்தன. அலுவலகத்தில் உள்ள எழுத்தர்களுக்குத் தேவைப்படும்போது தண்ணீர் ஊற்றுவது அவருடைய வேலை. தண்ணீர்க்காரர் இல்லாதபோது அவர்களே போய் கேன்களிலிருந்து தண்ணீர் எடுத்துக் குடிக்கலாம். ஆனால், நான் அவ்வாறு செய்யமுடியாது. நான் தொட்டால் தண்ணீர்

தீட்டாகிவிடும் என்பதால் நான் கேன்களைத் தொடமுடியாது. எனவே நான் தண்ணீர்க்காரரின் தயவையே சார்ந்திருக்க வேண்டியிருந்தது. என்னுடைய உபயோகத்துக்காகத் துருப்பிடிந்த சிறிய பானை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. என்னைத் தவிர வேறு யாரும் அதைத் தொடவோ சுத்தம் செய்யவோ மாட்டார்கள். அந்தப் பானையில்தான் தண்ணீர்க்காரர் எனக்கெனத் தண்ணீர் ஊற்றுவார். ஆனால், தண்ணீர்க்காரர் இருந்தால் தான் எனக்குத் தண்ணீர் கிடைக்கும். எனக்குத் தண்ணீர் வழங்குவது அவருக்குப் பிடிக்கவில்லை. நான் தண்ணீர் கேட்க வருவதைப் பார்த்தால் அவர் அங்கிருந்து சென்றுவிடுவார். அப்போது எனக்குத் தண்ணீர் கிடைக்காது. இவ்வாறு பல நாட்கள் நான் குடிக்கத் தண்ணீர் இல்லாமல் இருக்க வேண்டியிருந்தது.

நான் வசிப்பதற்கு இடம் கிடைப்பதும் இதேபோலக் கடினமாயிருந்தது. போர்சாடில் நான் ஒரு அன்னியன். எந்தவொரு சாதி இந்துவும் எனக்கு வீடு வாடகைக்குக் கொடுக்க முன்வரவில்லை. போர்சாடில் உள்ள தீண்டாதவர்களும், நான் தங்குவதற்கு இடம் கொடுக்கத் தயாராயில்லை. இந்துக்களின் கோபத்துக்கு அவர்கள் அஞ்சினார்கள். நான் என்னுடைய நிலைக்கு மேலாக, ஒரு எழுத்தராக வாழ முயலுவது இந்துக்களுக்குப் பிடிக்காததே இதற்குக் காரணம். உணவு விஷயம் இதைவிடக் கடினமாயிருந்தது. நான் உணவைப் பெறக்கூடிய ஆளோ, இடமோ கிடையாது. காலையிலும் மாலையிலும் நான் ' பாஜா 'க்கள் வாங்கிச் சென்று, கிராமத்துக்கு வெளியே ஏதேனும் தனிமையான இடத்தில் வைத்து அவற்றை உண்டுவிட்டு, இரவில் மாம்லத்தார் அலுவலகத் தாழ்வாரத்தில் தரையில் படுத்து உறங்குவேன். இவ்வாறு நான்கு நாட்கள் சென்றன. என்னால் இவற்றையெல்லாம் தாங்கமுடியவில்லை. பின்பு, நான் என்னுடைய பூர்விக கிராமமான ஜேன்ட்ராலுக்கச் சென்று வசித்தேன். போர்சாடிலிருந்து அது ஆறு மைல் தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு நாளும் நான் பதினொரு மைல் நடக்கவேண்டியிருந்தது. ஒன்றரை மாதம் இவ்வாறு செய்து வந்தேன்.

அதன்பின் மாம்லத்தார் என்னை ஒரு தலாட்டியிடம் வேலைகற்பதற்கு அனுப்பிவைத்தார். அந்தத் தலாட்டி ஜேன்ட்ரால், காப்பூர், சைஜ்புர் ஆகிய மூன்று கிராமங்களுக்குப் பொறுப்பானவர். ஜேன்ட்ரால் அவருடைய தலைமை நிலையம். ஜேன்ட்ராலில் அந்தத் தலாட்டியுடன் நான் இரண்டு மாதங்கள் இருந்தேன். அவர் எனக்கு எதுவும் கற்றுக் கொடுக்கவில்லை. நான் ஒரு நாள்கூட கிராம அலுவலகத்திற்குள் செல்லவில்லை. கிராமத் தலைமை அதிகாரி என்மீது மிகவும் பகைமை காட்டினார். ஒரு முறை அவர் சொன்னார்: 'அடே, பயலே, உன் அப்பன், உன் அண்ணன் எல்லோரும் இந்தக்

கிராம அலுவலகத்தைப் பெருக்குகின்ற துப்புரவுத் தொழிலாளர்கள்: நீ இந்த அலுவலகத்தில் எங்களுடன் சமமாக உட்கார நினைக்கிறாயா? ஜாக்கிரதை ! இந்த வேலையை விட்டுவிடுவது உனக்கு நல்லது. ஒரு நாள் அந்தத் தலாட்டி சைஜ்புரின் மக்கள்தொகை அட்டவணை தயாரிப்பதற்காக என்னை அந்தக் கிராமத்திற்கு வரச் சொன்னார். நான் அங்கே சென்றபோது கிராமத் தலைமை அதிகாரியும் தலாட்டியும் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தார்கள். நான் அலுவலகத்தின் கதவருகே சென்று நின்று அவர்களுக்கு வணக்கம் கூறினேன். ஆனால் அவர்கள் என்னைக் கண்டுகொள்ளவில்லை. நான் சுமார் 15 நிமிட நேரம் வெளியிலேயே நின்று கொண்டிருந்தேன். நான் ஏற்கெனவே வாழ்க்கையில் சலித்துப் போயிருந்தேன். இவ்வாறு கவனிக்கப்படாமல் அவமானப்படுத்தப்பட்டதைக் கண்டு, மனத்தில் கோபம் பொங்கியது. அங்கே கிடந்த ஒரு நாற்காலியில் நான் உட்கார்ந்து கொண்டேன். நாற்காலியில் நான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துத் தலைமை அதிகாரியும் தலாட்டியும் என்னிடம் ஒன்றும் பேசாமல் அமைதியாக வெளியே சென்றனர். சிறிது நேரத்திற்குப் பின் அங்கே ஆட்கள் வரத்தொடங்கினார்கள்; விரைவிலேயே என்னைச் சுற்றிலும் ஒரு பெரிய கும்பல் கூடிவிட்டது. கிராம அலுவலகத்தின் நூலகர் அந்தக் கும்பலுக்குத் தலைவராக நின்றார். படித்த மனிதர் ஒருவர் இந்தக் கூட்டத்தை ஏன் கூட்டிவரவேண்டுமென்று எனக்குப் புரியவில்லை. அந்த நாற்காலி அவருடையது என்று, பின்பு எனக்குத் தெரியவந்தது. அவர் என்மீது கடுமையாக வசைமொழிகளைப் பொழிந்தார். ரவானியாவை (கிராமப் பணியாளரை) ப் பார்த்து ' இந்த பங்கி நாயை நாற்காலியில் உட்கார யார் அனுமதித்தது ? ' என்று கேட்டார். ரவானியா என்னைக் கீழே தள்ளிவிட்டு நாற்காலியை எடுத்துக் கொண்டார். நான் தரைமேல் உட்கார்ந்தேன். அதைத் தொடர்ந்து கூட்டத்தினர் கிராம அலுவலகத்திற்குள் நுழைந்து என்னைச் சூழ்ந்து கொண்டனர். அவர்கள் மிகவும் கோபமாயிருந்தனர். சிலர் என்னைத் திட்டினார்கள். சிலர் என்னை ' தர்யா ' வால் ( வாள் போன்ற கூர்மையான ஆயுதத்தால் ) துண்டு துண்டாக வெட்டிப் போட்டு விடுவதாகப் பயமுறுத்தினார்கள். நான் அவர்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, என்மேல் இரக்கம் காட்ட வேண்டிக் கொண்டேன். இதற்கெல்லாம் கூட்டத்தினரிடம் எந்தப் பலனும் ஏற்படவில்லை. என்னை எப்படிக் காப்பாற்றிக் கொள்வதென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் எனக்கு ஒரு யோசனை தோன்றியது. எனக்கு ஏற்பட்டுள்ள நிலைமை பற்றியும், கூட்டத்தினரால் நான் கொல்லப்பட்டால் என் உடலை என்ன செய்ய வேண்டும் என்பது பற்றியும் மாம்லத்தாருக்கு ஒரு கடிதம் எழுதுவதே இந்த யோசனை. இந்தக் கடிதத்தின் மூலம் மாம்லத்தாருக்குக் கூட்டத்தினருக் கெதிராக நான் அறிக்கை கொடுக்கிறேன் என்பதை

அவர்கள் உணர்ந்தால் அவர்கள் தங்கள் செயலை நிறுத்துவார்கள் என்பது என் மனத்தில் இருந்த நம்பிக்கை. ரவானியாவிடம் எனக்கு ஒரு காகிதம் கொடுக்கும்படிக் கேட்டேன். அவர் கொடுத்தார். என்னுடைய ஊற்றுப் பேனாவால் அதன்மீது எல்லோரும் படிக்கும்படியாகக் கொட்டை எழுத்துக்களில் பின்வருமாறு எழுதினேன் :

" மாம்லத்தார், போர்சாட் வட்டம், அவர்களுக்கு :

ஐயா,

பர்மர் காளிதாஸ் சிவராமின் பணிவான வணக்கங்கள். இன்று மரணத்தின் கை என்மேல் விழுந்து கொண்டிருக்கிறது என்பதைத் தங்களுக்குப் பணிவுடன் தெரிவிக்கிறேன். நான் என் பெற்றோரின் சொல்லைக் கேட்டிருந்தால் இப்படி ஆகியிராது. தயை செய்து என்னுடைய மரணச் செய்தியை என் பெற்றோருக்குத் தெரிவியுங்கள்."

நூலகர் நான் எழுதியதைப் படித்துவிட்டு அதைக் கிழித்துப் போடும்படி என்னிடம் சொன்னார். நான் அப்படியே செய்தேன். அவர்கள் என்மீது எண்ணற்ற வசைச் சொற்களைப் பொழிந்தார்கள். ' உன்னை நாங்கள் தலாட்டி என்று அழைக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறாயா ? நீ ஒரு பங்கி. நீ இந்த அலுவலகத்தில் வந்து இந்த நாற்காலியில் உட்கார நினைக்கிறாயா ?, நான் அவர்களை என்மேல் இரக்கம் காட்டும்படி வேண்டினேன். இனிமேல் இப்படிச் செய்யமாட்டேன் என்று உறுதி கூறினேன். வேலையை விட்டுவிடுவதாகவும் உறுதியளித்தேன். ஏழு மணிவரை என்னை அங்கேயே இருக்கவைத்துப் பின்புதான் கூட்டத்தினர் சென்றனர். அதுவரை தலாட்டியும் தலைமை அதிகாரியும் முக்கியாவும் வரவில்லை. பின்பு நான் பதினைந்து நாட்கள் விடுப்பு எடுத்துக் கொண்டு பம்பாயில் உள்ள என் பெற்றோரிடம் திரும்பிச் சென்றேன்."

தீண்டாதவர்கள் பற்றி இந்துக்கள் கொண்டுள்ள சமூக மனப்பான்மையில் மற்றொரு முக்கிய அம்சம் கவனிக்கத்தக்கது. பின்வரும் உதாரணங்கள் இந்த மனப்பான்மையைத் தெளிவாகக் காட்டும். 1943 செப்டம்பர் 8 - ஆம் தேதி ' அல்பஜால் ' பத்திரிகையில் வெளியான செய்தி :

" ஒரு கிராமத்தின் இந்துக்கள் ஒரு தீண்டாதார் குடும்பத்தைத் தாக்கியதாக நாசிக்கிலிருந்து செப்டம்பர் 1 - ஆம் தேதி செய்தி வந்தது. அவர்கள் வயதான ஒரு பெண்ணின் கைகளையும் கால்களையும் கட்டிப்போட்டு, அவளை ஒரு மரக்கட்டைக் குவியலின்மேல்

உட்காரவைத்து அதற்குத் தீ வைத்தார்கள். அந்தக் கிராமத்தில் காலரா வந்ததற்கு அவள்தான் காரணம் என்று அவர்கள் நினைத்ததே இதற்குக் காரணம்."

" கைரா ஆப் இந்தியா " 1946 ஆகஸ்ட் 29 - ஆம் தேதி : குடியிருப்பு சாதி இந்துக்களால் தாக்கப்பட்டது. ஹரிஜனங்கள் சந்தேகித்து இந்தத் தாக்குதலை நடத்தினார்கள்.

சுமார் 200 பேர் தடிகளை ஏந்தி வந்து ஹரிஜனக் குடியிருப்பைத் தாக்கி, வயதான ஒரு பெண்ணை மரத்தில் கட்டிவைத்து அவளுடைய பாதங்களைத் தீயிட்டுப் பொசுக்கினார்கள். மற்றொரு பெண்ணும் அவர்களால் அடிக்கப்பட்டாள்.

ஹரிஜனங்கள் பயந்து போய் அந்தக் கிராமத்திலிருந்து வெளியேறிச் சென்றார்கள். மாவட்ட ஹரிஜன சேவாசங்கத்தின் செயலாளர் திரு. சோட்டாபாய் பட்டேலுக்கு இந்த நிகழ்ச்சிகள் பற்றி விவரம் தெரிவிக்கப்பட்டது. அவர் ஹரிஜனங்களைக் கிராமத்திற்குத் திரும்பக் கூட்டிக் கொண்டு வந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்று அதிகாரிகளுக்கு மனுச் செய்திருக்கிறார்.

மற்றொரு கிராமத்திலிருந்தும் இதேபோன்ற சம்பவம் பற்றிச் செய்தி வந்துள்ளது. அங்கு ஹரிஜனங்கள் கடுமையாக அடிக்கப்பட்டார்கள்.

விஷயம் அத்துடன் முடிந்து போகவில்லை. மீண்டும் வன்முறை ஏற்பட்டது. இதில் மொத்த இந்துக்களும் தீண்டாதோர்மீது தாக்குதல் நடத்துவதில் கலந்து கொண்டதாகத் தெரிகிறது.

இது பற்றி 1946 செப்டம்பர் 22-ஆம் தேதி " பாரத் ஜோதி "யில் வெளியான செய்தி கீழே தரப்படுகிறது :

" கைரா மாவட்டம் போர்சாட் வட்டத்தின் ஒரு கிராமத்தில் கிராமவாசிகள் கூட்டம் ஒன்று ஹரிஜனங்களை அரிவாள்களும் கம்புகளும் கொண்டு தாக்கியதில் ஒரு பெண் உட்பட ஐந்து ஹரிஜனங்கள் கடுமையாகக் காயமடைந்தனர் என்று போர்சாட் வட்ட ஹரிஜன சேவா சங்கத்தின் செயலாளருக்குச் செய்தி கிடைத்துள்ளது. கிராமத்தில் ஏழு எருமைகள் இறந்து போனதைத் தொடர்ந்து இந்தத் தாக்குதல் நடந்தது. ஹரிஜனங்களின் மந்திரவாத வேலையால்தான் எருமைகள் இறந்தன என்று இந்துக்கள் நினைத்தார்கள்.

காயமடைந்தவர்கள் மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டுள்ளனர். காவல் துறையினர் அந்தக் கிராமத்துக்கு விரைந்தனர். சிலர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

ஹரிஜனங்கள் அதிகாரிகளிடம் ஏதேனும் புகார் செய்தால் அவர்களை உயிருடன் எரித்துவிடப்போவதாகக் கிராமவாசிகள் மிரட்டிவருவதாகத் தெரிகிறது.

இத்தகைய நிகழ்ச்சிகள் கைரா மாவட்டத்தில் அடிக்கடி நடக்கின்றன. ஹரிஜனங்கள் இவ்வாறு துன்புறுத்தப்படுவதைத் தடுப்பதற்குக் கடுமையான நடவடிக்கை எடுக்குமாறு காவல்துறை மற்றும் நிர்வாகத்துறை அதிகாரிகள் அனைவருக்கும் கைரா மாஜிஸ்ட்ரேட் உத்தரவிட்டிருக்கிறார்."

இந்த உதாரணங்களெல்லாம் சொல்லுகின்ற கதை எளிமையானது, தெளிவானது. இதைப்பற்றிக் கருத்துரை எதுவும் கூறத்தேவையில்லை. சராசரியான இந்துவின் கருத்தில் தீண்டாதவர் மனித உறவுகளுக்குக் கூடத் தகுதியில்லாதவர். அவர் தீமையின் இருப்பிடம். அவர் மனிதரே அல்ல. அவரைவிட்டு விலகியேயிருக்கவேண்டும்.

□□□

# பிரிவு - 2

## இயல் - 6

### தீண்டாமையும் சட்டங்கெட்ட செயல்களும்

இவ்வளவு பெருமளவில் சமத்துவமின்மை நிறைந்த அமைப்பு எப்படி நிலைத்து நீடிக்க முடிந்தது என்று வியப்படைவோர் பலர் இருப்பார்கள். அதற்கு ஆதரவாக உள்ள சக்திகள் என்ன ? இந்த அமைப்பைக் காப்பாற்றும் சக்திகளில் மிக முக்கியமானது, இதை எப்படியாவது பாதுகாத்து வைக்கவேண்டும் என்பதில் இந்துக்கள் கொண்டுள்ள உறுதியாகும். தீண்டாதவர்கள் இந்த அமைப்பை மிகச் சிறிதளவேனும் மாற்றுவதற்கு எப்போது முயற்சி செய்தாலும் இந்துக்கள் அதை ஒடுக்குவதற்கு எல்லா வழிகளையும் பின்பற்றத் தயாராக உள்ளனர். சாதாரணமாக அஹிம்சையைப் பின்பற்றும் இந்து, தீண்டாதவர்களுக்கெதிராக மிகக் கொடுமையான வன்முறையைப் பின்பற்றத் தயங்கமாட்டார். நிறுவப்பட்ட அமைப்பைப் பாதுகாப்பதற்கு அவர்களுக்கெதிராக எந்தக் கொடுமையையும் அவர் இழைப்பார். பலர் இதை உண்மையில் நம்பமாட்டார்கள். ஆனால் இது உண்மை. இதைப்பற்றி ஏதேனும் சந்தேகம் கொள்ளக்கூடியவர்களுக்காக, தீண்டாதவர்களுக்கெதிராக இந்துக்கள் செய்த கொடுமைகளையும் அடக்குமுறைகளையும் பற்றி அவ்வப்போது செய்தித் தாள்களில் வந்த சில சம்பவங்களைக் கீழே தருகிறேன் :

I

பின்வரும் செய்தி தில்லியிலிருந்து வெளியாகும் 'தேஜ்' பத்திரிகையில் 1927 செப்டம்பர் 27 - ஆம் தேதி வெளியிடப்பட்டது ;

" வைக்கத்தில் உள்ள சிவன் கோவிலுக்கு மிக அருகில் ஹரிஜனங்கள் வந்ததன் மூலம் அதைத் தீட்டுப்படுத்திவிட்டார்கள். கோவிலில் மீண்டும் பூஜைகள் நடத்துவதற்கும் தகுதியாக அதைச் சுத்தப்படுத்துவதற்கு பெரும் செலவில் விரிவான அளவில் சாந்தி சடங்குகள் நடத்தவேண்டும் என்று அந்தப் பகுதியின் இந்துக்கள் முடிவுசெய்துள்ளனர்."

' பிரதாப் ' பத்திரிகையின் செய்தியாளர் தந்த பின்வரும் செய்தி 1932 செப்டம்பர் 2-ஆம் தேதி இதழில் வெளியிடப்பட்டது :

" மீரம், ஆகஸ்ட் 1932, ஜன்மாஷ்டமி தினத்தன்று சாதி இந்துக்களின் கோவிலுக்குள் நுழைய ஹரிஜனங்கள் சிலர் முயற்சி செய்தார்கள். ஆனால் அதன் விளைவாகப் பரவலாகக் கலவரங்கள் நடந்ததைத் தவிர வேறு பலன் ஏதும் ஏற்படவில்லை. இந்த ஆண்டு தங்களுக்குக் கோவில் கதவுகள் திறந்துவிடப்படவில்லை என்றால் சத்தியாக்கிரகம் நடத்துவதென்று உள்ளூர் தலித் சங்கம் தீர்மானித்துள்ளது. இந்துக்கள் இதை அறிந்தபோது அவர்கள் ஹரிஜனங்களின் முயற்சியை முறியடிப்பதற்குத் திட்டமிடத் தொடங்கினார்கள். கடைசியாக ஜன்மாஷ்டமியன்று இரவில் ஹரிஜன சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் ஊர்வலமாக வந்து கோவிலில் உள்ள கடவுள்களுக்கு அருகே செல்ல முயற்சி செய்தார்கள். ஆனால், கோவில் புரோகிதர்கள் அவர்களை உள்ளேவிட மறுத்தார்கள். "நீங்கள் வெளியே தெருவில் நின்று கொண்டு சுவாமிகளைத் தரிசிக்கலாம்," என்று அவர்கள் சொன்னார்கள். இதைத் தொடர்ந்து அங்கே ஒரு பெரிய கூட்டம் கூடிவிட்டது. ஹரிஜனங்கள் கோவிலுக்குள் நுழைய முயற்சி செய்தார்கள். இரு தரப்பினருக்குமிடையே மோதல் ஏற்பட்டு பெரிய அடிதடியாகிவிட்டது."

இந்துக்கள் தங்களுடைய ஆலயங்களில் தீண்டாதவர்கள் நுழைய அனுமதிப்பதில்லை. தீண்டாதவர்கள் தங்களுக்குச் சொந்தமாகக் கோவில்கள் அமைத்துக்கொண்டு அவற்றில் கடவுள்களின் உருவங்களை நிறுவிக்கொள்ள இந்துக்கள் அனுமதிப்பார்கள் என்று நினைக்கக்கூடும். ஆனால், இது தவறாகும். இந்துக்கள் இதையும் அனுமதிப்பதில்லை. இதற்கு உதாரணமாக இரண்டு சம்பவங்களைக் காட்டுவது போதுமானதாகும். ஒன்று, 1923 பிப்ரவரி 12 - ஆம் தேதி 'பிரதாப் ' பத்திரிகையில் வெளியிடப்பட்டது :

" ஆக்ரா மாவட்டத்தில் ஒரு பிராமணர் தமது இல்லத்தில் விஷ்ணுவின் உருவம் ஒன்றை வைத்துப் பூஜை செய்வதைக் கண்ட சமார் ஒருவர் தாமும் அதேபோல் செய்யத்தொடங்கினார். அந்தப் பிராமணருக்கு இது தெரிய வந்தபோது அவர் மிகவும் கோபமடைந்தார். கிராமவாசிகள் பலரின் உதவியுடன் அந்த அப்பாவி ஹரிஜனைப் பிடித்து 'விஷ்ணு பகவானைப் பிரீதி செய்ய முயலுவதற்கு உனக்கு என்ன துணிச்சல்?' என்று கூறி அவருக்கு நன்றாக அடிகொடுத்தார். கடைசியாக, அவர்கள் அவரது வாயில் அசுத்தத்தை வைத்து அடைத்து அவரைப் போகவிட்டார்கள். கொடுமைகளைத் தாங்கமுடியாத அந்தச் சமார், இந்து சமயத்தைக் கைவிட்டு இஸ்லாமைத் தழுவினார்."

மற்றொரு சம்பவம் 1939 ஜூலை 4 - ஆம் தேதி " ஹிந்து " பத்திரிகையில் வெளியிடப்பட்டது :

" பெல்லாரி மாவட்ட ஹரிஜன் ஆலோசனை வாரியத்தின் கூட்டம் 1939 ஜூன் 29 - ஆம் தேதி மாவட்ட ஆட்சித் தலைவரின் பங்களாவில் நடைபெற்றது. கமிட்டியின் தலைவரும் மாவட்ட ஆட்சித் தலைவருமான திரு. ஏ.டி. குரோம்பி, சி.ஐ.அ., ரு.சி.எஸ். தலைமை தாங்கினார்.

நாராயணதேவரகேரியைச் சேர்ந்த ஹரிஜனங்கள், தாங்கள் கட்டாயமாக வேலை செய்யவைக்கப்படுவதாகவும், லேவாதேவிக்காரர்களால் தொல்லைக்கு உள்ளாக்கப்படுவதாகவும் கூறியுள்ள புகார்கள் உள்ளிட்ட எல்லாப் புகார்கள் பற்றியும் நடவடிக்கை எடுப்பதற்கு அதிகாரப்பூர்வ அறிக்கை கோருவதென்று கமிட்டி முடிவுசெய்தது.

குடத்தினி கிராமத்தில் வசிக்கும் ஹரிஜனங்களுக்கு ஏற்படும் சமயரீதியான இடர்ப்பாடுகள் கமிட்டியின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டன. ஹரிஜனங்கள் தங்கள் குடியிருப்பில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பே ஒரு கோவில் கட்டியிருப்பதாகவும், அதில் நிறுவுவதற்குக் கடவுள் சிலை கோவிலில் தயாராக இருந்தும்கூட அதை நிறுவமுடியவில்லை என்றும் கூறப்பட்டது. சிலையை நிறுவுவதற்குமுன் ஹரிஜனங்கள் அதைக் கிராமத்தில் ஊர்வலமாக எடுத்துச் செல்வதற்கு இந்துக்களில் ஒரு சாரார் எதிர்ப்புத் தெரிவிப்பதே இதற்குக் காரணம் என்றும் கூறப்பட்டுள்ளது.'

## II

இந்துக்களின் கிணற்றிலிருந்து தீண்டாதவர்கள் தண்ணீர் எடுப்பதற்குச் செய்யும் முயற்சி எதையும் இந்துக்கள் எப்படி எதிர்க்கிறார்கள் என்பதைப் பின்வரும் சம்பவங்களிலிருந்து காணலாம்.

முதல் சம்பவம் 1923 பிப்ரவரி 12 - ஆம் தேதி ' பிரதாப்' பத்திரிகையில் வெளியிடப்பட்டது :

" மகாஷய சேதிலால்ஜி பின்வரும் செய்தியை அனுப்பியிருக்கிறார் சமார் ஒருவர், கடவுள் சிலையை வழிபடச் சென்று கொண்டிருந்த போது வழியில் அவருக்குத் தாகம் ஏற்பட்டது. அவர் தம்மிடமிருந்த இரும்பு வாளியை ஒரு கிணற்றில் போட்டுத் தண்ணீர் எடுத்தார். அதைப் பார்த்த உயர் சாதி இந்து ஒருவர் அவரைத் திட்டினார். பின்பு அவருக்கு நன்றாக அடிகொடுத்து ஒரு அறையில் வைத்துப் பூட்டிவிட்டார்கள். தற்செயலாக அந்த வழியாகச் சென்று கொண்டிருந்த நான் அவரை ஏன் பூட்டி வைத்திருக்கிறார்கள் என்று கேட்டேன். அவர் எங்கள் கிணற்றில் தம்முடைய வாளியைப் போட்டுத் தண்ணீர் எடுத்து மதத்தை அவமதித்தார் என்று திவான்சாகிப் பதிலளித்தார்."

இந்துக்களின் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்கத் துணியும் தீண்டாதார்மீது இந்துக்கள் நடத்தும் தாக்குதலில் இந்துப் பெண்களும் கலந்து கொள்ளத் தயங்கமாட்டார்கள். ' பிரதாப் ' பத்திரிகையில் 1932 பிப்ரவரி 26 - ஆம் தேதி வெளியான பின்வரும் செய்தியைப் பாருங்கள் :

" 1932 பிப்ரவரி 17 - ஆம் தேதி புல் பஜ்வான் கிராமத்தில் மிகவும் சோகமான ஒரு சம்பவம் நடந்தது. மகாஷய ராம்லால் ஒரு கிணற்றில் தண்ணீர் எடுக்கச் சென்றபோது இது நடந்தது. அதே கிணற்றில்தான் 1932 ஜனவரி 13 - ஆம் தேதி மகாஷய ராம்லாலையும் அவரது நண்பர் பண்டிட் பன்சிலாலையும் சில ராஜபுத்திரர்கள் அடித்திருந்தார்கள். அந்தச் சம்பவத்தின் போது ராஜபுத்திரப் பெண்களின் கூட்டம் ஒன்று கழிகளையும் குச்சிகளையும் எடுத்துக் கொண்டு வந்து மகாஷயாவுக்குக் கொடுத்த அடியை வர்ணிக்க முடியாது. அவர்கள் அடித்து முடித்தபோது அவரது உடம்பெல்லாம் ரத்தமாகியிருந்தது. இப்போது அவர் புக்லியான் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவருகிறார்."

கிணற்றிலிருந்து தீண்டாதவர்கள் தண்ணீர் எடுப்பதற்கு உள்ள உரிமையைப் பயன்படுத்துவதற்கு அரசு அதிகாரி ஒருவர் ஆதரவாக இருந்தால் கூட அவர்கள் தாக்குதலிலிருந்து தப்ப முடியாது என்பது பின்வரும் சம்பவத்திலிருந்து தெளிவாகிறது. ' மிலாப் ' பத்திரிகையில் 1924 ஜுன் 7 - ஆம் தேதி வெளியான செய்தி :

" சில நாட்களுக்குமுன் கால்வாய்த் துறையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் சபா வட்டத்தில் உள்ள ராகியான் கிராமத்துக்குச் சென்றார். அவர், ஒரு கிணற்றிலிருந்து தண்ணீர் இறைப்பதில் உதவும்படி, மேகா சாதியைச் சேர்ந்த தீண்டாதவர்கள் சிலருக்கு உத்தரவிட்டார். முதலில்

அவர்கள் மறுத்தார்கள். ஆனால் அந்த அதிகாரி அவர்களைக் கடுமையாகக் கண்டித்து, தண்ணீர் இறைக்குமாறு கட்டாயப்படுத்தினார். மறுநாள் இந்துக்கள் அந்தக் கிணற்றினருகே கூடி, ஒரு சௌக்கிதார் மூலம் அந்த மேகாக்களைக் கூப்பிட்டனுப்பினார்கள். கிணற்றின் அருகே செல்வதற்கு அவர்கள் ஏன் துணிந்தார்கள் என்று இந்துக்கள் கேட்டார்கள். அவ்வாறு செய்யும்படித்தாங்கள் கட்டாயப் படுத்தப்பட்டதாகவும், அது தங்களுடைய குற்றம் அல்ல என்றும் ஒரு மேகா கூறினார். இப்படி எதிர்த்துப் பதில் கூறியதற்காக இந்துக்கள் அவரைக் கம்புகளாலும் கைகளாலும் அடித்து நொறுக்கினார்கள். இதை எழுதுகின்ற நேரம் வரையிலும் அவர் நினைவிழந்துகிடக்கிறார். காயங்கள் இலேசானவைதான் என்று டாக்டர் கூறினார் என்றாலும் கொலை முயற்சி, சட்ட விரோதக் கூட்டம் ஆகிய குற்றங்களைக் குறிப்பிட்டு காவல் துறையிடம் புகார் செய்யப்பட்டுள்ளது. ஆனால் காவல் துறையினர் இந்தப் புகாரைப் பொருட்படுத்தவில்லை. காவல் துறையினரின் அலட்சியப் போக்கு மேகா மக்களிடையே மிகுந்த பாதுகாப்பற்ற உணர்வை ஏற்படுத்தியுள்ளது. கிராமவாசிகளும் மேகா மக்களை மிகவும் தொல்லைகளுக்கு உள்ளாக்கி வருகிறார்கள். அவர்களுடைய கால்நடைகளைக்கூடத் தண்ணீர் குடிக்கவிடாமல் எல்லாக் கிணறுகளையும் குளங்களையும் அடைத்துவைத்துள்ளனர்.

தீண்டாதவர்கள் இந்துக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க முடியாது என்பது மட்டுமல்ல. அவர்கள் தங்களுக்கெனச் செங்கல் சுவர் கொண்ட கிணற்றைக் கட்டிக் கொள்வதற்குப் பணம் இருந்தாலும் கூட, அத்தகைய கிணற்றைக் கட்டிக் கொள்ளக் கூடாது. அவ்வாறு செய்வது தீண்டாதவர்கள் தங்களை இந்துக்களின் நிலைக்கு உயர்த்தும் முயற்சியாகக் கருதப்பட்டது. இது நிலைநிறுத்தப்பட்ட அமைப்பு முறைக்கு முரணானதாகும்.

1934 ஜுன் 6 - ஆம் தேதி " மிலாப் " பத்திரிகை பின்வரும் நிகழ்ச்சிகள் பற்றி செய்தி வெளியிட்டது.

" லாலா ராம்பிரசாத்ஜி, செயலாளர், அச்சூத் உதாரக் கமிட்டி, பஞ்சாப், பின்வருமாறு எழுதுகிறார் :

" இந்தக் கோடை காலத்தின் போது தண்ணீர் கிடைப்பது பெரிய பிரச்சினையாகி வருகிறது என்று எல்லா இடங்களிலுமிருந்து புகார்கள் வருகின்றன. தாழ்த்தப்பட்ட வகுப்பு மக்கள் தங்களுக்கென்று சொந்தமான கிணறு இல்லாததால், கைகளில் பானைகளை வைத்துக் கொண்டு கிணறுகளின் அருகே உட்கார்ந்திருக்கிறார்கள். யாரேனும் மனமிரங்கிக் கொஞ்சம் தண்ணீர்

ஊற்றினால் நல்லது ; இல்லையென்றால் வேறொன்றும் செய்யமுடியாமல் உட்கார்ந்திருக்கிறார்கள். சில இடங்களில் இவர்கள் காசு கொடுத்தால்கூட யாரும் தண்ணீர் ஊற்ற அனுமதிக்கப்படுவதில்லை. யாரேனும் ஊற்றினால் கடும் சண்டை ஏற்படுகிறது. கிராமக் கிணற்றை இவர்கள் பயன்படுத்தக் கூடாது என்று தடுக்கப்படுவது மட்டுமின்றி, தங்களுடைய சொந்தப் பணத்தைச் செலவிட்டுத் தங்களுக்கென கிணறு அமைத்துக் கொள்ளவும் அனுமதிக்கப்படுவதில்லை."

1924 ஏப்ரல் 21 - ஆம் தேதி " தேஜ் " பத்திரிகையில் வெளியான பின்வரும் செய்தியும் இதைப் போன்றதே :

" ஓபட் கிராமத்தில் சமார் மக்கள் சுமார் 250 பேர் இருக்கிறார்கள். ஒன்றரை மாதத்திற்கு முன் அவர்கள் முஸ்லிம் தண்ணீர் தூக்கிகளின் தோல் பைகளிலிருந்து தண்ணீர் குடிப்பதை (ஆர்ய சமாஜ் பண்டிதர்களின் யோசனை காரணமாக ?) நிறுத்திவிட்டார்கள். இப்போது அவர்களுக்குத் தண்ணீர் கிடைப்பது பெரிய பிரச்சினையாக உள்ளது. கிராமத்தின் ஜாட் மக்கள் கிராமக் கிணற்றிலிருந்து சமார்கள் தண்ணீர் எடுக்க அனுமதிப்பதில்லை. அது மட்டுமின்றி அவர்கள் தாங்களே சொந்தமாகக் கிணறு அமைத்துக் கொள்ளவும் அனுமதிப்பதில்லை. பரிதாபத்துக்குரிய சமார்கள் குளங்களிலும் பள்ளங்களிலும் கிடைக்கும் தண்ணீரைக் குடித்து உயிர்வாழ்கிறார்கள். நேற்று, தலித் சுதார் ( ஹரிஜன முன்னேற்ற) கமிட்டியின் செயலாளர் டாக்டர் சுக்தேவ்ஜி உபாடுக்கு வந்து விசாரணை நடத்தினார் ; அவர் எல்லாவற்றையும் தமது கண்களாலேயே பார்த்தார். சமார்களின் நிலைமை வார்த்தைகளில் சொல்லமுடியாத அளவுக்கு மிகவும் பரிதாபமாக இருப்பதையும், ஜாட்கள் அவர்களைக் கொடுமைப்படுத்துவது கண்ணெதிரே காணும் உண்மையாக இருப்பதையும் அவர் கண்டார்."

பின்வரும் செய்தி " டைம்ஸ் ஆப் இன்டியா " வில் 1931 மே 9 - ஆம் தேதி வெளியாகியிருந்தது :

" பரோடா சமஸ்தானத்தில், அண்டையில் உள்ள பிரிட்டிஷ் பிரதேசத்தில் உள்ளதைவிடத் தீண்டாதவர்கள் நல்ல முறையில் நடத்தப்படுவதாகக் கருதப்படுகிறது. அந்த சமஸ்தானம் அந்த்யஜாக்களுக்கு சாதி மக்களுடன் சமத்துவம் அளித்து சட்டம் இயற்றியுள்ளது. ஆயினும் பத்ராஸ்தாலுகாவில் ஒரு அந்த்யஜா பெண்ணின் வயலில் உள்ள பயிர் தீயிட்டு எரிக்கப்பட்டது ; அந்தப் பெண்ணும் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டார். இதற்கெல்லாம் காரணம் அந்தப் பெண் தன்னுடைய மகனான சிறு பையனை உள்ளூர்த் தொடக்கப் பள்ளிக்கு அனுப்பியதேயாகும். இனி, காடி

பகுதியைச் சேர்ந்த சனாஸ்மாவிலிருந்து ஒரு துயரக்கதை. அங்கு அந்த்யஜாக்களின் உழைப்பினால் ஒரு ஊற்றுக்கிணறு தோண்டப்பட்டு கட்டப்பட்டது. அவர்கள் அந்தக் கிணற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று வாக்களிக்கப்பட்டது. ஆனால் கிணறு பயன்படுத்தத் தயாரானதும் அது அவர்களுக்கல்ல என்று கூறப்பட்டது. அவர்கள் பஞ்சாயத்தாரிடம் புகார் செய்தார்கள். அவர்கள் 500 அடி நீளக் குழாய் ஒன்றைப் போட்டு அதன் முடிவில் தங்களுக்கென்று தனியாக தண்ணீர் பிடிக்கும் குழாய் பொருத்திக் கொள்ளலாம் என்று அவர் தாராளமனத்துடன் அனுமதித்தார். ஆனால் தண்ணீர்க்குழாய் அமைந்த இடத்துக்குத் திடீரென எதிர்பாராத சொந்தக்காரர் ஒருவர் முளைத்தார். எனவே குழாய்ப்பாதை மாற்றப்பட்டு உள்ளூர்க் குளத்துக்கருகே கொண்டு செல்லப்பட்டது. ஆனால், இது அந்தக் குளத்தையும், அதில் துவைக்கப்படும் அழுக்குத் துணிகளையும் தீட்டாக்குவதாகி விட்டது. எனவே தண்ணீர் எடுக்கும் குழாயின் இடம் மாற்றப்பட்டது. ஆனால் இத்தோடு தொல்லை முடிந்துவிட்டதா ? இல்லை. கோபமடைந்த சாதி மக்கள் குழாய்ப் பாதையைப் பலமுறை வெட்டிவிட்டார்கள். அந்த்யஜாக்கள் குடிக்கத் தண்ணீர் இல்லாமல் இருக்கிறார்கள். தீண்டாதவர்கள் தங்களுடைய சொந்த மதத்தினர் தங்களை நடத்தும்விதம் எவ்வளவுதூரம் திரு. காந்தியின் வார்த்தையில் சொன்னால் - " போதுமானது " என்று கருதவேண்டும் ?

திரு. சஞ்சனா " டைம்ஸ் ஆப் இந்தியா " வுக்கு 1928 நவம்பர் 7 - ஆம் தேதி எழுதிய கடிதத்தில், தண்ணீர் விஷயத்தில் தீண்டாதவர்களின் நிலைபற்றி 1927 - இல் திரு. டக்கர் கண்டதைப் பின்வருமாறு விவரிக்கிறார் ;

" பல்சட் தாலுகாவில் ஒரு பங்கிப் பெண் ஒரு கிணற்றுக்கருகே இரக்கமுள்ள சில ' மக்கள் ' தண்ணீர் கொடுப்பதற்காகக் காத்துக் கொண்டிருப்பதைத் திரு. டாக்கர் பார்த்தார். அவள் காலையிலிருந்து நண்பகல் வரை காத்திருந்த பின்னும் யாரும் தண்ணீர் கொடுக்கவில்லை. ஆனால் பங்கிகளுக்குத் தண்ணீர் கொடுப்பதற்குச் செய்யும் ஏற்பாட்டில் மிக அருமையான ஆன்மிக உணர்வு வெளிப்படுவதைக் காணலாம் : தண்ணீரை அவர்களின் பானைகளில் நேரடியாக ஊற்றக்கூடாது - யாரேனும் அப்படிச் செய்தால் அவர்கள் தீட்டுப்பட்டுவிடுவார்கள். திரு. டக்கர் கூறுகிறார் : ' ஒரு முறை எங்கள் ஆசிரியர் சுனிபாய் தம்முடைய வாளியிலிருந்து தண்ணீரை நேரடியாக ஒரு பங்கியின் பானையில் ஊற்றிவிட்டார். அதற்காக அவர் கடுமையாக எச்சரிக்கப்பட்டார். 'ஐயா, இம்மாதிரியான விஷயம் இங்கே கூடாது ( சகிக்கப்படமாட்டாது )[2]. கிணற்றின் சரிவுக்குக் கீழே ஒரு சிறிய தொட்டி கட்டப்படுகிறது. இரக்க உணர்வு

மேலிடும் எவரும் அதில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றலாம். தொட்டியிலிருந்து ஒரு மூங்கில் குழாய் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும். பங்கிப் பெண் தன் பானையை அந்தக் குழாயின் கீழே வைத்துத் தண்ணீர் பிடிக்க வேண்டும். பானை நிரம்புவதற்கு ஒரு மணிநேரம் ஆகலாம். இதற்குக் காரணம் என்ன என்று திரு. டக்கர் கூறுகிறார். கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கும் பெண்கள் தங்கள் வாளிகளில் அடியில் உள்ள வேண்டாத தண்ணீரைத் தான் தொட்டியில் ஊற்றுவார்கள்; அதுவும் கூட காத்திருக்கும் பங்கிப் பெண்ணின் மேல் இரக்கப்பட்டால்தான்."

## III

நிலைநிறுத்தப்பட்ட முறைமையின்கீழ், தீண்டாதவர்களுக்குக் கல்வி பெறும் உரிமை கிடையாது ; அதிலும், கிராமப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கு நிச்சயமாக உரிமை கிடையாது. இந்த விதிகளை மீறி நடக்கத் துணிந்த தீண்டாதவர்களை இந்துக்கள் கடுமையாகத் தண்டித்திருக்கிறார்கள். இத்தகைய எண்ணற்ற நிகழ்ச்சிகளில் ஒரு சில மட்டுமே கீழே தரப்படுகின்றன :

" ஒரு டகதஷயா ' யங் இண்டியா ' வில் ஒரு கட்டுரை எழுதினார். சூரத் மாவட்டத்தில் சிசோத்ரி என்ற கிராமத்தைப் பற்றி அவர் அதில் கூறியிருந்தார். தேசிய இயக்கப் பாதையில் அந்தக் கிராமம் மிக விரைவாக முன்னேறி, நாடு முழுவதற்குமே ஒத்துழையாமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது. இவ்வளவு நடந்த பின்பும் ஹரிஜனங்களைப் பற்றிப் பழைய தாழ்வான மனப்பான்மையே நீடித்தது. அந்தக் கிராமத்தின் தேசியவாதப் பள்ளிக்கூடத்தில் தேட் சாதிக் குழந்தை ஒருவன் வகுப்பின் ஒரு மூலையில் தனியாக உட்கார்ந்திருந்ததைத் தாம் பார்த்ததாக கட்டுரையை எழுதியவர் கூறுகிறார். அந்தக் குழந்தையின் தோற்றமே தான் தீண்டாதார் என்பதைப் பிரகடனம் செய்தது. அந்தப் பையனைத் தங்களுடன் சேர்ந்து உட்கார ஏன் அனுமதிக்கவில்லை என்று நான் மாணவர்களைக் கேட்டேன். ஹரிஜனப் பையன் மது அருந்துவதையும் மாமிசம் உண்பதையும் நிறுத்தினலன்றி அது முடியாது என்று அவர்கள் பதில் கூறினார்கள். அந்த ஹரிஜனப் பையன் உடனே தான் இவற்றை ஏற்கெனவே விட்டுவிட்டதாகச் சொன்னான். உயர்சாதி மாணவர்கள் இதற்கு ஒன்றும் சொல்லமுடியவில்லை."

1923 பிப்ரவரி ' ' - ஆம் தேதி ' பிரதாப் ' பத்திரிகையிலிருந்து :

"மகாஷயா சந்த்ராம்ஜி தெரிவிக்கிறார் : சமீபத்தில் பிராமண ஆசிரியர் ஒருவர் ஒரு கிராமத்தில் சமார் பையன்களுக்கான பள்ளிக்கூடத்துக்குச் சென்று பணிசெய்ய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டார். அவர் அங்கே சென்றபோது பிராமணர்கள், சத்திரியர்கள், மற்றவர்கள் அந்த ஆசிரியரைப் பகிஷ்காரம் செய்தார்கள். அவர்கள் கூறினார்கள் : " நீர் இங்கே சமார் பையன்களுக்குப் படிப்புக் கற்பித்து அவர்களை எங்களுடைய நிலைக்கு உயர்த்துவதற்காக வந்திருக்கிறீரோ ? "

1924 ஏப்ரல் 11 - ஆம் தேதி ' தேஜ் ' பத்திரிகையிலிருந்து :

" சுவாமி சிரத்தானந்தாஜி எழுதுகிறார் :

கத்சயாஸ் என்ற இடத்தில் உள்ள தேசியவாதிகளின் பள்ளி ஒன்றுக்கு நான் 1921 நவம்பரில் சென்றிருந்தேன். அந்தப் பள்ளியில் ஹரிஜன மாணவர்கள் எத்தனைபேர் படிக்கிறார்கள் என்று விசாரித்தேன். மூன்று பேர்தான் இருப்பதாகவும் அவர்கள் வகுப்புக்கு வெளியே வராந்தாவில் உட்கார்ந்து படிப்பதாகவும் கூறினார்கள். நான் அங்கே உரை நிகழ்த்திய போது நான் இந்த நடைமுறையை ஆட்சேபித்தேன். தேசிய வாதிகளின் பள்ளிக்கூடத்தில் அவர்கள் வகுப்பின் உள்ளே உட்கார அனுமதிக்க வேண்டும் என்று கூறினேன். பள்ளியின் மேலாளர் என்னுடைய அறிவுரைப்படி செய்தார். மறுநாள் பள்ளியின் எல்லா பெஞ்சுகளும் காலியாகக் கிடந்தன. இன்றுவரை அந்த தேசியப் பள்ளிக்கூடத்தின் கம்பீரமான கட்டிடம் பூட்டிப் பாழாகக் கிடக்கிறது."

1924 ஏப்ரல் 18 - ஆம் தேதியிட்ட ' மிலாப் ' பத்திரிகையிலிருந்து :

" ஹோஷங்காபாதில் நடந்த ஒரு நிகழ்ச்சி. மாவட்ட சபை பள்ளிகளுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பியது. பள்ளிகளில் ஹரிஜனக் குழந்தைகளுக்குக் கல்வி அளிக்கவேண்டும் என்று அதில் கூறப்பட்டிருந்தது. தலைமையாசிரியர்கள் இந்த உத்தரவுப்படி செயல்படத் தொடங்கினார்கள். ஒரு பள்ளியில் சில ஹரிஜனக் குழந்தைகள் சேர்க்கப்பட்டபோது கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுக்கு அது பிடிக்கவில்லை. அவர் தமது குழந்தைகளை அந்தப் பள்ளியிலிருந்து விலக்கிக் கொண்டார். மற்ற பெற்றோர்களும் அவ்வாறே செய்தார்கள். எல்லோருமாகச் சேர்ந்து பள்ளிக் கமிட்டியின் கூட்டம் ஒன்றை நடத்தினார்கள். பள்ளியில் ஹரிஜனக் குழந்தைகளைச் சேர்த்துக் கல்வியளித்தால் அவர்களுடன் பழகும் பிராமணக் குழந்தைகள் தங்கள் பூணூலை மாற்றிவிடுகிறார்கள் என்றும் எனவே அந்தப் பள்ளிக் கமிட்டி ஹரிஜனக் குழந்தைகளுக்குக் கல்வி அளிக்க முடியாது என்றும் தீர்மானம் நிறைவேற்றினார்கள்."

1932 ஏப்ரல் 3 - ஆம் தேதியிட்ட ' பிரதாப் ' பத்திரிகையிலிருந்து :

" அகமதாபாத், 1 ஏப்ரல், 1932 : பரோடா சமஸ்தானம், நவகான் மாவட்டத்திலிருந்து பின்வரும் செய்தி வந்திருக்கிறது. அங்கு ஹரிஜனப் பள்ளிகள் மூடப்பட்டு, ஹரிஜனக் குழந்தைகளைச் சாதாரண கிராமப் பள்ளிகளில் சேர்த்துக்கொள்ள அனுமதியளிக்கப்பட்டது முதல், கிராம மக்கள் ஹரிஜனங்களை முடிவற்ற தொல்லைகளுக்கு உள்ளாக்கி வருகிறார்கள். ஹரிஜன விவசாயிகளுக்குச் சொந்தமான ஆயிரம் வைக்கோல் போர்கள் எரிக்கப்பட்டன. ஹரிஜனக் கிணறுகளில் மண்ணெண்ணெய் ஊற்றப்பட்டது. அவர்களின் வீடுகளுக்குத் தீவைக்கவும் முயற்சி செய்யப்பட்டது. பள்ளிக்குச் சென்று கொண்டிருந்த ஹரிஜனச் சிறுவன் ஒருவன் தாக்கப்பட்டான். ஹரிஜனங்களுக்கெதிராகப் பொதுவான பகிஷ்காரம் அறிவிக்கப்பட்டுள்ளது."

" ஹிந்துஸ்தான் டைம்ஸ் " 1939 மே 26 - ஆம் தேதியிட்ட இதழ் பின்வரும் செய்தியை வெளியிட்டது.

" இந்த மாவட்டத்தின் காடிபுர் கிராமத்தில் விவசாயிகளுக்கும் மற்றவர்களுக்கும் கல்வியளிக்கப்பட்டு வந்த இரவுப் பள்ளியொன்றைப் பலர் தாக்கினார்கள். அந்தப் பள்ளியின் ஆசிரியரைப் பிடித்து பள்ளியை மூடிவிடும்படிக் கூறினார்கள். தீண்டாதவர்களின் பையன்களுக்குக் கல்வி அளித்தால் அவர்கள் பின்பு தங்களை மற்றவர்களுடன் சமமாக நடத்தக் கோருவார்கள் என்று அதற்குக் காரணம் கூறினார்கள். ஆசிரியர் மறுத்தபோது அவரை அடித்து, மாணவர்களைக் கலைந்து போகச் சொன்னார்கள்."

நான் கடைசியாகக் குறிப்பிட விரும்பும் நிகழ்ச்சி 1935 - இல் பம்பாய் மாகாணம், டோல்கா தாலுகா, கவிதா கிராமத்தில் நடந்தது. 1935 ஆகஸ்ட் 8 - ஆம் தேதி அது நடந்தது.

பொதுப் பள்ளிகளில் ஹரிஜனக் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளும்படி பம்பாய் அரசாங்கம் உத்தரவிட்டிருந்ததனால் கவிதா கிராமத்தின் தீண்டாதவர்கள் அதைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினார்கள். அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பது கீழே விவரிக்கப்படுகிறது:

" 8 - 8 - 1935 அன்று கவிதா கிராமத்தின் தீண்டாதவர்கள் தங்கள் குழந்தைகள் நான்கு பேரை கிராமப் பள்ளியில் சேர்ப்பதற்குக் கூட்டிச் சென்றார்கள். இதைப் பார்ப்பதற்குச் சாதி இந்துக்கள் பலர் பள்ளியின் அருகே கூடியிருந்தார்கள். அந்தக் குழந்தைகளைப் பள்ளியில் சேர்ப்பது அமைதியாக நடந்து முடிந்தது ; தகாத சம்பவம் எதுவும்

நடக்கவில்லை. ஆனால் கிராமத்தின் சாதி இந்துக்கள் தங்கள் குழந்தைகள் தீண்டாதவர்களின் குழந்தைகளுடன் சேர்ந்து உட்கார்ந்து தீட்டுப்படுவதை விரும்பாமல் மறுநாளிலிருந்து தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பவில்லை."

அதன்பின் சில நாட்கள் கழித்து 1935 ஆகஸ்ட் 13 - ஆம் தேதி அந்தக் கிராமத்தைச் சேர்ந்த தீண்டாதவர் ஒருவர், ஒரு பிராமணரால் தாக்கப்பட்டார். கிராமத்தின் தீண்டாதவர்கள் சமுதாயத்தைச் சேர்ந்த ஆண்கள் அந்தப் பிராமணருக்கெதிராக மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் குற்றப்புகார் கொடுப்பதற்காக டோல்காவிற்குச் சென்றிருந்தார்கள். தீண்டாதவர் சமுதாயத்தின் வயது வந்தவர்கள் கிராமத்தில் இல்லை என்று தெரிந்து கொண்டு இந்துக்கள் தீண்டாதவர்களின் வீடுகளைத் தாக்கினார்கள். கம்புகள், ஈட்டிகள், வாள்கள் போன்ற ஆயுதங்களை அவர்கள் கைகளில் பிடித்திருந்தார்கள். தாக்கியவர்களில், சாதி இந்துப் பெண்களும் இருந்தார்கள். தீண்டாதோரின் வீடுகளில் இருந்த வயதான ஆண்களையும் பெண்களையும் அவர்கள் தாக்கத் தொடங்கினார்கள். தாக்கப்பட்டவர்களில் சிலர் காட்டுக்குள் ஓடி ஒளிந்தார்கள், மற்றும் சிலர் கதவுகளை அடைத்துக் கொண்டு ஒளிந்து கொண்டார்கள். கிராமப் பள்ளியில் தங்கள் குழந்தைகளைச் சேர்ப்பதில் முன்நின்று செயல்பட்டவர்கள் என்று தாங்கள் சந்தேகித்த தீண்டாதவர்கள் மீது இந்துக்கள் தங்கள் கோபத்தைத் திருப்பினார்கள். அவர்களின் வீடுகளின் கதவுகளை உடைத்துத் திறந்தார்கள். அவர்கள் உள்ளே இல்லை என்று கண்டபோது அந்த வீடுகளின் கூரைகளின் ஓடுகளையும் சாரக்கட்டைகளையும் உடைத்தார்கள்.

இவ்வாறு தாக்கப்பட்ட தீண்டாதவர்கள், ஆண்களும் பெண்களும், டோலாவுக்குச் சென்றிருந்த பெரியவர்களின் பாதுகாப்புப் பற்றிக் கவலையடைந்தார்கள். அவர்கள் திரும்பி வரும் நேரம் ஆகியிருந்தது. அவர்கள் திரும்பி வருவதை எதிர்பார்த்து சாதி இந்துக்கள் கிராமத்துக்குச் செல்லும் வழியில் புதர்களின் பின்னாலும் செடிகளின் பின்னாலும் மறைந்திருந்தார்கள். இதைத் தெரிந்து கொண்ட தீண்டாத வகுப்புப் பெண் ஒருவர் இருட்டில் மறைந்து கிராமத்தை விட்டு வெளியேறி, டோல்காவிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தவர்களைச் சந்தித்து, ஆயுதம் தாங்கிய இந்துக்கள் அவர்களைத் தாக்குவதற்காக மறைந்திருப்பதாகத் தெரிவித்து அவர்கள் ஊருக்குள் செல்ல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். ஆனால் அவர்கள் தாங்கள் போகாவிட்டால் சாதி இந்துக்கள் மேலும் அதிகமாகத் தீங்கு செய்யக்கூடும் என்று பயந்து அந்தப் பெண்ணின் பேச்சைக் கேட்க மறுத்தார்கள். அதே சமயம், தாங்கள் ஊருக்குள் சென்றால் இந்துக்கள் தாக்குவார்கள் என்றும் அஞ்சினார்கள். எனவே நள்ளிரவு கழியும் வரை

கிராமத்துக்கு வெளியே வயல்களிலேயே காத்திருக்க முடிவு செய்தார்கள். இதனிடையே, தாக்குவதற்காக மறைந்திருந்த சாதி இந்துக்கள் காத்திருந்து காத்திருந்து ஏமாற்றமடைந்து திரும்பிச் சென்றார்கள். தீண்டாதவர்களின் தலைவர்கள் இரவு 3 மணிக்குப் பின் கிராமத்திற்குள் சென்றார்கள். அவர்கள் முன்னதாகவே சென்று, காத்திருந்த கொலைகாரக் கும்பலைச் சந்தித்திருந்தால் அநேகமாகக் கொலை செய்யப்பட்டிருப்பார்கள். கிராமத்தில் மக்களுக்கும் சொத்துக்களுக்கும் சாதி இந்துக்கள் செய்திருந்த தீங்குகளைப் பார்த்துவிட்டு அவர்கள் பொழுது விடிவதற்கு முன்பே அகமதாபாதுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். அங்கே தீண்டாதவர்களின் நலன்களைக் கவனிப்பதற்காகத் திரு. காந்தி உருவாக்கியிருந்த ஹரிஜன சேவக் சங்கத்தின் செயலாளரிடம் நடந்த விவரங்களைத் தெரிவித்தார்கள். ஆனால், அவர் ஒன்றும் செய்யமுடியவில்லை. சாதி இந்துக்கள் வன்முறைச் செயல்களைச் செய்தது மட்டுமின்றி, தீண்டாதோரின் வாழ்க்கையைச் சகிக்க முடியாததாக ஆக்குவதற்கும் சதி செய்தார்கள். அவர்கள் தீண்டாதோரைக் கூலி வேலைக்கு அமர்த்த மறுத்தார்கள் ; அவர்களுக்கு உணவுப் பொருள்களை விற்க மறுத்தார்கள். அவர்களின் கால் நடைகள் மேய்ப்பதற்கு இடம் கொடுக்க அங்கங்கே தாக்குதல் நடத்தவும் தொடங்கினார்கள். இது மட்டுமின்றித் தங்களுடைய வெறியில் சாதி இந்துக்கள், தீண்டாதோர் தண்ணீர் எடுக்கும் கிணற்றில் மண்ணெண்ணெயை ஊற்றினார்கள். பல நாட்கள் இவ்வாறு செய்தார்கள். இதன் விளைவாகக் கிராமத்தின் தீண்டாதவர்களுக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. இவ்வளவு தூரம் ஆனபின் தீண்டாதவர்கள் அக்டோபர் 17 - ஆம் தேதி மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் குற்றப் புகார் தாக்கல் செய்தனர். அதில் சாதி இந்துக்களில் சிலரைக் குறிப்பிட்டுக் குற்றம் சாட்டினார்கள்.

இந்த வழக்கில் மிக விசித்திரமானது திரு. காந்தியும் அவரது கையாளான சர்தார் வல்லபாய் பட்டேலும் செய்த செயல்தான். கவிதா கிராமத்தின் இந்துக்கள் தீண்டாதவர்களுக்குச் செய்த கொடுமைகளையெல்லாம் நன்றாக அறிந்திருந்தபோதும் திரு. காந்தி தீண்டாதவர்கள் அந்தக் கிராமத்தைவிட்டுச் சென்றுவிட வேண்டும் என்ற அறிவுரையைத்தான் அளித்தார். குற்றம் செய்தவர்களை நீதிமன்றத்தில் நிறுத்த வேண்டும் என்று கூட அவர் கூறவில்லை. அவரது கையாளான திரு. வல்லபாய் பட்டேல் செய்த செயல் இதைவிட விசித்திரமானது. தீண்டாதோருக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம் என்று சாதி இந்துக்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக அவர் கவிதா கிராமத்துக்குச் சென்றிருந்தார். ஆனால், அவர்கள் அவர் பேசுவதற்குக் கூட வாய்ப்பளிக்கவில்லை. ஆயினும் இதே மனிதர் தான், அவர்களைத் தீண்டாதவர்கள் நீதி மன்றத்தில் கொண்டு போய் நிறுத்தித் தண்டனை

வாங்கிக் கொடுப்பதை எதிர்த்தார். ஆயினும் அவரது எதிர்ப்பையும் மீறித் தீண்டாதவர்கள் புகார் தாக்கல் செய்தார்கள். ஆனால், இறுதியாக அவர் அந்தப் புகாரை அவர்கள் திருப்பப் பெற்றுக் கொள்ளச் செய்தார். தீண்டாதோருக்குத் தொல்லை கொடுப்பதில்லை என்று சாதி இந்துக்கள் வாக்குறுதி அளிப்பதாக ஒரு நாடகக்காட்சி நடத்திவிட்டுப் புகாரைத் திரும்பப் பெற்றுக் கொள்ளச் செய்தார். இந்த வாக்குறுதியை அவர்கள் செயல்படுத்தச் செய்வதற்குத் தீண்டாதவர்களுக்கு வழி எதுவும் கிடையாது. இதன் பலன் என்னவாயிற்று என்றால், தீண்டாதவர்கள் துன்பத்துக்குள்ளானார்கள், அவர்களைத் துன்பப்படுத்தியவர்கள் திரு. காந்தியின் நண்பர் திரு. வல்லபாய் பட்டேலின் உதவியுடன் தப்பித்துக் கொண்டார்கள்.

## IV

தீண்டாதவர்கள் இந்துக்களே என்று இந்துக்கள் கூறுகிறார்கள். ஆனால், தீண்டாதவர் ஒருவரின் இறந்த உடலை இந்து சுடுகாட்டில் எரிக்க முடியாது.

1946 ஜுன் 7 - அம் தேதி " ஃரீப்ரஸ் " பத்திரிகை பின்வரும் செய்தியை வெளியிட்டது :

" மதுரை ஹரிஜன்கள் இரண்டுபேர், மற்றவர்களின் உணர்வுகளைப் புண்படுத்தக்கூடிய ஒரு செயலைச் செய்ததற்காக அவர்களுக்கு நான்கு மாதங்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட ஒரு வழக்கைக் குறிப்பிட்டு திரு.ஏ. வைத்தியநாத ஐயர் பத்திரிகைக்கு எழுதிய கடிதம் ஒன்றில் ' தீண்டாமை காரணமாக ஹரிஜனங்கள் படுகின்ற கொடுமையான துன்பங்களை ' பொது மக்களின் கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார்.

திரு. வைத்தியநாத ஐயர் கூறுகிறார் : " மதுரை ஹரிஜன் ஒருவரின் மூத்த குழந்தை இறந்துவிட்டது. அவர் அந்தக் குழந்தையின் உடலை மதுரை நகராட்சி சுடுகாட்டில் ஹரிஜனங்களுக்கென ஒதுக்கப்பட்ட கொட்டகையில் எரிப்பதற்குப் பதில், சாதி இந்துக்களுக்கென்று உள்ளதாகக் கூறப்படும் கொட்டகையில் எரித்துவிட்டார். இப்படி இடங்கள் ஒதுக்கப்பட்டிருப்பது தமக்குத் தெரியாது என்றும், அப்போது மழை தூறிக் கொண்டிருந்தது என்றும், தாம் எரித்த இடம்தான் நல்ல இடமாக இருந்தது என்றும் ஹரிஜன் கூறுகிறார். சாதி இந்து யாரும் இதற்கு ஆட்சேபம் தெரிவிக்கவில்லை ; யாருடைய உணர்வும் புண்படுத்தப்பட்டதாக நிரூபணம் எதுவும் இல்லை. இந்த நிகழ்ச்சி மதுரை காவல் துறையினரின் கவனத்திற்கு வந்தது. அவர்கள், குழந்தையின் தந்தை மீதும் மற்றொரு உறவினர் மீதும் வழக்குத்தொடுத்தார்கள். ஹரிஜனங்கள் உணர்வுகளைப் புண்படுத்தக்

கூடும் என்பது காவல் துறையினர் கூறிய காரணம்.

திரு. ஐயர் மேலும் கூறுகிறார் : " நான் இந்த வழக்கை சென்னை அமைச்சரின் கவனத்துக்குக் கொண்டு வந்தேன்."

1945 ஏப்ரல் 22 - ஆம் தேதியிட்ட " சேவாதன் ' கூறுகிறது :

" 1945 மார்ச் 18 - ஆம் தேதி முசபர்நகர் மாவட்டம் " ஃப்ளோடா கிராமத்தில் ஒரு துப்புரவுத் தொழிலாளி இறந்து போனார். கிராமத்தில் தொழிலாளிகள் அவரது உடலைச் சுடுகாட்டுக்குக் கொண்டு சென்றார்கள். கிராமத்தின் தியாகி பிராமணர்கள் இதனால் கோபமடைந்தனர். துப்புரவுத் தொழிலாளிகள் தங்களில் இறந்தவரின் உடலைச் சாதி இந்துக்களின் சுடுகாட்டுக்குக் கொண்டு வரத் துணிந்ததற்காக அவர்களைத் திட்டினார்கள். துப்புரவுத் தொழிலாளிகள், தாங்கள் இந்துக்கள் என்றும், இறந்தவர் உடலை எரிப்பதே தங்கள் வழக்கம் என்றும் கூறினார்கள். ஆனால், பிராமணர்கள் நியாயவாதம் எதையும் ஏற்கவில்லை. துப்புரவுத் தொழிலாளிகள் இந்துவாயிருந்தாலும் முஸ்லிமாயிருந்தாலும் அவர்களில் இறந்தவர்களின் உடலைப் புதைக்கத்தான் வேண்டும் என்றும், அவர்கள் புதைக்கத் தவறினால் தாங்களே ( பிராமணர்களே) அந்த உடலைப் புதைத்து விடுவார்கள் என்றும் பிராமணர்கள் கூறினார்கள். இவ்வாறு அச்சுறுத்தப்பட்ட துப்புரவுத் தொழிலாளிகள், பிராமணர்கள் தங்களை அடிக்கக்கூடும் என்றும் பயந்து இறந்த உடலைப் புதைத்துவிட்டார்கள்."

இது மட்டுமல்ல, கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயமும் உள்ளது. தீண்டத்தக்கவர்களான இந்துக்கள் தங்களில் இறந்தவர்களின் உடலை எரிக்கும் வழக்கம் உள்ளவர்கள். அவர்களுடைய உயர்ந்த அந்தஸ்தைக் காட்டும் வழக்கங்களைத் தாங்களும் பின்பற்ற வேண்டும் என்று தீண்டாதவர்கள் நினைப்பதாகக் கருதப்படுவதால், அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இறந்தவர்களின் உடலை அவர்கள் புதைக்கத்தான் வேண்டும்.

இவ்வாறு தீண்டாதவர்கள் தங்களில் இறந்தவரின் உடலைக் கட்டாயமாகப் புதைக்க வேண்டியிருந்த ஒரு நிகழ்ச்சி பற்றி 1924 ஜூன் 9 - ஆம் தேதி " மிலாப் " பத்திரிகையில் வெளியிடப்பட்டது :

" தீண்டாதவர்களிடையே ஏற்பட்டிருக்கும் விழிப்புணர்வுக்கு முக்கிய காரணம் இந்துக்களின் கொடுமையேயாகும். இதைப்பற்றி நான் அறியாமலிருந்தேன். ஆயினும், பல்வேறு ஊழியர்களிடமிருந்து எனக்குக் கிடைத்த தகவல்கள் மிகவும் வேதனையளித்தன. ஓர் இடத்திலிருந்து வந்த தகவல் அங்குத் தீண்டாதவர்கள் தங்களில்

*இறந்தவர்களின் உடலை எரிக்க அனுமதிக்கப்படுவதில்லை என்று தெரிவிக்கிறது. இதனால் அங்குள்ள துப்புரவுத் தொழிலாளிகளிடையே ஒரு புதிய உணர்வு உருவாகியுள்ளது. அவர்கள், இறந்த உடலைப் படுத்த நிலையில் புதைக்கும் மற்றவர்களின் வழக்கத்திலிருந்து மாறுபட்டுத், தங்களில் இறந்தவர்களின் உடலைத் தலைகீழான நிலையில் புதைக்கத் தொடங்கியிருக்கிறார்கள். மற்றவர்களின் வழக்கத்தைத் தாங்களும் பின்பற்றுவது தங்களுக்குக் கௌரவக் குறைவானது என்று துப்புரவுத் தொழிலாளிகள் நினைக்கிறார்கள்."*

## V

*பூணூல் அணிவது உயர்ந்த பிறப்பின் அடையாளமாகும். தீண்டாதவர்கள் தங்களை உயர்ந்தவர்களாக்கிக் கொள்ளுவதற்காகப் பூணூல் அணிய எண்ணினார்கள். ஐக்கிய மாகாணங்களின் கர்வால் மாவட்டம் ரிங்வாரி கிராமத்தில் தீண்டாதவர்கள் மீது சாதி இந்துக்கள் இழைத்த கொடுமைகள் ஜுன் 6 - ஆம் தேதியிட்ட ' நேஷனல் ஹெறால்ட் " பத்திரிகையில் விவரிக்கப்பட்டுள்ளன :*

*" ரிங்வாரி கிராமத்தின் பத்து குடும்பங்களைச் சேர்ந்த 33 ஹரிஜன்கள் சாதி இந்துக்களின் கொடுமைகள் காரணமாக இரண்டு மாத காலம் ஊரைவிட்டு ஓடிப்போய் வாழ்ந்தபின் கர்வால் மாவட்ட அதிகாரிகளின் உதவியுடன் இப்போது தங்கள் ஊருக்குத் திரும்பிச் சென்றிருக்கிறார்கள். இந்த ஹரிஜன்கள் தங்களுடைய முன்னேற்றத்துக்காக மகாத்மா காந்தியும், காலஞ்சென்ற ஸ்வாமி சிரத்தானந்தும் தொடங்கிய சமூக இயக்கத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டார்கள் என்பது நினைவிருக்கலாம். ஆனால் கர்வாலின் இந்துக்களுக்கு இது பிடிக்கவில்லை. இது தங்களுடைய ' உரிமைகளையும் சலுகைகளையும் ' மீறும் செயல் என்று அவர்கள் கருதினார்கள். இதன் விளைவாக ஹரிஜன்கள் மீது பல தாக்குதல்கள் நடந்தன ; அவர்கள் மீது சமூகரீதியான கொடுமைகள் தொடர்ந்து இழைக்கப்பட்டன. அவர்கள் தங்களுடைய திருமணங்களில் பல்லக்குகளைப் பயன்படுத்தக்கூடாது என்று கூறப்பட்டது. ஓர் இடத்தில் அவர்கள் ஓர் எருமையைக்கொன்று அதன் இறைச்சியை உண்ணும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டார்கள். ரிங்வாரியில் இந்தக் கொடுமைகளின் உச்சகட்டமாக, சாதி இந்துக்களுக்குப் பணிய மறுத்த ஹரிஜனங்களுக்குத் தண்ணீர் ஊற்றுக்கள், மேய்ச்சல் நிலங்கள் போன்ற பொது இடங்கள் அனைத்தும் மூடப்பட்டன. இதன் விளைவாக இந்தப் பத்து குடும்பங்களும் கிராமத்தை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. மேலும் கொடுமைகள் நடக்கலாம் என்று பயந்து அவர்கள் நள்ளிரவில் வெளியேறிச் சென்றார்கள்."*

இது போன்ற வேறு சில நிகழ்ச்சிகள் கீழே தரப்படுகின்றன :

1. " சில ஆரிய சமாஜிகள், தீண்டாதவர்கள் சிலருக்குப் பூணூல் போட்டு அவர்களின் சாதி அந்தஸ்தை உயர்த்தினார்கள். ஆனால் சனாதனிகளுக்கு இதைப் பொறுக்கமுடியவில்லை. ஏனென்றால் அவர்களுடைய மதம், தீண்டாதவர்கள் பூணூல் அணிவதை அனுமதிக்கவில்லை. இதன் காரணமாகப் பூணூல் அணிந்த தீண்டாதவர்கள் ஒவ்வொரு நாளும் உயர் சாதி இந்துக்களால் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள்."

2. " ஜம்மு சமஸ்தானத்தின் மீர்புர் மாவட்டம், மோய்லாவைச் சேர்ந்த பகத் ஹரிசந்த் சில ஆரிய சமாஜிகளால் சுத்திகரிப்புச் சடங்கு செய்யப்பட்டுப், பூணூல் அணிவிக்கப்பட்டார். அங்குள்ள இந்த ஜாட்டுகள் அவரைக் கொடுமைப்படுத்திப், பூணூலை அகற்றிவிடச் சொன்னார்கள். கடைசியாக ஒருநாள் பகத் ஹரிசந்த காயத்திரி ஜபம் செய்தபின் ஜாட் இந்துக்கள் அவரைப் பிடித்து அடித்துப், பூணூலை அறுத்துவிட்டார்கள். அவர்களுடைய கோபத்துக்குக் காரணம் இதுதான் : சுத்தி சடங்குக்குமுன் ஷூதா மேக் வகுப்பினர் ஜாட்டுகளை ' கரீப் நவாஸ் ' ( ஏழைகளின் புரவலர் ) என்று அழைத்தார்கள். இப்போது அவர்கள் ' நமஸ்தே ' என்று மட்டுமே கூறுகிறார்கள்."

1929 செப்டம்பர் 14 - ஆம் தேதியிட்ட " ஆர்ய கெஜட் " பத்திரிகையிலிருந்து :

" குர்தாஸ்புர் மாவட்டம் பெர்காம்பூருக்குருகே உள்ள ரமணி கிராமத்தைச் சேர்ந்த ராஜபுத்திரர்கள் தங்கள் கிராமத்தின் தீண்டாதவர்களைக் கூப்பிட்டு, அவர்கள் அணிந்திருந்த பூணூலை உடனே அகற்றிவிட வேண்டும் என்றும் அதை மீண்டும் அணிவதில்லை என்று வாக்களிக்கவேண்டும் என்றும், இல்லாவிட்டால் அவர்களின் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்றும் கூறினார்கள். இதற்குத் தீண்டாதவர்கள் அமைதியாகப் பின்வருமாறு பதிலளித்தார்கள் : ' மகராஜ் ' நீங்கள் ஏன் எங்கள் மேல் கோபப்படுகிறீர்கள் ? உங்களுடைய சொந்த சகோதரர்களான ஆரிய சமாஜிகள்தான் கருணைகூர்ந்து இந்தப் பூணூல்களை எங்களுக்குப் போட்டுவிட்டார்கள். இவை இந்து சமயத்தின் உண்மையான அடையாளங்கள் என்றும் இவற்றை நாங்கள் எப்போதும் பாதுகாக்க வேண்டும் என்றும் அவர்கள் கூறினார்கள். இவற்றை நாங்கள் அணிந்திருப்பதில் உங்களுக்கு ஆட்சேபம் இருந்தால் நீங்களே உங்களுடைய கைகளால் இவற்றை அறுத்தெறியலாம் என்று அவர்கள் கூறினார்கள். இதைக் கேட்ட ராஜபுத்திரர்கள் அந்த அப்பாவி மனிதர்கள் மீது பாய்ந்து தாங்கள் வைத்திருந்த தடிகளால் அவர்களை நீண்ட நேரம் அடித்தார்கள். அந்தத் தீண்டாதவர்கள்

மிகுந்த பொறுமையுடன் இந்தக் கொடுமையைத் தாங்கிக் கொண்டார்கள் ; அவர்களைத் தடுக்கவோ எதிர்க்கவோ மறுத்துவிட்டார்கள். ஆனால் அவர்களைத் துன்புறுத்தியவர்கள் அவர்களுடைய பரிதாப நிலையைக் கண்டு கொஞ்சமும் மனம் இரங்கவில்லை. மூன்று, நான்கு ராஜபுத்திரர்கள் கோரி ராம் என்ற ஹரிஜனின் பூணூலை இழுத்து அறுத்து எறிந்தார்கள். அவருடைய உடம்பில் களைகொட்டுக் கருவியினால் பூணூல் போட்டிருப்பது போலக் கீறிவிட்டார்கள்."

1929 அக்டோபர் 12 - ஆம் தேதி ' மிலாப் ' பத்திரிகையிலிருந்து :

" பாஹ்மனி கிராமத்தின் ராஜபுத்திரர்கள் பண்டை நாட்களிலிருந்தே தீண்டாதவர்களுக் கெதிராகச் செயல் திட்டங்களை நடத்தி வந்துள்ளனர். பூணூலை அறுத்தது பற்றி நீதிமன்றத்தில் ஒரு வழக்கு நடந்துவருகிறது. தீண்டாதவரான ஒரு பெண் 1929 அக்டோபர் 7 - ஆம் தேதி வயலில் அறுவடை செய்யச் சென்று கொண்டிருந்த போது ராஜபுத்திரர் ஒருவர் அவரைக் கடுமையாக அடித்துக் காயப்படுத்தியது பற்றிய வழக்கு ஒன்றும் உள்ளது. அந்தப் பெண்ணைப் படுக்கையில் வைத்து வீட்டுக்குத் தூக்கிச் சென்றார்கள்."

## VI

தீண்டாதவர் ஒருவர், ஒரு இந்துவின் முன், கட்டிலில் உட்கார்ந்திருந்தால் என்ன நடக்கும் என்பதை 1938 ஜுலை மாதம் 'ஜீவன்' பத்திரிகையில் வெளியான பின்வரும் செய்தியிலிருந்து காணலாம் :

" சீதாபுர் மாவட்டம் மர்காவ் காவல் நிலையப் பகுதியில் உள்ள பச்சஹேறா கிராமத்தைச் சேர்ந்த நந்தாராம், மங்கலி பிரசாத் ஆகியோர் தங்களுடைய நண்பர்களையும் உறவினர்களையும் விருந்துக்கு அழைத்தார்கள். விருந்தினர்கள் வந்து கட்டில்களில் அமர்ந்து புகைபிடித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது கிராமத்தின் அஜமீந்தார்களான டாக்குர் சூரஜ் பக்ஷ் சிங்கும், ஹர்பால் சிங்கும் அங்கு வந்து, நந்தா ராமையும் மங்கலி பிரசாதையும் கூப்பிட்டனுப்பிப், புகை பிடித்துக் கொண்டிருப்பவர்கள் யார் என்றும் அவர்கள் ஏன் கட்டில்களில் உட்கார்ந்திருக்கிறார்கள் என்றும் கேட்டார்கள். அவர்கள் தம்முடைய நண்பர்களும் உறவினர்களும் என்று மங்கலி பிரசாத் கூறினார். டாக்குர்கள் மட்டும்தான் கட்டிலில் உட்காரலாமா என்று அவர் கேட்டார். இதனால் கோபமடைந்த இரண்டு டாக்குர்களும் அந்தச் சகோதரர்கள் இருவரையும் அடித்தார்கள் ; அவர்களுடைய ஆட்கள் விருந்தினர்களைக் கடுமையாக அடித்தார்கள். அடிபட்டவர்களில்

ஒரு ஆணும் ஒரு பெண்ணும் நினைவிழந்தார்கள் ; மற்றவர்கள் கடுமையாகக் காயமடைந்தார்கள்."

## VII

தீண்டாதவர்கள் இந்துக்கள். அவர்களும் இந்துக்களுக்கு உள்ள அதே உரிமைகளைப் பெற்ற குடிமக்கள். ஆனால் நிறுவப்பட்ட முறைமையின் விதிகளுக்கு முரணான எந்த உரிமையையும் தீண்டாதவர்கள் பயன்படுத்தமுடியாது.

உதாரணமாக, சத்திரம் பொதுவானதுதான் என்றாலும் தீண்டாதவர் அதில் தங்குவதற்கு உரிமை கோர முடியாது. பதேகர் என்ற இடத்தைச் சேர்ந்த கன்ஹையா லால் ஜாடவ் என்ற தீண்டாதவருக்கு நேர்ந்த அனுபவம் பற்றி 1938 ஆகஸ்ட் மாத ' ஜீவன் ' இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது :

" அலகாபாத் ரயில் சந்திப்புக்கருகே உள்ள தர்மசாலாவில் 1938 ஆகஸ்ட் 15 - ஆம் தேதி இரவு 10 மணிக்கு நான் தங்கச் சென்றபோது எந்தக் கஷ்டமும் ஏற்படவில்லை. ஒரு ரூபாய் முன்பணம் செலுத்திவிட்டுக் கட்டிலில் படுத்துவிட்டேன். ஆனால் இரவு 11 மணிக்குத், தங்கியிருப்பவர்கள் தங்களுடைய முகவரிகளைப் பதிவு செய்வதற்குத் தர்மசாலாவின் மேலாளரிடம் சென்றபோது நான் என்னுடைய முகவரியை எழுதி, என்னுடைய சாதியை ஜாடவ் என்று குறிப்பிட்டேன். அதைப் பார்த்த மேலாளார் கோபங் கொண்டு அங்குத் தாழ்ந்த சாதிக்காரர்கள் தங்க முடியாது என்றும் நான் உடனே வெளியேற வேண்டும் என்றும் கூறினார். நான் தர்மசாலாவின் விதிகளைச் சுட்டிக்காட்டி இந்துக்கள் மட்டுமே அங்கே தங்கலாம் என்றும் தீண்டாதவர்கள் தங்குவதற்குத் தடை இல்லை என்றும் கூறி, நான் இந்து அல்ல என்று அவர் என்னை வெளியேறச் சொல்கிறாரா என்று கேட்டேன். நான் பரூக்காபாதிலிருந்து வந்திருப்பதாகவும், அலகாபாதில் எனக்கு யாரையும் தெரியாது என்றும் அதனால் இரவு 11 மணிக்கு நான் பேசக்கூடிய இடம் எதுவும் இல்லை என்றும் கூறிக் கெஞ்சினேன். அதைக் கேட்ட மேலாளர் கோபமடைந்து இராமாயணத்திலிருந்து ( சூத்திரர்கள், படிக்காதவர்கள், மாடுகள், பெண்கள் ஆகியோர் அடிக்கப்படுவதற்கே தகுதியுள்ளவர்கள் என்று கூறும் ) ஒரு பாடலைச் சொல்லித், தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவன் அவன் போகமாட்டான் என்றும் சொன்னார். திடீரென்று அவர் என்னுடைய படுக்கையையும் பொருள்களையும் தூக்கி வெளியே வீசினார். அங்கிருந்த எல்லோரும் என்னை அடிக்கத் தயாராயிருந்தார்கள். வேறு வழியில்லாமல் நான் தர்மசாலாவிலிருந்து

வெளியேறி, எதிரே ஒரு கடையின் முன் இருந்த பலகையில் படுத்துக் கொண்டேன். அதற்காகக் கடைக்காரருக்கு 2 அணா வாடகை கொடுத்தேன். எனவே ஷெட்யூல் சாதியைச் சேர்ந்த என் சகோதரர்கள் எல்லா இடங்களிலும் கூட்டங்கள் நடத்தி அரசாங்கத்திற்கு வேண்டுகோள் விடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஒவ்வொரு நகரத்திலும் நம் மக்களுக்குத் தனியாகத் தர்மசாலாக்கள் கட்டவேண்டும் அல்லது இப்போதுள்ள தர்மசாலாக்களை நமக்குத் திறந்துவிடவேண்டும்."

## VIII

நிறுவப்பட்ட முறைமையின்கீழ், இறந்த கால்நடைகளைத் தூக்கிச் சென்று அகற்றுவதும் துப்புரவுப் பணி செய்வதும் இந்துக்களின் கௌரவத்திற்குக் குறைவான செயல்களாகும்.

தீண்டாதவர்கள்தான் இவற்றைச் செய்யவேண்டும். தீண்டாதவர்களும் இந்த வேலைகள் தங்களுடைய அந்தஸ்திற்கு இழுக்கானவை என்று நினைக்கத் தொடங்கியுள்ளனர்; இந்த வேலைகளைச் செய்ய அவர்கள் மறுக்கிறார்கள். ஆயினும் இந்துக்கள் அவர்களைக் கட்டாயப்படுத்தி அவர்களின் விருப்பத்துக்கு மாறாக இந்த வேலைகளைச் செய்ய வைக்கிறார்கள்.

1938 ஜூன் ' ஜீவன் ' இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது :

" 1938 மே மாதத்தில் ஒரு நாள் அலிகர் மாவட்டம், பர்லா காவல் நிலையப் பகுதியைச் சேர்ந்த பிப்போலி கிராமத்தில் பஜ்ஜூ ராம் ஜாடவ் பகல் 11 மணி அளவில் தம் வீட்டில் உட்கார்ந்திருந்தார். அப்போது சில பிராமணர்கள் - பிரதிக், ஹோடால், சீதாராம், தேவி, சுனி ஆகியோர் - கையில் தடிகளுடன் அங்குச் சென்று, இறந்து போன ஒரு மாட்டைத் தூக்கிச் செல்ல அவர் வரவேண்டுமென்று கூறினார்கள். தமக்கு அம்மாதிரி வேலைகள் பழக்கமில்லை என்றும், அதைச் செய்யக்கூடிய வேறு யாரிடமாவது போகும்படியும் அவர் கூறியபோது, அவர்கள் அவரைத் தடிகளால் சற்றும் இரக்கமில்லாமல் அடித்தார்கள்."

இதே பத்திரிகையின் 1938 அக்டோபர் இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது :

" 1938 அக்டோபர் 24-ஆம் தேதி, மத்ரா மாவட்டம் சதாபாத் வட்டம் லோதாரி கிராமத்தில் ஒரு பிராமணரின் சில மாடுகள் இறந்து போயின. அந்தக் கிராமத்தின் ஷெட்யூல் சாதி மக்கள் அவற்றைத் தூக்கிச் சென்று அகற்ற மறுத்துவிட்டார்கள். இதனால் கோபமடைந்த சாதி இந்துக்கள், ஷெட்யூல் சாதியினர் காலைக்

கடன்களுக்குத் தங்கள் வயல்களுக்குச் செல்லக்கூடாது என்றும் தங்கள் மாடுகளைச் சாதி இந்துக்களின் வயல்களில் மேயவிடக் கூடாது என்றும் தடுத்துவிட்டார்கள்."

## IX

தீண்டாதவர்கள் கௌரவமான, சுத்தமான ஆடைகளை அணியக் கூடாது. தங்க, வெள்ளி நகைகளை அணியக்கூடாது. தீண்டாதவர்கள் இந்த விதிகளை மீறி நடந்தால் இந்துக்கள் அவர்களைத் தண்டிக்கத் தயங்கமாட்டார்கள். தீண்டாதவர்கள் இந்த விதிகளை மீற முயன்றால் என்ன விளைவுகள் நேரும் என்பதைப் பத்திரிகைகளில் வெளியான பின்வரும் நிகழ்ச்சிகள் காட்டுகின்றன :

"1922 வரை, புண்டியைச் சேர்ந்த பேரார் மாவட்டத்தில் வசிக்கும் டலாய் என்ற தீண்டாத சாதியினர் கோதுமை உண்ணக்கூடாது என்று தடை செய்யப்பட்டிருந்தது. 1922 பிப்ரவரி மாதம், ஜெய்ப்பூரைச் சேர்ந்த ஷகட்கரில் சமார் சாதிப் பெண் ஒருவர் காலில் வெள்ளி நகை அணிந்திருந்ததற்காகத் தண்டிக்கப்பட்டார். உயர் சாதிகளைச் சேர்ந்தவர்கள்தான் வெள்ளி நகை அணியலாம், கோதுமை உண்ணலாம் என்பது விதி என்று இதற்குக் காரணம் கூறப்பட்டது. தாழ்ந்த சாதி மக்கள் இவற்றைச் செய்யத் துணியக்கூடாது. இப்படிப்பட்ட பழங்கருத்துக்கள் மறைந்து போயிருக்கும் என்று நாம் இதுவரை நினைத்து வந்திருக்கிறோம்."

மத்திய இந்தியாவில் உள்ள தீண்டாத சாதியினரான பலாய் மக்கள் சுத்தமான உடைகளையும் தங்க நகைகளையும் அணியத் துணிந்தபோது அவர்கள் எத்தகைய கொடுமைக்கும் அடக்குமுறைக்கும் உள்ளானார்கள் என்பதை 'டைம்ஸ் ஆப் இந்தியா' 1928 ஜனவரி 4-ஆம் தேதி இதழில் வெளியான பின்வரும் செய்தி தெரிவிக்கிறது :

" (1927) மே மாதம் இந்தோர் மாவட்டம் கனாரியா, பிச்சோலி ஹப்சி, பிச்சோலிமர்தனா மற்றும் 15 கிராமங்களைச் சேர்ந்த உயர் சாதி இந்துக்கள், அதாவது கலோட்டாக்கள், ராஜபுத்திரர்கள் மற்றும் பாட்டீல்கள், பட்வாரிகள் உள்ளிட்ட பிராமணர்கள் ஆகியோர், தங்கள் கிராமங்களில் உள்ள பலாய் மக்கள் பின்வரும் விதிகளைப் பின்பற்றி நடக்கவில்லை என்றால் அங்கு வசிக்கமுடியாது என்று தெரிவித்தார்கள் :

1. பலாய்கள் தங்கச் சரிகை போட்ட தலைப்பாகை அணியக்கூடாது.

2. அவர்கள் வண்ணக்கரை போட்ட வேட்டி உடுத்தக்கூடாது.

3. இந்து வீட்டில் ஏற்படும் மரணம் பற்றி அவர்களின் உறவினர்களுக்கு - அவர்கள் எவ்வளவு தூரமான இடங்களில் வசித்தாலும் - செய்தி தெரிவிக்கவேண்டும்.

4. இந்துக்களின் திருமணங்களில் ஊர்வலத்திலும், திருமணத்தின் போதும் பலாய்கள் வாத்தியங்கள் வாசிக்கவேண்டும்.

5. இந்துப் பெண்களின் பிரசவ காலங்களில் பலாய் பெண்கள் உடனிருந்து பணிசெய்யவேண்டும்.

6. பலாய்கள் ஊதியம் கேட்காமல் சேவை செய்யவேண்டும்;

இந்து தாமாக மனம் வந்து கொடுப்பதைப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

7. இந்த நிபந்தனைகளுக்கு பலாய்கள் இணங்கவில்லையென்றால் அவர்கள் கிராமங்களைவிட்டு வெளியேறிவிட வேண்டும்.

பலாய்கள் இந்த நிபந்தனைகளை ஏற்று நடக்க மறுத்தார்கள்; இந்துக்கள் அவர்களுக்கெதிராக நடவடிக்கை எடுத்தார்கள். பலாய்கள் கிராமக் கிணறுகளில் தண்ணீர் எடுக்க அனுமதி மறுக்கப்பட்டது; அவர்கள் தங்கள் கால் நடைகளை மேயவிட அனுமதிக்கப்படவில்லை; இந்துக்களுக்குச் சொந்தமான நிலத்தின் வழியே பலாய்கள் செல்லக்கூடாது என்று தடுக்கப்பட்டனர்; இதனால் ஒரு பலாயின் வயலைச் சுற்றிலும் இந்துக்களின் வயல்கள் இருந்தால் அவர் தமது வயலுக்குப் போகமுடியாது. இந்துக்கள் தங்கள் கால்நடைகளை பலாய்களின் வயல்களில் மேயவிட்டார்கள்.

இந்தக் கொடுமைகளை எதிர்த்து பலாய்கள் இந்தோர் சமஸ்தான அரசுக்கு மனுச் செய்தார்கள். ஆனால் அவர்களுக்கு நிவாரணம் எதுவும் கிடைக்கவில்லை. கொடுமைகள் தொடர்ந்து நடந்தன. எனவே நூற்றுக்கணக்கான பலாய்கள் தங்களுடைய முன்னோர்கள் பல தலைமுறைகளாக வசித்து வந்த கிராமங்களை விட்டு மனைவி, மக்களுடன் அருகிலுள்ள வேறு இடங்களுக்கு, அதாவது, தர், தேவாஸ், பாக்லி, போபால், குவாலியர் முதலான சமஸ்தானங்களுக்குச் சென்று குடியேறினார்கள்.

சில நாட்களுக்கு முன் இந்தோர் நகருக்கு வடக்கே 8 மைல் தூரத்தில் உள்ள ரேவ்தி கிராமத்தின் இந்துக்கள், பலாய்களுக்கெதிராக மற்ற கிராமங்களின் இந்துக்கள் உருவாக்கிய விதிகளைக் கொண்ட முத்திரைத்தாள் ஒப்பந்தத்தில் கையொப்பமிடுமாறு பலாய்களுக்கு உத்தரவிட்டார்கள். பலாய்கள் மறுத்துவிட்டார்கள். அவர்களில் சிலரை இந்துக்கள் அடித்ததாகக் கூறப்படுகிறது; ஒரு பலாயைக் கம்பத்தில் கட்டி வைத்து, ஒப்பந்தத்தில் யையொப்பமிட்டால்தான் அவரை விடமுடியும்

என்று கூறினார்கள். அவர் கையொப்பமிட்டபின் விடுவிக்கப்பட்டார்.

அடுத்த செய்தி 1928 ஜனவரி 21-ஆம் தேதி ' ஆர்ய கெஜட் ' இதழில் வெளியானது:

" இதுவரை ஹரிஜனங்கள் கொடுமைப்படுத்தப்பட்டது பற்றிய செய்திகள் பெரும்பாலும் சென்னை மாகாணத்திலிருந்து வந்தன. ஆனால் சிம்லாமலையின் மகாராணா இவர்களை நடத்தும் விதம் காரணமாக இப்போது இம்மாதிரியான செய்திகளுக்கு அவ்வளவு தூரம் போக வேண்டியதில்லை. சிம்லா மாவட்டத்தில் ' கால்லி ' என்ற ஒரு சாதியினர் வசிக்கிறார்கள். இவர்கள் நல்ல தோற்றம் கொண்டவர்களாகவும், கடுமையாக உழைப்பவர்களாகவும் உள்ளனர். இவர்களை அந்தப் பகுதியின் இந்துக்கள் தீண்டாதவர்களாகக் கருதுகிறார்கள். ஆனால் இந்து சமயத்துக்கு ஆட்சேபமான வேலைகள் எதையும் இவர்கள் செய்வதில்லை. இந்தச் சாதி மக்கள் உடல் வலிமையோடு நல்ல அறிவுத்திறனும். பெற்றுள்ளனர். சிம்லா மலையில் வசிப்பவர்கள் பாடும் பாடல்களில் பெரும்பாலானவை கால்லிகளால் இயற்றப்பட்டவை. இவர்கள் நாளெல்லாம் கடினமாக உழைப்பவர்களாகவும், பிராமணர்களை மிக அதிகமாக மதிப்பவர்களாகவும் இருந்தபோதிலும், இவர்கள் பிராமணர்களின் வீடுகளுக்கருகே நடந்துசெல்ல முடியாது. பஞ்சாபுக்குச் சென்று பணம் சம்பாதித்துத் தங்க மோதிரங்களும் காது வளையங்களும் வாங்கியதாகக் கூறப்படுகிறது. ஆனால் அவர்கள் இவற்றைத் தங்கள் வீடுகளுக்குக் கொண்டு சென்ற போது அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள். அந்த நகைகள் சமஸ்தான அதிகாரிகளின் கைகளுக்குச் சென்ற பின்புதான் அவர்கள் விடுவிக்கப்பட்டார்கள்."

பின்வரும் ராமானந்த்ஜி 1926 ஜூன் மாதம் 23-ஆம் தேதி 'பிரதாப்' இதழில் வெளியாயிற்று:

"சுவாமி ராமானந்த்ஜி சன்யாசி எழுதுகிறார்:

1926 மார்ச் 23-ஆம் தேதி மாலை ஒரு சமார் என்னிடம் வந்தார். அவர் ஜாட்களின் பிடியிலிருந்து சமீபத்தில்தான் தப்பி வந்திருந்தார். குர்கான் மாவட்டம் பரீதாபாத் அருகே கேரி என்ற கிராமத்தில் தமது சாதி மக்கள் படும் துன்பங்கள் பற்றி அவர் மிக உருக்கமாகக் கூறினார். இதைப் பற்றி நேரில் விசாரிப்பதற்கு மாச் 24-ஆம் தேதி காலையில் நான் குர்கான் சென்றேன். நான் கண்டறிந்த விவரங்கள் பின்வருமாறு:

"மார்ச் 5-ஆம் தேதி கோர்க்கி என்ற சமாரின் மகளுடைய திருமணம் நடைபெற்றதும் அவருடைய நிதி நிலைமை ஓரளவு இருந்ததால் திருமணத்திற்கு வந்த விருந்தினர்களுக்கு உயர் சாதியினர்

அளிப்பதைப் போன்ற விருந்துபசாரம் நடத்தினார். மேலும் தம் பெண்ணுக்கு அவர் மூன்று தங்க நகைகள் அளித்தார். இந்தச் செய்தி ஜாட் சாதியினரிடையே பரவி அதைப்பற்றி நிறைய விவாதங்களும் நடந்தன. மேல் சாதியினரைப் போலக் கீழ்ச் சாதியினர் நடந்து கொள்வது, மேல் சாதியினரைஅவமதிப்பதாகும் என்று தீர்மானிக்கப்பட்டது. மார்ச் 21-ஆம் தேதி காலையில் இந்த விஷயத்தை விவாதிப்பதற்கு ஜாட்கள் பஞ்சாயத்துக் கூட்டினார்கள். அந்தச் சமயத்தில் பெரும்பாலும் பையன்களும் சிறுமிகளும் பெண்களும் அடங்கிய சமார் கூட்டம் ஒன்று தங்களுடைய தினசரி வேலைக்காக பரீதாபாதுக்குப் புறப்பட்டுச் சென்று கொண்டிருந்தது. அவர்கள் கிராமத்துக்கு வெளியே தர்மசாலாவரை சென்றவுடன் ஜாட்கள் அவர்களைத் தாக்கினார்கள். அந்தக் கூட்டத்தில் இருந்த ஆண்களெல்லாம் பலமாக அடிக்கப்பட்டனர்; பெண்கள் செருப்புக்களால் அடிக்கப்பட்டனர். சிலருக்கு முதுகும் மற்றும் சிலருக்குக் கைகளும் ஒடிந்து போயின. அவர்கள் வேலை செய்வதற்கு வைத்திருந்த கருவிகளும் கொள்ளையடிக்கப்பட்டன. அந்த வழியாக வந்த ஒரு முஸ்லிமையும் ஜாட்கள் பிடித்து அவருடைய தங்கக் காது வளையங்களையும் 28 ரூபாய் பணத்தையும் கொள்ளையடித்தார்கள். மார்ச் 22-ஆம் தேதி ஜாட்கள் சமார்களின் வயல்களில் நுழைந்து நாசம் செய்தார்கள். சுமார் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பயிர்கள் நாசமடைந்தன. அப்போது வயலில் வேலை செய்து கொண்டிருந்த நன்வா என்பவரையும் ஜாட்கள் அடித்தார்கள். மீண்டும் மார்ச் 22-ஆம் தேதி ஜாட்களின் கூட்டம் ஒன்று மண்ணெண்ணெயில் தோய்த்துக் கொளுத்திய தீப்பந்தங்களைப் பிடித்துக்கொண்டு சமார்களின் வீடுகளுக்குத் தீவைக்கச் சென்றது; ஆனால் பின்பு திரும்பிச் சென்று விட்டது. மார்ச் 23-ஆம் தேதி நள்ளிரவில் முன்பு குறிப்பிடப்பட்ட மணப்பெண்ணின் தாத்தாவுக்குச் சொந்தமான வீட்டுக்குத் தீவைக்கப்பட்டது. அந்த வீடு இப்போது சாம்பல் குவியலாகக் கிடக்கிறது. வீட்டில் செருப்புத் தைப்பதற்காக வைத்திருந்த 90 ரூபாய் மதிப்புள்ள 16 தோல்கள் எரிந்து போயின. ஜாட்கள் அந்த ஊரைச் சூழ்ந்துகொண்டு சமார் யாரையும் வெளியே போகவிடாமல் வைத்துள்ளனர். ஜாட்களுக்குப் பயந்துபோய் பனியாக்களும் சமார்களுக்கு எந்தப் பொருளையும் விற்க மறுக்கிறார்கள் மூன்று நாட்களாக சமார்களும் அவர்களுடைய கால்நடைகளும் பட்டினியாயிருக்கிறார்கள்."

பின்வரும் சம்பவம் சமீபத்தில் நடந்தது. இது மலபாரில் நடந்தது. 1945 ஜூன் 5-ஆம் தேதி செருகன்னுவில் திரு. கே. கண்ணன், எம்.எல்.ஏ. தலைமையில் நடைபெற்ற முதலாவது சிரகல் தாலுகா ஹரிஜன

மாநாட்டில் இயற்றப்பட்ட பின்வரும் தீர்மானம் இது பற்றிய விவரங்களைத் தெரிவிக்கிறது:

"மலபாரில் ஷெட்யூல் சாதி மக்கள் மீது இந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஆகியோரின் மனிதத்தன்மையற்ற ஒடுக்கு முறைச் செயல்கள் அதிகரித்து வருவதை அரசின் மற்றும் பொதுமக்களின் கவனத்துக்கு இந்த மாநாடு கொண்டுவருகிறது. குறிப்பாகப், பொன்னாணி வட்டம் நாட்டிகா உள்வட்டத்தில் மிகக் கொடுமையான ஒடுக்குமுறை சற்றும் கேள்விமுறை இல்லாமல் நடந்து வருகிறது. இதற்குக் காரணம் ஹரிஜனங்கள் தங்க நகைகள் அணியவும், சுத்தமான உடைகள் உடுத்தவும் குடை பிடித்துச் செல்லவும் முயல்வதாகும். அவர்கள் மீது தாக்குதல் நடத்தப்பட்ட பல சம்பவங்கள் நடந்துள்ளன. ஹரிஜனத் திருமணக்குழு ஒன்று வழிமறித்துத் தாக்கப்பட்டது. ஆண்களின் சட்டைகளும் பெண்களின் சேலைகளும் பலவந்தமாகப் பறிக்கப்பட்டன. 1945 மே 27-ஆம் தேதி வடன்பிள்ளியில் ஒரு ஹரிஜன மாணவர் கடுமையாக அடிக்கப்பட்டார். முற்போக்கான தியா இளைஞர்கள், திருவாளர்கள் சி.எஸ். கோபாலன், எம்.எஸ். சங்கரநாராயணன், பி.சி.ராமகிருஷ்ண வைத்தியர் ஆகியோர் தலைமையில் ஹரிஜனங்களுக்கு உதவும் முயற்சிகளுக்காக அவர்களை மாநாடு பாராட்டுகிறது. உள்ளூர் அதிகாரிகள், குறிப்பாகக் காவல் துறையினர் காட்டும் அலட்சியத்தையும், கொடுமைப்படுத்தப்படும் ஹரிஜனங்களுக்கு அவர்கள் உரிய சமயத்தில் பாதுகாப்பளிக்கத் தவறியதையும் மாநாடு வன்மையாகக் கண்டனம் செய்கிறது.

மேலே கூறப்பட்ட கொடுமைகள் நடந்த சம்பவங்களில் பாதிக்கப்பட்ட ஹரிஜனங்களுக்குக் காவல் துறையினரிடமிருந்து பாதுகாப்போ நீதியோ கிடைக்கவில்லை என்று மாநாடு சுட்டிக்காட்ட விரும்புகிறது. இத்தகைய வழக்குகளில் சாட்சியம் அளிக்க முன்வந்த ஹரிஜனங்களின் இந்த நிலை இப்படியே விடப்பட்டால், மலபாரில் சாதித்தளைகளையும் பொருளாதாரச் சுரண்டலையும் உடைக்க முயலும் முற்போக்கான ஹரிஜனங்களின் உயிருக்கே ஆபத்து ஏற்படும். இந்த நாட்டில் ஹரிஜனங்கள் ஒரு ஜனநாயக நாட்டின் சுதந்திரமான குடிமக்களாக, யாருடைய தொல்லைகளுக்கும் உள்ளாகாமல், மற்றவர்களால் கொடுமைக்கு உள்ளாக்கப்படும்போது நிர்வாகத்தால் உடனடியாகப் பாதுகாக்கப்பட்டு வாழ்வதற்கு அனுமதிக்கப்படவேண்டும் என்று இந்த மாநாடு இந்திய அரசுக்கும் மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கருக்கும் வேண்டுகோள் விடுக்கிறது."

## X

தீண்டாதவர்களக்குப் பொருள் வசதி இருந்தாலும் அவர்கள் உயர்வான உணவுகளை உண்ணக்கூடாது. தீண்டாதவர்கள் வாழ்க்கையில் தங்களுக்கு உள்ள நிலைமைக்கு மேலான வாழ்க்கை வாழ்வது குற்றம். 1928 பிப்ரவரி 26-ஆம் தேதி 'பிரதாப்' இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது:

"ஜோத்புர் சமஸ்தானத்தில் சண்டயல் என்ற இடத்தில், ஹரிஜனங்கள் அல்வா சாப்பிடுவதற்குக்கூட உரிமை இல்லாதவர்கள் என்று நினைக்கும் மனிதர்களை இப்போதும் பார்க்கலாம். தீண்டாத சாதிகளில் ஒன்று சர்கரோ. சில நாட்களுக்கு முன் ஒரு திருமணத்தின் போது அல்வா தயாரிக்கப்பட்டது. இதற்கு வேண்டிய மைதா மாவு டாக்கர் சாகிபிடமிருந்து வாங்கப்பட்டது. திருமணவீட்டினர் சாப்பிடப்போன சமயத்தில் சண்டாவாலாவின் கன்வர் சாகிபிடம் இருந்து அவர்கள் அல்வா சாப்பிடக்கூடாது என்று உத்தரவு வந்தது. சில அடிவருடிகள் ஒரு சமரச ஏற்பாட்டைச் செய்தார்கள். கன்வர் சாகிபிற்கு ரூ.200 அளித்தால் அவர்கள் அல்வா சாப்பிட அனுமதி அளிக்கப்படும் என்பது இந்த ஏற்பாடு. இதைக் கேட்ட சர்கரோக்கள் கோபமடைந்தார்கள். அப்படிப் பணம் கொடுக்க முடியாது என்று மறுத்துவிட்டார்கள்."

## XI

கிராமத்தின் முக்கிய தெருக்கள் வழியே திருமண ஊர்வலம் நடத்திச் செல்வது சாதி இந்துக்கள் ஒவ்வொருவருக்கும் உள்ள உரிமை. இந்த உரிமை உள்ள சமூகம் மதிப்புக்குரிய சமூகம் என்று ஏற்றுக் கொள்ளப்படுகிறது. தீண்டாதவர்களுக்கு இத்தகைய உரிமை கிடையாது. ஆனால், அவர்கள் தங்களுடைய சமூக அந்தஸ்ததை நிலைநிறுத்தும் நோக்கத்துடன், முக்கிய தெருக்கள் வழியே திருமண ஊர்வலம் நடத்தும் உரிமை பெற முயன்று வந்துள்ளனர். இந்தக் கோரிக்கை குறித்து இந்துக்கள் நடந்துகொண்ட விதத்தைப் பின்வரும் சம்பவங்கள் காட்டுகின்றன.

1927 ஜூலை 'ஆதி ஹிந்து' இதழிலிருந்து:

"பெங்களூர், 27 மே 1927: ஏழு பிராமணர்கள், ஒவ்வொருவரும் நூறு ரூபாய் அபராதம் கட்டவேண்டும் என்று முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் உத்தரவிட்டார். பிராமணர்கள் மட்டுமே வசிக்கும் மால்கோட் சாலை வழியாக தீண்டாத சாதியினரான பறையர்கள் நடத்திச் சென்ற ஊர்வலம் ஒன்றைத் தாக்கியதற்காக அவர்களுக்கு இந்த அபராதம் விதிக்கப்பட்டது."

*1931 அக்டோபர் 31-ஆம் தேதி 'பிரதாப்' இதழிலிருந்து:*

*"கட்வால் மாவட்டம் ஹர்கான் கிராமத்தில் தீண்டாதவர்களின் திருமண ஊர்வலம் ஒன்று வந்து கொண்டிருப்பதாகவும், மணமகன் பல்லக்கில் உட்கார்ந்திருப்பதாகவும் கேள்விப்பட்ட உயர் சாதி இந்துக்கள், கூட்டமாகச் சென்று, திருமண ஊர்வலத்தைச் சூழ்ந்து கொண்டு அவர்களைக் கடுமையாக அடித்தார்கள். கடுங்குளிரில் அவர்களைத் தடுத்து நிறுத்தி 24 மணி நேரம் உணவில்லாமல் வைத்தார்கள். காவல்துறையினர் வந்துதான் அவர்களைக் காப்பாற்றினார்கள்."*

*1931 நவம்பர் 3-ஆம் தேதி 'சத்ய சம்வாத்' (லாஹோர்) இதழிலிருந்து:*

*"திருமணக் குழு ஒன்று மணப்பெண்ணைப் பல்லக்கில் தூக்கிக்கொண்டு தில்லிக்கருகே சென்று கொண்டிருந்தது. உயர்சாதி இந்துக்கள், இது, தங்களை அவமதிப்பதாகும் என்று கருதினார்கள். அவர்கள் திருமணக் குழுவைத் தடுத்து நிறுத்தி இரண்டு நாட்கள் வரை உணவும் தண்ணீரும் இல்லாமல் வைத்தார்கள். கடைசியாகக் காவல்துறையினர் வந்து கொடுமைக்காரர்களை விரட்டியடித்துத் திருமணக் குழுவினரைக் காப்பாற்றினார்கள்.*

*'ஜீவன்' என்ற இந்து பத்திரிகையில் 1938 ஜூனில் வெளியான செய்திகள்:*

*1. "சேவ்ரா கிராமத்தில், தங்களைக் காங்கிரஸ்காரர்கள் என்று பெருமையாகச் சொல்லிக்கொள்ளும் கோலாக்கள் (பூர்வ டாக்குர்கள்) ஆயுதம் இல்லாத ஜாடவ்களைத் தடிகளாலும் ஈட்டிகளாலும் இரக்கமில்லாமல் அடித்தார்கள். இவர்களில் ஐந்து பேர் கைகளும் நெஞ்சு எலும்பும் உடைந்து மருத்துவமனையில் கிடக்கிறார்கள். பன்சி என்பவருக்கு மண்டை எலும்பு உடைந்துபோய் இன்னமும் நினைவுதிரும்பாமலிருக்கிறார். இதற்கெல்லாம் காரணம், அந்தக் கிராமத்துக்கு வந்த திருமணக் குழு ஒன்றில் மணமகன் அலங்காரமான தலைப்பாகை அணிந்திருந்ததுதான். டாக்குர்கள் இதனால் கோபமடைந்து திருமணக் குழுவைத் தாக்க விரும்பினார்கள். ஆனால் குழுவினரின் எண்ணிக்கை அதிகமாக இருந்ததால் தாக்குதல் நடத்தவில்லை.*

*அந்தச் சமயத்தில் ஜமீன் எல்லைக்குள் அவர்களை அவமானம் செய்ததோடு நிறுத்திக்கொண்டார்கள்."*

*2. "ஆக்ரா மாவட்டம் பதேசந்த் வட்டம் டோரா கிராமத்தில் மோதி ராம் ஜாடவ் என்பவரின் வீட்டிற்கு ராம்புர் கிராமத்திலிருந்து திருமணக் குழு ஒன்று வந்தது. மணமகன் அலங்கார கிரீடம் ஒன்று*

அணிந்திருந்தார். திருமணக்குழுவினர் வாத்தியக்குழுவுடனும் வாணவேடிக்கையுடனும் வந்தார்கள். வாத்தியக்குழு இசையுடனும் வாணவேடிக்கையுடனும் திருமணக்குழு செல்வதைச் சாதி இந்துக்கள் ஆட்சேபித்தார்கள். மோதிராம் இதை எதிர்த்துத் தாங்களும் மற்றவர்களைப் போலவே நல்ல மனிதப் பிறவிகள் தான் என்று கூறினார். உடனே சாதி இந்துக்கள் குழுவையும் தாக்கினார்கள். மோதிராமின் தலைப்பாகையில் முடிந்து வைத்திருந்த ரூ 15-1-0 தொகையையும் எடுத்துக் கொண்டார்கள்."

3. "அலிகர் மாவட்டம், சகினி காவல் நிலையப் பகுதியைச் சேர்ந்த குர்வா கிராமத்தைச் சேர்ந்த பிரேம் சிங், கிர்வர் சிங் ஆகிய ஜாடவ்களின் வீட்டிற்குத் திருமணக் குழு ஒன்று சென்று கொண்டிருந்த போது சாதி இந்துக்கள் அதைத் தடுத்து நிறுத்தி, வாத்தியக்குழு இசையை நிறுத்தினால் தான் தொடர்ந்து செல்லலாம் என்று கூறினார்கள். இசையை நிறுத்தவில்லை என்றால் அவர்களைக் கொன்று விடப்போவதாகவும் பொருள்களைக் கொள்ளையடிக்கப் போவதாகவும் இந்துக்கள் அச்சுறுத்தினார்கள். திருமணக் குழுவினர் இசையை நிறுத்தமறுத்தார்கள். கோபமடைந்த இந்துக்கள் அவர்கள்மீது கற்களையும் கட்டிகளையும் வீசினார்கள்."

1945 மார்ச் 24-ஆம் தேதி 'இந்துஸ்தான் டைம்ஸ்' இதழில் பின்வரும் சம்பவம்பற்றிச் செய்தி வெளியாகியுள்ளது:

"லாண்ட்ஸ்டௌன் துணைக்கோட்டத்தில் உள்ள தனுரி கிராமத்தைச் சேர்ந்த ஷில்பகார் திருமணக் குழு ஒன்று மணமகளைப் பல்லக்கில் தூக்கிக்கொண்டு மால் தங்கு கிராமத்தில் உள்ள பெண்வீட்டிற்குச் சென்றுகொண்டிருந்தது. மால் தங்குவின் பட்வாரியின் முகவர் என்று தம்மை அறிமுகம் செய்து கொண்ட ஒருவர், திருமணக்குழு சாதி இந்துக்களால் தொல்லைக் குள்ளாகாமலிருக்க அது ஒரு சுற்று வழியாகச் செல்லவேண்டும் என்று யோசனை சொன்னார்.

அதற்கிணங்க, திருமணக் குழு ஒரு காட்டு வழியில் சென்றது. அது ஒரு தனிமையான இடத்தை அடைந்தபோது ஒரு விசில் ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து சுமார் 200 சாதி இந்துக்கள் அந்த இடத்திற்கு வந்தார்கள். அவர்கள் திருமணக் குழுவைத் தாக்கிப், பல்லக்கை எடுத்துச் சென்றுவிட்டதாகக் கூறப்படுகிறது.

ஷில்பகார் குழு இரண்டு நாட்களுக்குப் பின் மணப்பெண்ணின் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தது. சப்-டிவிஷனல் மாஜிஸ்ரேட் முன்னிலையில் காவல்துறையினரின் பாதுகாப்புடன் திருமணம் நடத்தப்பட்டது.

இது தொடர்பாக அந்தப் பட்வாரி தற்காலிகப் பணி நீக்கம் செய்யப்பட்டார்."

'லாஹோர் சிவில் அண்ட் மிலிட்டரி கெஜட்' 1945 ஜூன் 24-ஆம் தேதி இதழில் பின்வரும் செய்தியை வெளியிட்டுள்ளது:

"குவாலியர் சமஸ்தானத்தின் ஒரு கிராமத்தில் நேற்று ராஜபுத்திரர்களின் குழு ஒன்று கோடரிகள், தடிகள், கத்திகள் முதலான ஆயுதங்களுடன் சென்று ஹரிஜனங்களைத் தாக்கியதில் ஒருவர் உயிரிழந்தார், நான்கு பேர் கடுமையாகக் காயமடைந்தார்கள்.

குவாலியர் மகாராஜாவுக்கு வாரிசு பிறந்ததைக் கொண்டாடுவதற்கு ஹரிஜனங்கள் ஊர்வலம் நடத்தியதிலிருந்து அந்த கிராமத்தின் ராஜபுத்திரர்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் இடையில் பகைமை இருந்து வருகிறது. ஹரிஜனங்கள் இவ்வாறு கொண்டாட்டம் நடத்துவதற்கு உரிமை இல்லை என்று கூறி ராஜபுத்திரர்கள் அதை எதிர்த்தார்கள்.

சென்ற மாதம், ஹரிஜனங்களுக்குச் சம உரிமை அளிக்கும் பிரகடனம் ஒன்றை மகாராஜா வெளியிட்டார்."

தீண்டாதவர்கள் இந்துக்களின் நடத்தை முறைகளைத் தாங்களும் பின்பற்றித் தங்களைப் பற்றிச் சிறிது பெருமைபட்டுக்கொள்வதற்குச் செய்யும் முயற்சிகளை இந்துக்கள் வன்முறை மூலம் எதிர்த்து வருகிறார்கள். இதற்குச் சில உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன. பின்வரும் செய்தி 'பம்பாய் சமாசார்' 1936 நவம்பர் 4-ஆம் தேதி இதழில் வெளியிடப்பட்டது:

"மலபாரில் உள்ள ஒத்தப்பாலம் என்ற இடத்தில் ஈழவ சாதியைச் சேர்ந்த சிவராமன் என்ற 17 வயது இளைஞர், சாதி இந்து ஒருவரின் கடைக்குச் சென்று உப்பு வேண்டும் என்று கேட்டார். அவர் 'உப்பு' என்ற மலையாள வார்த்தையைப் பயன்படுத்தினார். மலபாரில் உள்ள வழக்கப்படி 'உப்பு' என்ற சொல்லைச் சாதி இந்துக்கள்தான் பயன்படுத்தலாம். அந்த இளைஞர் ஹரிஜன் என்பதால் அவர் 'புளிச்சாட்டன்' வேண்டும் என்றுதான் கேட்டிருக்கவேண்டும். இதனால் கோபமடைந்த உயர் சாதிக் கடைக்காரர், சிவராமனை பலமாக அடித்ததால் அவர் இறந்துபோனார்."

பின்வரும் உதாரணங்கள் 'சமதா' இதழிலிருந்து தரப்படுகின்றன:

(1) புனா மாவட்டம் காத்தி என்ற இடத்தில் தீண்டாதவர்கள் 'ராம் ராம்' என்றும் 'நமஸ்கார்' என்றும் சொல்லத் தொடங்கியிருப்பதால் உயர்சாதி மக்கள் அவர்களைத் துன்புறுத்துகிறார்கள். வணக்கம் தெரிவிப்பதற்கான இந்தச் சொற்களைப் பயன்படுத்தும் உரிமை

உயர்சாதியினருக்குத்தான் உண்டு; மாஹர் முதலான சாதியினர் 'ஜோஹர்' என்று அல்லது 'பாயா லாகு' (தங்கள் பாதங்களைத் தொடுகிறேன்) என்றுதான் சொல்லவேண்டும்.

(2) புனா மாவட்டம் தானூ என்ற இடத்தில் தீண்டாதவர்கள் 'தீண்டத்தக்க இந்து மக்களைப் போல' நடந்துகொள்ள முயன்றார்கள். வரம்பு மீறிய இந்தச் செயலின் விளைவாக அவர்கள் ஊரைவிட்டு வெளியேற வேண்டியதாயிற்று.

(3) ஷோலாப்புர் மாவட்டம் வலப்புர் என்ற இடத்தில் மாஹர்கள் துன்புறுத்தப்படுகிறார்கள். அவர்கள் தீண்டத்தக்கவர்களை 'சாஹப்' என்று அழைக்கவும் 'பாயா லாகு' என்று கூறி வணக்கம் தெரிவிக்கவும் மறுக்கத் துணிந்ததே இதற்குக் காரணம்.

(4) ஷோலாப்புர் மாவட்டம் ஜாம்பாதில் தீண்டாதவர்கள் தங்களுடைய எஜமானர்களான தீண்டத்தக்கவர்களின் உல்லாசத்துக்காக 'நாச்' மற்றும் 'தமாஷா' நிகழ்த்த மறுத்துவிட்டார்கள். இதன் காரணமாகத் தீண்டாதவர்கள் அடிக்கப்பட்டார்கள்; அவர்களுடைய குடிசைகள் எரித்தும் இடித்தும் நாசமாக்கப்பட்டன. அந்த மக்கள் கிராமத்தின் எல்லைக்கு அப்பால் விரட்டியடிக்கப்பட்டார்கள்.

(5) புனா மாவட்டம் பாவ்டாவில் தீண்டாதவர்கள் சிலர் தங்கள் சாதி மக்களிடம் உயர் சாதி மக்கள் உண்டுவிட்டுப் போடும் மிச்சங்களையோ, இறந்த மிருகங்களையோ உண்ணக்கூடாது என்றும், அசுத்தமான வேலைகளைச் செய்ய மறுக்கவேண்டும் என்றும் எடுத்துக் கூறினார்கள். கிராமத்தின் முதியவர்கள் புதிய கருத்துக்களைக் கூறிய அந்த மாஹர்களிடம், அவர்கள் எப்போதும் உண்டுவந்துள்ளபடியே உண்பதும், செய்துவந்த வேலைகளைச் செய்வதும் அவர்களின் 'தர்மம்' என்று கூறினார்கள். இந்தப் புராதனமான, என்றுமுள்ள 'தர்மத்தை'ப் பின்பற்றாத மாஹர்களை ஊர் மக்கள் அடித்து, ஊரை விட்டு வெளியேற்றிவிடுவதாக அச்சுறுத்தினார்கள்.

## XII

தீண்டாதவர்கள் இந்து சமுதாயத்திற்குச் சேவை செய்வதற்காகவே பிறந்திருப்பதுபோல இந்துக்கள் அவர்களை நடத்துகிறார்கள். சேவை செய்வது தீண்டாதவர்களின் கடமை ஆதலால், இந்துக்கள் எப்போது கூப்பிட்டாலும் அவர்கள் ஓடிவந்து பணிசெய்ய மறுக்கக்கூடாது. கிராமத்தின் இந்துக்கள்; தாங்கள் தீண்டாதவர்களின் உழைப்பைப் பெற எப்போது வேண்டுமானாலும் கட்டளையிடலாம் என்று நம்புகிறார்கள். இந்த முறைமைக்கு 'பேகார்' அல்லது கட்டாய உழைப்பு என்று பெயர். தீண்டாதவர்கள் இந்த முறைமைக்குப் பணிந்து நடக்காவிட்டால்

கடுமையான விளைவுகளைச் சந்திக்கவேண்டியிருக்கும் என்பதைக் காட்டுவதற்குச் சில உதாரணங்களைக் குறிப்பிடலாம்.

1938 டிசம்பர் 'ஜீவன்' இதழில் பின்வரும் நிகழ்ச்சிகள் பற்றி செய்தி வெளியிடப்பட்டுள்ளது:

"1938 நவம்பர் 29-ஆம் தேதி மத்ரா மாவட்டம் கோஹனா கிராமத்தின் ஜாடவ்கள் 'பேகார்' என்ற கட்டாய உழைப்புக்கு உட்பட மறுத்ததற்காக ஜாட்களும் பிராமணர்களும் அவர்களைக் கடுமையாகச் சித்திரவதை செய்தார்கள்.

கிராமத்தின் டாக்குர்களும் பிராமணர்களும் ஜாடவ்களிடம் கட்டாய வேலை வாங்குவதும் அவர்களைத் தொல்லைப் படுத்துவதும் வழக்கமாயிருந்தது. ஜாடவ்கள் கட்டாய இலவச வேலை செய்வதில்லை என்றும், ஊதியம் கொடுக்கப்படும் வேலைகளை மட்டுமே செய்வதென்றும் தீர்மானித்தார்கள். சமீபத்தில் அந்தக் கிராமத்தில் ஒரு மாடு இறந்தபோது, அதைத் தூக்கிச் செல்ல ஜாடவ்களைக் கட்டாயப்படுத்த டாக்குர்களும் மற்ற சாதி இந்துக்களும் முயன்றார்கள். ஆனால், ஜாடவ்கள் அந்த வேலைக்குத் தங்களுக்கு ஊதியம் கொடுத்தால்த்தான் செய்ய முடியும் என்றார்கள். இதனால் சாதி இந்துக்கள் மிகவும் கோபமடைந்து ஒரு துப்புரவுத் தொழிலாளியைக் கூப்பிட்டு ஜாடவ்களின் கிணற்றுகளில் மலத்தை அள்ளிப் போடச் சொன்னார்கள். அந்தத் துப்புரவுத் தொழிலாளி கிணற்றில் மலத்தைப் போடவிடாமல் ஜாடவ்கள் தடுத்தபோது அவர் ஜாட்களையும் டாக்குர்களையும் பிராமணர்களையும் அழைத்தார். அவர்கள் ஜாடவ்களைத் தடிகளால் அடித்துத் தாக்கினார்கள்; அவர்களின் வீடுகளுக்கும் தீ வைத்தார்கள். ஆறு வீடுகள் எரிந்து சாம்பலாயின. 18 ஜாடவ்கள் கடுமையாகக் காயமடைந்தார்கள். அவர்களுடைய வீடுகளிலிருந்து ஏராளமான பொருள்களை ரௌடிகள் எடுத்துச் சென்றார்கள்."

பத்திரிகையின் 1939 பிப்ரவரி இதழில் வெளியான செய்தி:

"ஆக்ரா மாவட்டம், கிர்வாலி வட்டம், அபய்புரா கிராமத்தின் ஜாட்கள் ஷெட்யூல் சாதி மக்களிடம் கட்டாய வேலை வாங்குவதும், வேலைக்கு ஊதியம் கேட்டால் அவர்களை அடிப்பதும் வழக்கம். மூன்று மாதங்களுக்கு முன் சிக்கி ஜாட்கள் சுக்ராம், கனஷ்யாம், ஹும்கா ஆகிய ஜாடவ்களிடம் கட்டாய வேலை வாங்கிக் கொண்டு அவர்களுக்கு ஊதியம் எதுவும் கொடுக்கவில்லை. இத்தகைய கொடுமைகளால் மனம் வெறுத்துப்போய் அவர்கள் தங்கள் கிராமங்களைவிட்டு வெளியேறி வேறு கிராமங்களில் தங்கள் உறவினர்களுடன் வசித்தார்கள். அப்போது ஜாட்கள் அவர்களின்

வீடுகளிலிருந்து பாத்திரங்களையும் மற்ற வீட்டுப் பொருள்களையும் எடுத்துச் சென்று ஒளித்து வைத்துவிட்டார்கள்."

'சாவதான்' பத்திரிகையின் 1945 ஜூன் 3-ஆம் தேதி இதழில் பின்வரும் சம்பவம் பற்றிச் செய்தி வெளியிடப்பட்டது:

"மேஹர்ஜி கேரி என்ற ஷெட்யூல் சாதிப் பெண், நகர மாஜிஸ்ட்ரேட் திரு. மஹ்பூப் ஆலமின் நீதிமன்றத்தில், காபி காவல் நிலையத்தைச் சேர்ந்த பிரமா சிங், சுலேமான், அப்டாப் ஆகிய காவலர்கள்மீது 376, 341 மற்றும் 354-ஏ பிரிவுகளின் கீழ் புகார் பதிவு செய்திருக்கிறார். 1945 மே 2-ஆம் தேதி இரவு 10.30 மணிக்கு இந்த மூன்று காவலர்களும் மற்றும் சிலரும் அவரது வீட்டைச் சோதனையிட்டு, அவரைக் காவல் நிலையத்திற்குக்கூட்டிச் சென்று இரவு முழுதும் அங்கே வைத்திருந்ததாகக் கூறப்படுகிறது. அதிகாலையில் இந்த மூன்று பேரும் அந்தப் பெண்ணை ஒரு சிறிய அறைக்குக் கூட்டிச் சென்று, அவரை மானபங்கம் செய்தார்கள். பிறகு அவரை மற்றொரு அறைக்குக் கூட்டிச் சென்று அவருடைய பெண் குறியில் கரியையும் காகிதத்தையும் வைத்து அடைத்தார்கள். அவருடைய வாயில் தங்களுடைய ஆண்குறிகளை வைத்தார்கள். அவருடைய ஆடைகள் கிழிந்துபோய் இரத்தத்தில் நனைந்து போயின. மறுநாள் முழுவதும் அவருடைய தாயார் கட்டாய வேலை செய்யவைக்கப்பட்டார். அதன்பின் இரவு 10 மணிக்கு இருவரும் விடுவிக்கப்பட்டார்கள்.

மகாராஜியின் கணவரின் தம்பி மனைவியான முரலாவும் இதே போன்ற புகார் பதிவு செய்திருக்கிறார். அதே காவலர்கள் அதே இரவில் தம்மையும் காவல் நிலையத்திற்குக் கூட்டிச் சென்றதாகவும் பின்பு வீட்டில் திரும்பக் கொண்டுவிட்டதாகவும் அவர் கூறியிருக்கிறார். வழியில், குமார் தோலா அருகே மதாரி தேலி அவரைப் பிடித்து ஓர் இடிந்த வீட்டிற்குக் கூட்டிச் சென்று மானபங்கம் செய்தார். வழக்கறிஞர்கள் திரு. முன்னாலால், திரு.பூஷன், திரு. ராம் பரோஸ் ஆகியோர் இவருடைய வழக்கில் ஆஜராகிறார்கள்.

'இந்துஸ்தான் டைம்ஸ்' 1945 ஏப்ரல் 15-ஆம் தேதி இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது:

"அம்பாலா மாவட்டம் துக்கேரி கிராமத்தில் கட்டாய வேலை செய்ய மறுத்ததற்காகப் பல ஹரிஜனங்களை ராஜபுத்திரர்களின் குழு ஒன்று சமீபத்தில் தாக்கியது. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் ஆகிய இரண்டு ஹரிஜனங்கள் கொல்லப்பட்டார்கள். ஹரிஜனங்களுக்குச் சொந்தமான பல வீடுகளுக்குத் தீ வைக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இந்த விஷயம் பற்றி விசாரிக்கும்படி காவல்துறை

ஆணையருக்கும் துணைத் தலைமை ஆய்வாளருக்கும் தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன.

இந்த உதாரணங்களிலிருந்து, தீண்டாதவர்களை ஒடுக்கிவைப்பதற்கும் நிறுவப்பட்ட முறைமையைப் பாதுகாப்பதற்கும் இந்துக்கள் வன்முறையைப் பயன்படுத்தவும், கொலைகூடச் செய்யவும் தயங்கமாட்டார்கள் என்பதை யாரும் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

திரு. லாஜ்பத் ராய் 'மகிழ்ச்சியற்ற இந்தியா' என்ற புத்தகம் எழுதியிருக்கிறார். மிஸ் மேயோ 'மதர் இந்தியா' என்ற தம்முடைய புத்தகத்தில் கூறியுள்ள குற்றச் சாட்டுகளை அவர் தமது புத்தகத்தில் மறுத்துக் கூறியிருக்கிறார். அமெரிக்காவில் நீக்ரோக்கள் அடித்துக் கொல்லப்படுவது பற்றியும் 'கு க்ளக்ஸ் க்ளான்' அமைப்பின் உறுப்பினர்கள் நீக்ரோக்கள் மீது இழைக்கும் கொடுமைகள் பற்றியும் அவர் விரிவாகவும் தெளிவாகவும் விளக்கிவிட்டுப் பின்வரும் வினாவை எழுப்புகிறார்:

"கேட்க வேண்டிய பொருத்தமான கேள்வி இதுதான்: பிராமணர்கள் பறையர்களிடம் காட்டும் நியாயமற்ற கொடுமையான மனப்பான்மை, அமெரிக்காவின் கு க்ளக்ஸ் க்ளான் உறுப்பினர்கள் நீக்ரோக்களிடம் காட்டும் மனப்பான்மையைவிட அதிக நியாயமற்றதாகவும் அதிக கொடுமையானதாகவும் உள்ளதா ? "

"இந்தியாவின் சாதிக் கொடுமைகள், வெள்ளையர்கள் வெள்ளையரல்லாதவர்களுக்குச் செய்த கொடுமைகளுடன் ஒப்பிடும்போது எம்மாத்திரம் ? "

லாலா லாஜ்பத் ராய் கவனமாக ஆராய்ந்திருந்தால், தீண்டாதவர்களுக்கு எதிராக இந்துக்கள் செய்யும் கொடுமைகள், நீக்ரோக்களுக்கெதிராக அமெரிக்கர்கள் செய்யும் கொடுமைகளைவிடக் குறைந்தவை அல்ல என்பதைக் கண்டிருக்கலாம். நீக்ரோக்கள் மீது இழைக்கப்படும் கொடுமைகளைப் போல இந்தக் கொடுமைகள் பற்றி உலகுக்கு அதிகமாகத் தெரியவில்லை என்றால் இந்தக் கொடுமைகள் இல்லை என்று பொருளல்ல. இந்துக்களின் வெட்ககரமான செயல்களை மறைப்பதற்கு ஒவ்வொரு இந்துவும் தம்மால் முடிந்ததனைத்தையும் செய்வதால் தான், இந்தக் கொடுமைகள் பற்றித் தெரியாமல் உள்ளது.

சிலர் நினைக்கலாம் - நிறுவப்பட்ட முறைமை பற்றியும், அதன்கீழ் செய்யப்பட்ட விதிகள் பற்றியும் இங்குத் தரப்பட்டுள்ள விவரங்கள் கடந்துபோய்விட்ட பண்டைக்காலத்தைச் சேர்ந்தவை என்று. ஆனால் உண்மையில், நிறுவப்பட்ட முறைமை இன்றும் நடப்பில் உள்ளது; அதன்கீழ் செய்யப்பட்ட விதிகள், அன்று போலவே இன்றும்

செயல்பாட்டில் உள்ளன. தீண்டாதவர்களின் நிலை பற்றி 'இந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகையில் வெளியான பின்வரும் இரண்டு அறிக்கைகள் இதைத் தெளிவாக்குகின்றன. முதல் அறிக்கையை உதய்பூரில் உள்ள வித்யா பவன் என்ற பள்ளியின் தலைமையாசிரியரான கேசரிலால்ஜி போர்டியா எழுதியிருக்கிறார். அது பின்வருமாறு:

"மேவாரில் வசிக்கும் ஹரிஜனங்கள் பற்பல துன்பங்களுக்கு உள்ளாகிறார்கள். அவர்கள் கோவில்களில் நுழையமுடியாது; பொதுக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்கமுடியாது. திருவிழாக்களிலும் ஊர்வலங்களிலும் அவர்கள் சாதி இந்துக்களுடன் சேரமுடியாது. அவர்கள் தங்களுடைய தேரோட்டத்தையும் 'டோல்' ஊர்வலத்தையும் வேறு பாதைகளிலும் வேறு நாட்களிலுமே நடத்தவேண்டும். அவர்கள் கிராமத்தின் வழியே சவாரி செய்து போகமுடியாது.

அவர்கள் வெள்ளி நகைகளை அணிவதைக்கூட சாதி இந்துக்கள் பொறுப்பதில்லை என்றால் தங்க நகைகளைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை. இதனால் அவர்கள் ஈயத்தாலும் பித்தளையாலும் செய்த பொருள்களைப் பயன்படுத்துவதோடு திருப்தியடைய வேண்டியது தான். அவர்களின் திருமண விருந்துகளில் வெண்ணெய் அல்லது வெல்லம் பயன்படுத்தப்படுவதையும் காலங்காலமாக உள்ள வழக்கம் தடைசெய்கிறது.

"பள்ளிக்கூடங்களிலும் மற்ற பொது இடங்களிலும் ஹரிஜனச் சிறுவர்கள் சாதி இந்துக்களின் குழந்தைகளுடன் சேர்ந்து உட்காரமுடியாது. பள்ளி ஆய்வாளர் வரும் நாட்களில் அவருக்குச் சங்கடத்தைத் தவிர்ப்பதற்காக அவர்கள் பள்ளிக்கு வரவேண்டாம் என்று கூறப்படுகிறது.

சமஸ்தான அரசுக்கு இதுபற்றி மனுக்கொடுக்கப்பட்டுள்ளது. இந்தக் கொடுமைகளை அரசு உறுதியாகக் கண்டனம் செய்தால் தீண்டாமையை எதிர்த்துப் போராடிவரும் அரசு சார்பற்ற நிறுவனங்களின் கைகளை அது வலுப்படுத்தும்."

இரண்டாவது அறிக்கையை ஹரிஜன சேவக் சங்கத்தின் தலைவர் வெளியிட்டுள்ளார். மேவார் சமஸ்தானத்தில் ஹரிஜனங்களின் நிலைமையை அவர் குறிப்பிட்டுள்ளார். அறிக்கை பின்வருமாறு கூறுகிறது:

"மேவார் சமஸ்தானத்தில் ஹரிஜனங்கள் அனுபவிக்கும் அல்லல்களைப் பற்றி மேவார் ஹரிஜன சேவக் சங்கம் சமஸ்தான அரசுக்கு ஒரு மனு சமர்ப்பித்துள்ளது. சாதி இந்துக்களின் பழமை மனப்பான்மையினாலும் பாரபட்சப் போக்கினாலும்

ஹரிஜனங்களின் சிவில் உரிமைகள் எவ்வாறு பலவகைகளிலும் பாதிக்கப்படுகின்றன என்று இந்த மனுவில் கூறப்பட்டுள்ளது.

இந்த சமஸ்தானத்தில் இன்னமும் காணப்படும் நியாயமற்ற நடைமுறைகள் சிலவற்றைக் கீழே குறிப்பிடுகிறேன். இவற்றை ஒழிப்பதற்கு சமஸ்தான அரசு உருப்படியாக எதுவும் செய்யவில்லை. இவை வருமாறு:

1. ஹரிஜனங்கள் தாங்கள் விரும்பும் உடையை அணிந்து கொள்வதற்குச் சுதந்திரம் இல்லை. காலங்காலமாக இருந்து வரும் வழக்கப்படிதான் உடை அணியவேண்டும். ஒருவரின் தனிப்பட்ட விருப்பப்படி உடைகளைத் தெரிந்தெடுக்க இடமே இல்லை.

2. திருமண விருந்துகளில் என்ன உணவுகளை வழங்குவதென்று அவர்கள் தெரிந்தெடுக்க முடியாது. அவர்கள் பணம் செலவிட்டால் கூட விலை உயர்ந்த பொருள்களைப் பயன்படுத்த முடியாது.

3. அவர்கள் கிராமத்தில் குதிரையில் அமர்ந்து போகமுடியாது.

4. பொது வாகனங்களில் அவர்களுக்கு இடம் அளிக்கப்படுவதில்லை.

5. சமய விழாக்களில் அவர்கள் தங்களுடைய சுவாமி ஊர்வலங்களை குறிப்பிட்ட பாதையில் மட்டுமே நடத்தவேண்டும்.

6. அவர்கள் கோவில்களுக்கும் கிணறுகளுக்கும் செல்ல அனுமதியில்லை. அறிக்கை மேலும் கூறுகிறது:

“மூன்றாண்டுகளுக்கு முன் டாக்குர் பாபாவுடன் நான் சமஸ்தானம் எங்கும் பயணம் செய்து நான் கண்ட நிலைமைகளை அரசுக்கும் மக்களுக்கும் எடுத்துக்கூறி சீர்திருத்தங்கள் செய்யக் கேட்டுக் கொண்டேன்.

ஆண்டுகள் சில சென்றபின் இப்போதும் நிலைமையில் மாற்றம் ஏதும் இல்லை. நிலைமைகள் அநேகமாக அப்படியே நீடிக்கின்றன.

“காலம் சென்றுகொண்டேயிருந்தாலும், நம்மிடம் மாற்றம் ஏதும் ஏற்படவில்லை என்பது உள்ளம் உடையச்செய்கிறது. காலங்காலமாக இருந்து வரும் வழக்கங்களும் பாரபட்ச நடத்தைகளும் மாற்றமின்றி நீடிக்கின்றன. நாம் செய்யும் கொடுமைகளையும் அநீதிகளையும் நாம் காணாமல் நம் கண்களை மறைக்கும் விபரீத மனப்பான்மையே, இவற்றின் விளைவாக நமக்கு ஏற்பட்டுள்ள கணக்கிடமுடியாத தீங்கையும் நாம் உணரமுடியாமல் செய்கிறது. சாதாரண மனிதர்களின் அறியாமையின் விளைவான பாரபட்ச உணர்வுகளை அசைக்க

முடியவில்லை என்றாலும் இருபதாம் நூற்றாண்டின் அறிவு விளக்கம் பெற்ற அரசுகளேனும் தங்கள் கடமைகளை உணரவேண்டும்."

இந்த அறிக்கைகளின் தேதி குறிப்பிடத்தக்கது. இவை 1945 - இல் வெளியிடப்பட்டுள்ளன. இந்துக்களின் நிறுவப்பட்ட முறைமை புராதனமான பழங்காலத்துக்கே உரியது என்று யாரும் கூறமுடியாது. இங்குக் கூறப்பட்ட விவரங்கள் இந்திய சமஸ்தானங்களில் உள்ள நிலைமைகளைக் குறிப்பிடுகின்றன என்பதால், பிரிட்டிஷ் இந்தியாவில் இந்த நிறுவப்பட்ட முறைமை மறைந்து விட்டதாகப் பொருள்கொள்ளக் கூடாது. இதே நிறுவப்பட்ட முறைமை பிரிட்டிஷ் இந்தியாவிலும் நடப்பில் இருப்பதைக் காட்டும் சான்றுகள் பின்வரும் அத்தியாயங்கள் தரப்படும்.

'டைம்ஸ் ஆப் இந்தியா' 1950 ஆகஸ்ட் 31-ஆம் தேதி இதழில் பின்வரும் செய்தி வெளியாகியுள்ளது:

"அலகாபாத் உயர்நீதிமன்றத்தில் மேல் முறையீடு வழக்கு ஒன்றில் வெளிப்பட்ட பின்வரும் விவரங்கள் கிராமப்புறங்களில் தாழ்ந்த சாதியினரின் சமூக,பொருளாதார நிலைமைகளை எடுத்துக்காட்டுகின்றன:

"ஏட்டா மாவட்டம் சராஸ் கிராமத்தைச் சேர்ந்த சிரஞ்ஜி என்ற சலவைத் தொழிலாளி, சென்ற உலகப்போரில் ராணுவத்தில் வேலையில் சேர்ந்து நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் கிராமத்துக்கு வெளியே இருந்தார். ராணுவப் பணியிலிருந்து விடுவிக்கப்பட்டபின் ஊருக்குத் திரும்பி வந்தார். அவர் துணி வெளுக்கும் வேலையை நிறுத்திவிட்டார். தம்முடைய ராணுவச் சீருடையை அணிந்து கொண்டு கிராமத்தில் செல்வது அவருடைய வழக்கமாயிருந்தது. அவருடைய இந்தச் செயலும், கிராமத்தின் ஜமீந்தாரன சராஸ் ராஜாவுக்குக் கூடத் துணி வெளுக்க அவர் மறுத்ததும் கிராமத்தினருக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. அவர்கள் சிரஞ்ஜியை ராஜாவின் இல்லத்திற்குக் கூட்டிச் சென்று அடித்தார்கள். அவருடைய தாயாரும், தாயாரின் சகோதரியும் குறுக்கிடச் சென்றபோது அவர்களும் தாக்கப்பட்டார்கள்.

"தாக்கியவர்கள் சிரஞ்ஜியை ராம் சிங் என்பவரின் காவலில் வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். அவர் தனி ஆளாக இருப்பதைப் பார்த்து சிரஞ்ஜி அவரை அறைந்துவிட்டு ஓடிப் போய்விட்டதாகக் கூறப்படுகிறது. ராம் சிங்கும், ராஜாவின் மற்ற வேலைக்காரர்களும் அவரைத் துரத்திக் கொண்டு அவருடைய வீட்டிற்குச் சென்றார்கள். அவர் வீட்டுக் கதவைத் திறக்க மறுத்ததால் அவர்கள் வீட்டுக்குத் தீவைத்தார்கள். வேறு பல வீடுகளும் கூடத் தீயில் எரிந்துபோயின.

சிரஞ்ஜி காவல் நிலையத்தில் புகார் கொடுத்தார். காவலர்கள் அவர் கூறியதை நம்ப மறுத்துப், பொய்ப் புகார் கொடுத்தற்காக அவர் மீது வழக்குப் போட விரும்பினார்கள். பின்பு அவர் மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் புகார் தாக்கல் செய்தார். குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு மூன்றாண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. மாஜிஸ்ட்ரேட் அளித்த தண்டனையை உயர்நீதிமன்றம் உறுதி செய்தது.

பின்வரும் செய்தி 'இந்தியன் நியூஸ் கிரானிக்கிள்' 1950 ஆகஸ்ட் 31-ஆம் தேதி இதழில் வெளியிடப்பட்டது:

'பெப்சு' வில் ஹரிஜனங்கள் மனிதத் தன்மையற்ற முறையில் நடத்தப்படுகிறார்கள்: தாழ்த்தப்பட்ட வகுப்புகள் லீக், அரசுக்கு மனு, பாடியாலா, ஆகஸ்ட் 1950: "பிற்படுத்தப்பட்ட வகுப்பு மக்கள் காரணமில்லாமல் அடிக்கப்படுதல், அவர்களின் பெண்களுக்கு மனிதத் தன்மையற்ற அவமதிப்புகள் இழைக்கப்படுதல், ஹரிஜனங்களை நிலங்களிலிருந்து வரைமுறையின்றி வெளியேற்றுதல், ஹரிஜனங்களையும் அவர்களின் கால்நடைகளையும் நாட்கணக்கில் வீடுகளிலேயே அடைத்து வைத்தல் - இவையெல்லாம் ஹரிஜனங்கள்படும் அல்லல்களின் அலைகளாகத் தொடர்ந்து நடந்து வருகின்றன." 'பெப்சு' மாகாண தாழ்த்தப்பட்ட வகுப்புகள் லீக் மாநில அரசுக்கு அளித்துள்ள ஒரு மனுவில் இவ்வாறு கூறியுள்ளது.

" 'பெப்சு' வில் காவல் துறையினரின் தீவிர நடவடிக்கைகள் காரணமாகப் பொதுவாகக் குற்றங்கள் குறைந்து வருகின்றன. ஆனால் பிற்படுத்தப்பட்ட வகுப்பு மக்களுக்கு சமூக விரோத சக்திகளிடமிருந்து பாதுகாப்புக் கிடைக்கவில்லை. பொருளாதாரத்தில் நலிவுற்ற பிற்பட்ட வகுப்பு மக்கள், தாங்கள் அன்றாடம் படும் அல்லல்கள் பற்றிச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் புகார் கூறி அவர்களின் பாதுகாப்பைப் பெற முடியாதவர்களாக உள்ளனர். எனவே அவர்கள் தங்களுடைய துன்பங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகிறார்கள். இந்த நிலை அவர்களைக் கொடுமைப்படுத்துவோருக்கு ஊக்கமளித்து மேலும் அத்தகைய செயல்களைச் செய்யத்தூண்டுகிறது," என்று அந்த மனுவில் கூறப்பட்டுள்ளது.

ஹரிஜனங்களுக்கு எத்தகைய மனிதத்தன்மையற்ற கொடுமை இழைக்கப்படுகிறது என்பதைக் காட்டுவதற்கு ஒரு சம்பவத்தை மாகாணத் தாழ்த்தப்பட்ட வகுப்புகள் லீக் எடுத்துக்காட்டியுள்ளது. பெர்னாலா மாவட்டத்தில் 'குடு' என்ற கிராமத்தில் சாந்த் சிங் என்ற

ஹரிஜன் உயர்சாதி ஜமீந்தாருக்குச் சொந்தமான கிணற்றில் தண்ணீர் குடித்ததற்காக அவரது முகத்தில் கரிபூசி, கழுதைமேல் ஊர்வலம் விட்டார்கள். "சுதந்திர இந்தியாவின் மாறிய சூழ்நிலையிலும் 'பெப்சு' வில் உள்ள ஷெட்யூல் சாதி மக்கள் உயர்சாதியினரால் நடத்தப்படும் எல்லையற்ற ஒடுக்குமுறைச் செயல்களுக்கு ஒவ்வொரு நாளும் உள்ளாகிக் கொண்டிருக்கிறார்கள்."

மாநிலத்தில், மாவட்ட மற்றும் மத்திய சிறப்புக் கமிஷன்களை அமைக்க வேண்டும் என்றும் மாகாணத் தாழ்த்தப்பட்ட வகுப்புகள் லீக் யோசனை கூறியுள்ளது. ஹரிஜனங்கள் கூறும் புகார்களின் பேரில் அந்த இடத்திலேயே நடவடிக்கை எடுத்து அவர்களுக்கு உதவியளிப்பதற்கு இந்தக் கமிஷன்களுக்கு அதிகாரம் இருக்க வேண்டும் என்று அது கூறியுள்ளது.

இறுதியாக, இந்த விஷயத்தில் அகில இந்திய அளவில் சட்டம் இயற்றப்படும் வரை, இப்போது நிலைமை மேலும் சீர்கெடாமல் தடுப்பதற்கு, மாநில அரசு தற்காலிகமாக கிராமப் பொதுவசதிகளில் ஹரிஜனங்களுக்குச் சம உரிமை அளிக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று லீக் கேட்டுக்கொண்டிருக்கிறது.

□□□

# இயல் - 7

*சட்டங்கெட்ட செயல்கள் ஏன் சட்டபூர்வமாகின்றன?*

இதுவரை கூறியவற்றிலிருந்து தெளிவாகியிருக்கும் இரண்டு விஷயங்களை மனத்தில் கொள்ள வேண்டும். ஒன்று, தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையில் உள்ள ஆழ்ந்த பிளவு; இன்னொன்று இவ்விரு பிரிவினருக்கும் இடையில் உள்ள ஆழ்ந்த பகைமை.

ஒவ்வொரு கிராமத்திலும் இரண்டு பகுதிகள் உள்ளன தீண்டத்தக்கவர்கள் வசிக்கும் பகுதி, தீண்டப்படாதவர்கள் வசிக்கும் பகுதி. இந்தப் பகுதிகள் அமைந்துள்ள நிலப்பகுதிகள் தனித்தனியாக உள்ளன. இரண்டுக்கும் இடையே கணிசமான தூரம் இருக்கும். எப்படியானாலும் இரண்டு பகுதிகளும் ஒன்றையொன்று அடுத்து அல்லது அருகருகே இருப்பதில்லை. தீண்டப்படாதவர்கள் வசிக்கும் பகுதிக்குத் தனியாக ஒரு பெயர் - மாஹர்வாடா, மாங்க்வாடா, சம்ரோத்தி, காட்கானா என்பது போல இருக்கிறது. சட்டப்படி வருவாய்த்துறை நிர்வாகம், அஞ்சல் தொடர்பு ஆகியவற்றுக்குத்

---

*இந்தக் கட்டுரை திரு.எஸ்.எஸ். ரேகேயிடமிருந்து பெறப்பட்டது. இதன் தலைப்பும் முந்திய இயலின் தலைப்பும் ஒன்றாகவே இருப்பதாலும் முந்திய இயலின் தொடர்ச்சி போல இதன் உள்ளடக்கம் இருப்பதாலும், இது, இங்குச் சேர்க்கப்பட்டுள்ளது -*

*-பதிப்பாசிரியர்.*

தீண்டப்படாதவர்கள் வசிக்கும் பகுதி கிராமத்தில் அடங்கியதாகவே உள்ளது. ஆனால், உண்மை நடைமுறையில், அது கிராமத்திலிருந்து தனிப்பட்டதாகும். ஒரு கிராமத்தில் வசிக்கும் இந்து, தன் கிராமம் என்று பேசும்போது அதனுடைய சாதி இந்துக்களையும் அவர்கள் வசிக்கும் பகுதியையும் மட்டுமே அவர் குறிப்பிடுகிறார். இதேபோல தீண்டப்படாதவர் ஒருவர், கிராமம் என்று கூறும்போது தீண்டப்படாதவர்களையும் அவர்கள் வசிக்கும் பகுதியையும் விலக்கியே குறிப்பிடுகிறார். இவ்வாறாக ஒவ்வொரு கிராமத்திலும் தீண்டத்தக்கவர்களும் தீண்டப்படாதவர்களும் இரண்டு தனித்தனிக் குழுக்களாகவே உள்ளனர். அவர்களிடையே பொதுவாக ஒன்றும் இல்லை[1]. இவர்கள் ஒரே மக்கள் தொகுதியாக இல்லை. இது தான் முதலாவதாகக் கருத்தில் கொள்ள வேண்டியது.

கிராமம் இரண்டு குழுக்களாகப் பிரிந்து அமைந்துள்ளதில் கவனிக்க வேண்டிய இரண்டாவது விஷயம், இந்தக் குழுக்கள் உண்மையிலேயே குழும அமைப்புகளாகவும் இவற்றில் உள்ளவர்கள் இவற்றை விட்டு வெளியே செல்ல முடியாதவர்களாகவும் இருப்பதாகும். ஒரு அமெரிக்கர் அல்லது ஐரோப்பியர் பல்வேறு வகையான குழுக்களைச் சேர்ந்தவராக உள்ளார் என்றும், ஆனால் இவற்றில் பெரும்பாலானவற்றில் அவர் தாமே சென்று "சேருகிறார்" என்றும் பொருத்தமாகக் கூறப்பட்டுள்ளது. அவர் ஒரு குடும்பத்தில் பிறக்கிறார் என்பது உண்மை என்றாலும், அவர் தாமே விரும்பினலான்றி ஆயுட்காலம் முழுவதும் அந்தக் குடும்பத்திலேயே இருந்துவிடுவதில்லை. அவர் தமது விருப்பப்படி தம்முடைய தொழில், வசிக்குமிடம், மனைவி, அரசியல் கட்சி ஆகியவற்றைத் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். பொதுவாகச் சொன்னால், அவர் தம்முடைய செயல்களைத் தவிர வேறு யாருடைய செயல்களுக்கும் பொறுப்பாளியல்ல. அவர் ஒரு "தனி நபர்" என்று கூறுவதில் அதிகப் பொருள் உள்ளது; ஏனென்றால் அவருடைய எல்லா உறவுகளையும் அவர் தாமே, தமக்காகவே முடிவு செய்கிறார் தீண்டப்படாதவரோ, தீண்டத்தக்கவரோ எந்த வகையிலும் தனி நபர்கள் அல்ல. ஏனென்றால் அவருடைய எல்லா உறவுகளும் அல்லது அநேகமாக எல்லா உறவுகளும், அவர் ஒரு குறிப்பிட்ட குழுவில் பிறந்தவுடனேயே தீர்மானிக்கப்பட்டு விடுகின்றன. அவருடைய தொழில், வசிக்குமிடம், கடவுள்கள், அரசியல் ஆகிய எல்லாமே அவருக்காக அவரது குழுவால் தீர்மானிக்கப்படுகின்றன. தீண்டத்தக்கவர்களும் தீண்டப்படாதவர்களும் சந்திக்கும்போது, அவர்கள் மனிதருடன் மனிதர் அல்லது தனி நபருடன் தனி நபர் என்ற முறையில் சந்திப்பதில்லை. குழுக்களின் உறுப்பினர்களாக அல்லது இரண்டு தனி நாடுகளின் குடிமக்கள் போலத்தான் சந்திக்கிறார்கள்.

ஒரு கிராமத்தின் தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையிலான உறவில் இந்த உண்மை முக்கியமான விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஆரம்பகாலச் சமுதாயத்தில் பல்வேறு குலக் குழுக்களுக்கிடையே இருந்த உறவைப் போல இந்த உறவு காணப்படுகிறது. ஆரம்பகாலச் சமுதாயத்தில் குலக்குழுவின் உறுப்பினருக்கு அதில் ஓர் உரிமை உண்டு, ஆனால் வெளியாருக்கு அதில் எந்தவிதமான இடமும் கிடையாது. அவர் அன்பாக, விருந்தினராக நடத்தப்படலாம்; ஆனால் தம்முடைய சொந்த குலக்குழுவைத் தவிர வேறு எதிலும் அவர் "நீதி" யை உரிமையாகக் கோரமுடியாது. ஒரு குலக்குழுவுக்கும் மற்றொரு குலக்குழுவுக்கும் இடையிலான உறவு நிலை, போர் அல்லது பேச்சுவார்த்தை மூலமே முடிவாகிறது; சட்ட அடிப்படையிலான உறவு நிலை என்பது கிடையாது. குலக்குழு இல்லாதவன் நடைமுறையிலும் பெயரிலும் சட்டத்துக்குப் புறம்பானவன். எனவே அன்னியர்களுக்கெதிரான சட்டவிரோதச் செயல்கள் சட்டபூர்வமாகின்றன. தீண்டப்படாதவர், தீண்டத்தக்கவர்கள் குழுவைச் சேர்ந்தவர் அல்ல என்பதால் அவர் ஓர் அன்னியர். அவர் ஒட்டுறவு உள்ளவர் அல்ல. அவர் சட்டத்துக்குப் புறம்பானவர். அவர் நீதி கேட்க முடியாது. தீண்டத்தக்கவர் மதிக்கக் கடமைப்பட்ட உரிமைகள் எதையும் அவர் கோரமுடியாது.

மூன்றாவதாகக் கவனிக்க வேண்டிய விஷயம், தீண்டத்தக்கவர்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையிலான உறவு இப்படித்தான் இருக்கவேண்டும் என்று தீர்மானித்து வைக்கப்பட்டுள்ளது. அது அந்தஸ்தைக் குறிக்கும் விஷயமாக உள்ளது. இந்த அந்தஸ்தின்படி, தீண்டப்படாதவர்களுக்குத் தீண்டத்தக்கவர்களை விடத் தாழ்வான நிலை சந்தேகத்துக்கிடமில்லாமல் தரப்பட்டுள்ளது. இந்தத் தாழ்வான அந்தஸ்தை வலியுறுத்துவதாகவே சமூக நடத்தை நெறிமுறை உருவாக்கப்பட்டுள்ளது. இந்த நெறிமுறைப்படிதான் தீண்டப்படாதவர்கள் நடந்து கொள்ளவேண்டும். இது எப்படிப்பட்ட நெறிமுறை என்பது ஏற்கெனவே விவரிக்கப்பட்டுள்ளது. தீண்டப்படாதவர் இந்த நெறிமுறைப்படி நடக்க விரும்பவில்லை. சீசருக்கு உரியதை சீசருக்குக் கொடுக்க அவர் தயாராயில்லை. தீண்டத்தக்கவருடன் தம்முடைய உறவுகள் ஒப்பந்த அடிப்படையில் இருக்கவேண்டும் என்ற தீண்டப்படாதவர் விரும்புகிறார். ஆனால் தீண்டப்படாதவர்கள் இந்த அந்தஸ்து விதிகளின்படியே நடக்கவேண்டும் என்றும், அதைவிட மேல்நிலைக்குச் செல்லக்கூடாது என்றும் தீண்டத்தக்கவர் விரும்புகிறார். இவ்வாறாக, என்றென்றைக்குமாகத் தீர்மானிக்கப்பட்டுவிட்டது என்று தீண்டத்தக்கவர் கருதுகின்ற ஒரு விஷயத்தை, மீண்டும் தீர்மானிப்பதில், கிராமத்தின் இரண்டு பகுதிகளான தீண்டத்தக்கவர்களும்

தீண்டப்படாதவர்களும் இப்போது போராடிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் போராட்டத்தின் மையமான கேள்வி இதுதான் - இந்த உறவு எந்த அடிப்படையில் இருக்கவேண்டும் ? ஒப்பந்த அடிப்படையிலா அல்லது அந்தஸ்து அடிப்படையிலா?

இதிலிருந்து சில சுவாரஸ்யமான கேள்விகள் எழுகின்றன. தீண்டப்படாதவர்களுக்கு இவ்வாறு மிகத் தாழ்ந்த அந்தஸ்து எப்படி வந்தது ? தீண்டப்படாதவர்களிடம் இத்தகைய பகைமையும் இழிப்பும் இந்துவிடம் எவ்வாறு ஏற்பட்டன? தீண்டப்படாதவர்களை ஒடுக்குவதற்குச் சட்டவிரோதச் செயல்களே சட்டபூர்வமானது என்பது போல சட்டவிரோதச் செயல்களில் அவர் ஏன் ஈடுபடுகிறார்?

இந்தக் கேள்விக்குச் சரியான விடை அளிப்பதற்கு இந்துக்களின் சட்டத்தைப் பார்க்கவேண்டும். இந்துச் சட்டத்தின் விதிகள் பற்றிய அறிவு இல்லாமல் இந்தக் கேள்விக்குத் திருப்தியான விடை கூறமுடியாது. நமது நோக்கத்திற்கு இந்துச் சட்டத்தின் எல்லாப் பிரிவுகளையும் பார்க்க வேண்டியதில்லை. இந்துச் சட்டத்தில் நபர்களின் சட்டம் என்று கூறக்கூடியதான பிரிவை மட்டும் தெரிந்துகொண்டால் போதும். இந்தப் பிரிவை எளிமையான சொற்களில் கூறினால், அந்தஸ்து வேறுபாடு காரணமாக மனிதர்களிடையே உரிமை, கடமை, இயங்குதல் ஆகியவற்றில் உள்ள வேறுபாடுகளைக் கூறும் சட்டம் என்று கூறலாம்.

எனவே, நபர்கள் பற்றிய இந்துச் சட்டத்தின் விதிகளின் பட்டியல் ஒன்று தரப்படும். இந்த விதிகள், மனு, யாக்ஞவல்கியர், நாரதர், விஷ்ணு, காத்யாயனர் முதலானவர்களின் சட்டப் புத்தகங்களிலிருந்து தொகுத்துத் தரப்படுகின்றன. சட்டம் விதிப்பதற்கு அதிகாரம் உள்ளவர்கள் என்று இந்துக்களால் ஏற்கப்படும் சட்ட நூல் ஆசிரியர்களில் முக்கியமானவர்களில் இவர்கள் சிலராவார்கள். இந்த விதிகளை அப்படியே எடுத்துக் கொடுத்தால், நபர்கள் பற்றிய இந்துச் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைப் படிப்பவர் தெரிந்து கொள்ள உதவியாயிராது. அதற்கு இவற்றை ஏதேனும் வகையில் வரிசைப்படுத்தித் தரவேண்டும். எனவே, இந்த விதிகளைப் பல பிரிவுகளின் கீழ், ஒவ்வொரு பிரிவும் ஒரு குறிப்பிட்ட பொருளைப் பற்றியதாக இருக்குமாறு தொகுத்துத் தருகிறேன்.

வெவ்வேறு வகுப்புகள்: அவற்றின் தோற்றமும் கடமைகளும்

1. இது (பிரபஞ்சம்) இருள் வடிவமாகவும், உணரப்படாமலும், குறிப்பான அடையாளங்கள் எதுவும் இல்லாமலும், அறிவு வாதத்திற்கு அடங்காததாகவும், அறியமுடியாததாகவும், ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கிக் கிடப்பதுபோல, இருந்தது.

1. மனு I.5;

*2. பின்பு தெய்விகமான, தானே உள்ளவர் (சுயம்பு) தாம் உணரப்படாதவராக இருந்துகொண்டு (ஆனால்) இவற்றை (எல்லாம்), ஐம்பெரும் பூதங்களையும் மற்றவற்றையும்; உணரக் கூடியதாகச் செய்து கொண்டு, தடுக்க முடியாத (படைப்புச்) சக்தியுடன், இருளை நீக்கிக் கொண்டு, தோன்றினார்.*

*3. ஆனால், உலகங்களின் நலத்துக்காக அவர் பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகியோரைத் தம்முடைய வாய், தோள்கள், தொடைகள், பாதங்கள் ஆகியவற்றிலிருந்து தோற்றுவித்தார்.*

*4. ஆனால், பிரபஞ்சத்தைப் பாதுகாப்பதற்காக, ஒளிமயமான அவர் தமது வாய், தோள்கள், தொடைகள், பாதங்கள் ஆகியவற்றிலிருந்து தோன்றியவர்களுக்கு, தனித்தனியான (கடமைகளையும்) தொழில்களையும் அளித்தார்.*

*5. பிராமணர்களுக்கு, அவர் (வேதங்களை) ஓதல், ஓதுவித்தல், (வேள்விகளை) தங்களுக்காக இயற்றுதல், பிறருக்காக இயற்றுவித்தல், (பிச்சை) ஈதல், ஏற்றல் என்ற தொழில்களை அளித்தார்.*

*6. சத்திரியர்கள், மக்களைக் காப்பதற்கும், கொடை அளிப்பதற்கும், வேள்வி நடத்துவதற்கும், (வேதங்களை) ஓதுவதற்கும், புலன் இன்பங்களில் பற்றுக் கொள்ளாமலிருப்பதற்கும் அவர் கட்டளையிட்டார்.*

*7. வைசியர்கள், கால்நடை வளர்க்கவும், கொடை அளிக்கவும், வேள்வி நடத்தவும், (வேதம்) ஓதவும், வாணிபம் செய்யவும், லேவாதேவி நடத்தவும், நிலத்தில் பயிர் செய்யவும் படைத்தார்.*

*8. சூத்திரர்களுக்கு இறைவன் ஒரு தொழில் மட்டுமே அளித்தார் இந்த (மற்ற) மூன்று சாதியினருக்கும் அடங்கிப் பணி செய்வதே அது.*

*9. மாணாக்கன், தொழில பயில்வோன், ஊதியத்திற்கு அமர்த்தப்பட்ட வேலையாள், நான்காவதாக, அதிகாரி ஆகியோர் உழைப்பாளர்களாகக் கருதப்பட வேண்டும். அடிமைகள் என்போர் வீட்டில் பிறப்பவர்களும் மற்றவர்களும்.*

*10. பணியாளர்கள், சட்டத்தின்படி ஐந்து வகை என்று அறிஞர்கள் வகுத்துள்ளனர். (மேலே கூறப்பட்ட) நான்கு வகை உழைப்பாளர்கள் இவர்களில் சேர்ந்தவர்கள்.*

*பதினைந்து விதமான அடிமைகள் (ஐந்தாம் வகை).*

*11. (எஜமானனின்) வீட்டில் பிறந்தவன், விலைக்கு வாங்கப்பட்டவன், (தானமாகப்)பெறப்பட்டவன், வாரிசுரிமை உடைமையாகக்*

*(2) மேற்படி I.6; (3) மேற்படி I.31; (4) மேற்படி I.87; (5) மேற்படி I.88; (6) மேற்படி I.89. (7)மனு I.90; (8) மேற்படி I.91; (9) நாரதர் V.3; (10) மேற்படி V.2; (11) மேற்படி V.26;*

கிடைத்தவன், பஞ்சக் காலத்தில் வைத்துப பராமரிக்கப்பட்டவன், உரிமையாளனால் அடகு வைக்கப்பட்டவன்.

12. பெரும் கடனிலிருந்து விடுவிக்கப்பட்டவன், சண்டையில் பிடிக்கப்பட்டவன், பந்தயத்தில் வெல்லப்பட்டவன், 'நான் உன்னுடைமை' என்று கூறிக்கொண்டு வந்தவன், சன்னியாசத்தைக் கைவிட்டவன், குறிப்பிட்ட காலத்துக்கு அடிமையாக்கப்பட்டவன்.

13. தனக்குப் பராமரிப்புப் பெறுவதற்காக அடிமையானவன், அடிமையான பெண்ணுடன் உள்ள தொடர்பு காரணமாக அடிமையாக்கப்பட்டவன், தன்னைத்தானே விற்றவன். இவர்கள் சட்டத்தில் கூறப்பட்ட பதினைந்து விதமான அடிமைகள்.

14. இவர்களில் முதலில் கூறப்பட்ட நான்கு விதமான அடிமைகளை இவர்களின் உடைமையாளர்கள் மனமுவந்து விடுவித்தாலன்றி அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கமுடியாது. இவர்களின் அடிமைநிலை பரம்பரையாகத் தொடர்வது.

15. இவர்கள் அனைவருக்கும் உடைமையாளனைச் சார்ந்திருக்கும் நிலை பொதுவானது. ஆனால் இவர்களுக்குள்ள இடமும் ஒரு வருமானம் பெறுவதும் இவர்களின் சாதியையும் தொழிலையும் பொறுத்தது.

*சட்டத்தின் முன் சமத்துவம்*

1. இரண்டு பேர் ஒருவரையொருவர் வசைமொழி கூறும்போது, அவர்கள் சமமான சாதியினராயிருந்தால் அவர்களின் தண்டனை சமமாயிருக்கும்; அவர்களில் ஒருவன் தாழ்ந்த சாதியாயிருந்தால் அவனுடைய தண்டனை இரண்டு மடங்காகும்; உயர்ந்த சாதியைச் சேர்ந்தவனுக்கு (சாதாரண தண்டனையில்) பாதி விதிக்கப்படும்.

3. சத்திரியன் மேல் வசைமொழி கூறும் பிராமணனுக்கு அபராதம் அரை நூறு (ஐம்பது பணம்), வைசியன்மீது வசைமொழி கூறினால் ஐம்பதில் பாதி (இருபத்தைந்து பணம்); சூத்திரன்மீது வசைமொழி கூறினால் பன்னிரண்டரை.

4. தவறு எதுவும் செய்யாத, ஒழுக்கம் உடைய சூத்திரன் மீது (வசைமொழி) கூறியவனுக்குத்தான் இந்தத் தண்டனை விதிக்கப்படுகிறது; ஒழுக்கமில்லாத (சூத்திரன்மீது) வசைமொழி கூறிய பிராமணன்மீது குற்றம் கூறமுடியாது.

---

(12) மேற்படி V.27; (13) மேற்படி V.28; (14) மேற்படி V.29; (15) மேற்படி V.4.

(1) பிருகஸ்பதி XX.5; (2) மேற்படி XX.6; (3) மேற்படி XX.7. (4) பிரகஸ்பதி XX.8;

5. சத்திரியன்மீது வசைமொழி கூறிய வைசியனுக்கு நூறு (பணம்) அபராதம் விதிக்கப்படும். வைசியன்மீது வசைமொழி கூறிய சத்திரியன், அதில் பாதித் தொகை அபராதம் செலுத்தவேண்டும்.

6. சூத்திரன்மீது வசைமொழி கூறிய சத்திரியனுக்கு அபராதம் இருபது பணம்; வைசியனுக்கு அபராதம் இரண்டு மடங்கு என்று சட்டம் அறிந்தோர் அறிவிக்கின்றனர்.

7. வைசியன்மீது வசைமொழி கூறிய சூத்திரனுக்கு முதல் அபராதம் விதிக்கப்படும்; சத்திரியன்மீது (வசைமொழி கூறியதற்கு) நடுத்தர அபராதம்; பிராமணன் மீது (வசைமொழி கூறியதற்கு) மிக அதிக அபராதம்.

8. பிராமணன்மீது அவதூறு கூறிய சத்தியனுக்கு நூறு (பணம்) அபராதம் விதிக்கப்படும்; வைசியனுக்கு நூற்றைம்பது அல்லது இருநூறு; சூத்திரன், தண்டனையாக அடிக்கப்படுவான்.

9. சத்திரியன்மீது அவதூறு கூறிய பிராமணனுக்கு ஐம்பது (பணம்) அபராதம் விதிக்கப்படும்; வைசியன் (விஷயத்தில்) அபராதம் இருபத்தைந்து பணமாகும்; சூத்திரன் (விஷயத்தில்) பன்னிரண்டு.

10. ஒரு பிறப்பாளன் (சூத்திரன்) ஒருவன், இருபிறப்பாளனைக் கடும் வசைமொழியால் அவமதித்தால் அவனுடைய நாக்கு துண்டிக்கப்படும்; ஏனென்றால், அவன் தாழ்ந்த பிறப்பை உடையவன்.

11. அவன் (இருபிறப்பாளர்களின்) பெயர்களையும் சாதிகளையும் அவமதிப்புடன் கூறினால், பத்து விரல் நீளம் உள்ள, சிவக்கக் காய்ச்சிய இரும்பு ஆணி அவன் வாயில் செலுத்தப்படும்.

12. அவன், அகம்பாவத்துடன் பிராமணர்களுக்கு அவர்களுடைய கடமையை அறிவுறுத்தினால், மன்னன் அவன் வாயிலும் காதிலும் கொதிக்கும் எண்ணெயை ஊற்றவேண்டும்.

13. பிராமணனும் சத்திரியனும் ஒருவர்மீது ஒருவர் வசைமொழி பேசினால், விவேகமுள்ள (மன்னன்) பிராமணனுக்கு மிகக் குறைந்த அபராதமும், சத்திரியனுக்கு மிகவும் நடுவான அபராதமும் விதிக்கவேண்டும்.

14. தாழ்ந்த சாதியைச் சேர்ந்த ஒருவன் எந்த உறுப்பினால் (மூன்று) உயர் (சாதிகளைச் சேர்ந்தவனுக்கு) தீங்கு செய்கிறானோ, அந்த உறுப்பு துண்டிக்கப்படும்; இது மனுவின் போதனை.

---

(5) மேற்படி XX.9; (6) மேற்படி XX 10; (7) மேற்படி XX.11; (8) மனு VIII.267; (9) மேற்படி 268; (10) மேற்படி VIII.270; (11) மேற்படி VIII.271; (12) மேற்படி VIII.272; (13) மேற்படி VIII.276; (14) மேற்படி VIII.279;

15. தன் கையை அல்லது கம்பை உயர்த்துகின்ற (தாழ்ந்த சாதிமனிதனான) அவனுடைய கை துண்டிக்கப்படும்; கோபத்தில் பாதத்தால் உதைக்கின்றவனுடைய பாதம் துண்டிக்கப்படும்.

16. உயர் சாதி மனிதன் ஒருவனுடன் ஒரே ஆசனத்தில் அமர முயலும் தாழ்ந்த சாதி மனிதனுடைய இடுப்பில் சூடு போடப்பட்டு, அவன் நாட்டைவிட்டு வெளியேற்றப்படுவான்; அல்லது (மன்னன்) அவனுடைய பிட்டத்தில் வெட்டச் செய்யவேண்டும்.

17. அகம்பாவத்தினால் அவன் (மேலானவன்மீது) துப்பினால் மன்னன் அவனுடைய இரண்டு உதடுகளையும் வெட்டச் செய்ய வேண்டும்; அவன் (அவன்மீது) சிறுநீர் கழித்தால் அவனுடைய ஆண்குறியை; அவன் (அவன்மீது) அபான வாயு விட்டால், குதத்தை வெட்ட வேண்டும்.

18. அவன் (மேலானவனுடைய) முடியைப் பிடித்தால், (மன்னன்) தயக்கமின்றி அவனுடைய கையை வெட்டிவிடவேண்டும்; இதேபோல அவன் (அவனுடைய பாதத்தை), தாடியை, கழுத்தை, குறிவிதைகளைப் பிடித்தாலும்.

### ஒவ்வொரு வகுப்பின் அந்தஸ்து, கௌரவம், இடம்

1. மனிதன் கொப்பூழுக்கு மேல் (கீழே உள்ளதை விட) தூய்மையானவன் என்று கூறப்படுகிறது; எனவே, தானே உள்ளவர் (சுயம்பு) தம்முடைய மிகத் தூய்மையான (பகுதி) தமது வாய் என்று அறிவித்தார்.

2. பிராமணன் வாயிலிருந்து தோன்றியதாலும், அவன் முதலில் பிறந்ததாலும், அவனிடம் வேதம் இருப்பதாலும், அவன் உரிமைப்படி, படைப்பு அனைத்துக்கும் அதிபதியாயிருக்கிறான்.

3. தானே உள்ளவர் (சுயம்பு) தவங்கள் செய்து முதலில் அவனைத் தம் வாயிலிருந்து தோற்றுவித்தார்; அவியாகக் கொடுக்கப்படும் பொருள்கள் தேவர்களுக்கும், பித்ருக்களுக்கும் சென்று சேருவதற்காகவும் பிரபஞ்சம் பாதுகாப்பாயிருப்பதற்காகவும் இவ்வாறு செய்தார்.

4. யாருடைய வாயின் மூலம் தேவர்கள் வேள்வியில் அளிக்கப்படும் உணவுகளை இடைவிடாது உண்கிறார்களோ, பித்ருக்கள் தங்களுக்கு அளிக்கப்படும் பொருள்களை உண்கிறார்களோ, அவனைவிட உயர்ந்ததாகப், படைக்கப்பட்ட பொருள் எது இருக்கமுடியும்?

---

(15) மேற்படி VIII.280; (16) மேற்படி VIII.281. (17) மனு VIII.282; (18) மேற்படி VIII.283 (1) மனு I.92; (2) மேற்படி I.93; (3) மேற்படி I.94; (4) மேற்படி I.95;

5. படைக்கப்பட்டவற்றில் உயிருள்ளவை சிறந்தவையாகும்; உயிருள்ளவற்றில் சிறந்தவை அறிவு பெற்றவையாகும்; அறிவுபெற்ற உயிர்களில் மனிதன் சிறந்தவன்; மனிதர்களில் பிராமணர்கள் சிறந்தவர்கள்.

6. பிராமணன் தோன்றும்போது உலகில் மிக உயர்ந்தவனாக, படைக்கப்பட்டவை அனைத்துக்கும் அதிபதியாகப் பிறக்கிறான்.

7. உலகத்தில் உள்ளவை அனைத்துமே பிராமணனின் உடைமையாகும்; தனது தோற்றத்தின் உயர்வு காரணமாக பிராமணன் உண்மையிலேயே எல்லாவற்றுக்கும் உரிமையாளன் ஆவான்.

8. பிராமணன் கல்லாதவன் ஆனாலும் கற்றவன் ஆனாலும் பெரிய தேவன் ஆவான்; நெருப்பு (அவி போடப்படுவதற்காக) எடுத்துச் செல்லப்பட்டாலும், இல்லையென்றாலும், பெரிய தேவனாயிருப்பதுபோல.

9. பிராமணர்கள் எல்லா (விதமான) தாழ்ந்த தொழில்களிலும் ஈடுபட்டாலும் அவர்களை எல்லா வகையிலும் கௌரவிக்கவேண்டும்; ஏனென்றால் அவர்கள் (ஒவ்வொருவரும்) பெரிய தேவர்கள் ஆவார்கள்.

10. ஆனால், (குழந்தைக்குப் பெயர் வைக்கும் சடங்கான) நாம தேயத்தை (குழந்தை பிறந்தபின்) பத்தாவது அல்லது பன்னிரண்டாம் நாளில், அல்லது அதிர்ஷ்டமான திதியில், அதிர்ஷ்டமான முகூர்த்தத்தில், சுபமான லக்கினத்தில் (தந்தை செய்ய வேண்டும் அல்லது) செய்விக்க வேண்டும்.

11. பிராமணனுடைய பெயரின் (முதல் பகுதி) மங்களமான (எதையேனும் குறிப்பதாக) இருக்கட்டும். சத்திரியனுடையது வலிமையையும், வைசியனுடையது செல்வத்தையும், சூத்திரனுடையது இகழ்வான (எதையேனும் குறிப்பதாக) இருக்கட்டும்.

12. பிராமணனுடைய (பெயரின்) (இரண்டாம் பகுதி) மகிழ்ச்சியைக் குறிக்கும் (சொல்லாக), சத்திரியனுடையது, காத்தல் செய்வதைக் குறிக்கும் (சொல்லாக), வைசியனுடையது, வளவாழ்வைக் குறிக்கும் (சொல்லாக) சூத்திரனுடையது, சேவையைக் குறிக்கும் (சொல்லாக) இருக்கவேண்டும்.

13. (பிராமணன்) சூத்திரர்களை ஆட்சியாளர்களாகக் கொண்ட நாட்டில் வசிக்காதிருப்பானாக. அறவழியில் செல்லாத மனிதர்களால்

---

(5) மேற்படி I.96; (6) மேற்படி I.99; (7) மேற்படி I.100; (8) மேற்படி IX.317; (9) மேற்படி IX.319; (10) மேற்படி II.30. (11) மனு II. 31; (12) மேற்படி II.32; (13) மேற்படி IV.61;

சூழப்பட்ட நாட்டிலும், சமயநெறிக்கு முரணாக உள்ளவர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட நாட்டிலும், தாழ்ந்த சாதி மனிதர்கள் நிறைந்த நாட்டிலும் அவன் வசிக்கவேண்டாம்.

14. (வழக்காடுவோரின்) வழக்குகளில், மன்னன் தானே தீர்ப்புக் காண முடியாதபோது, பல்வேறு சாத்திரங்களையும் கற்ற பிராமணன் ஒருவனை அதற்கு நியமிக்கவேண்டும்.

15. (குறிப்பிடப்பட்ட தகுதிகளைப் பெற்ற) பிராமணன் கிடைக்காதபோது (மன்னன்) புனிதச் சட்டத்தில் தேர்ச்சிபெற்ற சத்திரியனை அல்லது வைசியனை நியமிக்கவேண்டும்; ஆனால் சூத்திரனை நீதிபதியாக நியமிப்பதை (மன்னன்) கவனமாகத் தவிர்க்க வேண்டும்.

16. இவர்களைத் தவிர, மற்றவர்கள் (நீதிபதிகளாக) என்ன செய்தாலும் அது தவறானதாகவே கருதப்படவேண்டும். அவர்கள் (மன்னனின்) அதிகாரிகளாக இருந்தாலும், அவர்கள் செய்த முடிவுகள் புனித நூல்களில் கூறப்பட்டபடியே அமைந்திருந்தாலும் இவ்வாறே கருதவேண்டும்.

17. தனது சாதியின் பெயரை மட்டுமே வைத்து வாழ்கின்ற ஒரு பிராமணன், அல்லது தன்னை பிராமணன் என்று கூறிக்கொள்ளும் ஒருவன் (அவனுடைய பூர்விகம் நிச்சயமாகத் தெரியாமலிருந்தாலும்), மன்னன் விரும்பினால் சட்டத்தை உரைக்கலாம்; ஆனால், ஒருபோதும் சூத்திரன் அதைச் செய்யக்கூடாது.

18. சூத்திரன் சட்ட முடிவுகள் செய்வதைப் பார்த்துக்கொண்டிருக்கும் மன்னனுடைய நாடு, புதை சேற்றில் மூழ்கிப் போகும் பசுவைப்போல (தாழ்ந்து) மூழ்கிப் போகும்.

19. சட்டத்தை அறிந்த பிராமணன் (குற்றச் செயலை) மன்னனின் கவனத்துக்குக் கொண்டுவரத் தேவையில்லை; அவன் தன்னுடைய சொந்த அதிகாரத்தினாலேயே, தனக்குத் தீங்கு செய்வோரைத் தண்டிக்கலாம்.

20. அவனுடைய சொந்த அதிகாரம் மன்னனின் அதிகாரத்தை விடப் பெரியது; எனவே பிராமணன் தனது எதிரிகளைத் தன்னுடைய சொந்த அதிகாரத்தை மட்டுமே வைத்து தண்டிக்கலாம்.

21. பிராமணன் (உலகத்தைப்) படைத்தவனாகவும், தண்டிப்பவனாகவும், குருவாகவும் (உள்ளவன்) என்றும், (எனவே) (படைக்கப்பட்ட எல்லா உயிர்களுக்கும்) நன்மை செய்வோன் என்றும்

(14) காத்யாயனர் 63; (15) மேற்படி 67; (16) மேற்படி 68; (17) மனு VIII.21; (18) மேற்படி VII.21; (19) மேற்படி XI.31; (20) மேற்படி XI.32; (21) மேற்படி XI.35.

அறிவிக்கப்படுகிறது. அவனிடம் யாரும் மங்களமல்லாத எதையும் சொல்லவோ, கடுமையான சொற்களைப் பேசவோ, கூடாது.

வகுப்புகளின் இடையிலான உறவு

I

1. நான்கு சாதிகளின் எதிர்முறை வரிசையில் அடிமையாதல் விதிக்கப்படவில்லை.

2. மூன்று வருணங்ளைச் சேர்ந்தவர்கள் அடிமையாக முடியும். ஆனால், பிராமணன் ஒரு போதும் அடிமையாக முடியாது. (மூன்று) வருணத்தினர், அதாவது, சத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகியோர் இந்த நேர்வரிசை முறையில் முடியாது. சூத்திரன் நான்கு சாதிகளையும் சேர்ந்த எந்த எஜமானனுக்கும் அடிமையாகலாம்; வைசியன், முதல் மூன்று சாதிகளையும் சேர்ந்த எந்த எஜமானனுக்கும் அடிமையாகலாம், ஆனால் சூத்திர எஜமானுக்கு அடிமையாக முடியாது; சத்திரியன், பிராமணசாதியை அல்லது சத்திரிய சாதியைச் சேர்ந்த எஜமானுக்கு அடிமையாகலாம், ஆனால், வைசிய சாதியை அல்லது சூத்திர சாதியைச் சேர்ந்த எஜமானுக்கு அடிமையாக முடியாது.

3. ஒரே சாதியைச் சேர்ந்தவன் (அதாவது, பிராமணன்) கூட, பிராமணனை அடிமையாக வேலை செய்யவைக்கக் கூடாது.

சத்திரியன், வைசியன் அல்லது சூத்திரன் எப்போதேனும் தன்னுடைய சாதியைச் சேர்ந்த ஒருவனுக்கு அடிமையாக வேலை செய்யலாம், ஆனால் பிராமணனை ஒருபோதும் அடிமை வேலை செய்யவைக்கக்கூடாது.

II

4. இருபிறப்பாளர்களான ஆண்களின் முதல் திருமணத்திற்குச் சம சாதி (மனைவியர்) ஏற்கத்தக்கவர்கள்; ஆனால் (மீண்டும் திருமணம் செய்ய) விரும்புபவர்களுக்கு (சாதிகளின்) நேர் வரிசைப்படி (தெரிந்தெடுக்கப்படும்) பின்வரும் பெண்கள் மிகவும் ஏற்கத்தக்கவர்கள்.

5. சூத்திரப் பெண் மட்டுமே சூத்திரனின் மனைவியாக இருக்க முடியும்; அவளும், அவனுடைய சொந்த சாதியைச் சேர்ந்த பெண்களும் வைசியனின் (மனைவிகள்) ஆக முடியும்; இந்த இரண்டு சாதிப் பெண்களும் அவனுடைய சொந்த சாதிப் பெண்களும் சத்திரியனின் (மனைவிகள்) ஆக முடியும், இந்த மூன்று சாதிப் பெண்களும் அவனுடைய சொந்த சாதிப் பெண்ணும் பிராமணனின் (மனைவிகள்) ஆக முடியும்.

(1) நாரதர் ப.39 (2) காத்யாயனர் 715-716, (3) மேலது 717 - 718, (4) மனு 111.12 (5) மேலது 111.12

6. இருபிறப்பாளரான ஆண்கள் தங்கள் சாதியையும் மற்ற (கீழ் சாதிகளையும் சேர்ந்த) பெண்களையும் மணந்தால் இந்த (மனைவிகளின்) வரிசைமுறையும் கௌரவமும் வசிக்குமிடமும் இந்தச் சாதிகளின் (வருணங்களின்) வரிசைமுறைப்படி தீர்மானிக்கப்படும்.

7. (இருபிறப்பாளரான ஆண்கள் எல்லோரிலும்) சம சாதியைச் சேர்ந்த மனைவி மட்டுமே கணவனின் கூட இருந்து அவனுடைய தினசரி புனிதக் கடமைகளில் உதவி செய்ய வேண்டும்; மற்ற சாதி மனைவி செய்யக்கூடாது.

8. இருபிறப்புச் சாதியைச் சேர்ந்த பாதுகாப்புள்ள அல்லது பாதுகாப்பில்லாத சூத்திரன் (பின்வருமாறு தண்டிக்கப்படவேண்டும்); பாதுகாப்பு இல்லாத பெண்ணாக இருந்தால், அவன் (தவறுசெய்த) உறுப்பையும் தன்னுடைய சொத்துக்கள் எல்லாவற்றையும் இழக்கிறான்; பாதுகாப்பு உள்ள பெண் என்றால் எல்லாவற்றையும் (உயிரையும் கூட) இழக்கிறான்.

9. (பாதுகாப்பு உள்ள பிராமணப் பெண்ணுடன் உடலுறவு கொள்ளும்) வைசியன் ஓராண்டு சிறையில் வைக்கப்பட்ட பின் அவனுடைய சொத்துக்கள் எல்லாம் பறிமுதல் செய்யப்படும்; சத்திரியனுக்கு ஆயிரம் (பணம்) அபராதம் விதிக்கப்படுவதுடன் கழுதையின் மூத்திரத்தைக் கொண்டு சவரம் செய்யப்படுவான்.

10. வைசியன் அல்லது சத்திரியன் பாதுகாப்பு இல்லாத பிராமணப் பெண்ணுடன் தொடர்பு கொண்டால் வைசியனுக்கு ஐந்நூறு (பணம்) சத்திரியனுக்கு ஆயிரம் அபராதம் விதிக்கவேண்டும்.

11. ஒரு வைசியன், பாதுகாப்பு உள்ள சத்திரியப் பெண்ணை அணுகினாலும், சத்திரியன் (பாதுகாப்பு உள்ள) வைசியப் பெண்ணை அணுகினாலும், இருவருக்கும் பாதுகாப்பு இல்லாத பிராமணப் பெண்ணின் விஷயத்தில் உள்ள தண்டனை அளிக்கப்படவேண்டும்.

12. ஒரு பிராமணன் அந்த இரண்டு (சாதிகளின்) (பெண்களுடன்) உடலுறவு கொண்டால் ஆயிரம் (பணம்) அபராதம் செலுத்தவேண்டும்; பாதுகாப்பு உள்ள சூத்திரப் பெண்ணிடம் தவறு செய்தால் சத்திரியன் அல்லது வைசியனுக்கு ஆயிரம் (பணம் அபராதம் விதிக்கப்படும்).

13. பாதுகாப்பு இல்லாத சத்திரிய (பெண்ணுடன்) உடலுறவு கொள்ளும் வைசியனுக்கு ஐந்நூறு (பணம் அபராதம் விழும்); இதே

---

(6) மேலது IX.85 (7) மேலது IX.86 (8) மேலது ப. 111.374 (9) மேலது VIII.375 (10) மேலது ப. 376. (11) மனு VIII.382; (12) மேற்படி VIII.383 (13) மேற்படி VIII.384; (14) மேற்படி VIII.385; (15) மேற்படி III.93

குற்றத்தைச் செய்த சத்திரியன் (கழுதையின்)மூத்திரத்தைக் கொண்டு சவரம் செய்யப்படுவான், அல்லது அதே அபராதம் (செலுத்த வேண்டும்).

15. (இல்வாழ்வான்) தன் வீட்டிற்குத் தாமே வரும் விருந்தினருக்கு, விதிப்படி ஆசனமும் தண்ணீரும் கொடுத்துத், தனது சக்திக்குத் தக்கபடி (நறுமணப் பொருள்கள்) சேர்க்கப்பட்ட உணவும் அளிக்கவும்.

16. ஆனால், ஒரு பிராமணனின் வீட்டிற்கு (வரும்) சத்திரியன் விருந்தினர் (அதிதி) எனக் கூறப்படுவதில்லை; அவ்வாறே ஒரு வைசியன், ஒரு சூத்திரன், ஒரு நண்பன், ஒரு உறவினன், ஆசிரியர் ஆகியோரும் கூறப்படுவதில்லை.

17. ஆனால், ஒரு சத்திரியன் பிராமணனின் வீட்டிற்கு விருந்தாளியைப் போல வந்தால், (இல் வாழ்வான்) பிராமணர்கள் உண்டபின் அவனுக்குத் தன் விருப்பப்படி உணவு அளிக்கலாம்.

18. ஒரு வைசியனோ சூத்திரனோ கூட விருந்தாளிகளைப் போலத் தன் வீட்டிற்கு வந்தாலும், அவர்கள் தன்னுடைய வேலைக்காரர்களுடன் உண்ண அவன் அனுமதிக்கலாம்; அவன் தன்னுடைய கருணை உள்ளத்தை (இதன் மூலம் காட்டலாம்).

## கடமைகள் - சிறப்பு உரிமைகள் - விலக்கு உரிமைகள் இயலாமைகள்

### I

1. பிரம்மத்துடன் (ஒன்றுவதற்கு) வழிகாண்பதில் தீவிரமாக உள்ளவர்களும் தங்கள் கடமைகளை (நிறைவேற்றுவதில்) உறுதியாக உள்ளவர்களுமான பிராமணர்கள், (உரிய) வரிசையில் எடுத்துக் கூறப்பட்டுள்ள பின்வரும் ஆறு செயல்களை முறைப்படி செய்து வாழ்வார்கள்.

2. கற்பித்தல், கற்றல், தனக்காக வேள்வி செய்தல், பிறருக்காக வேள்வி செய்தல், தானம் ஈதல், தானம் ஏற்றல் ஆகியவை பிராமணனுக்கு (விதிக்கப்பட்ட) ஆறு செயல்கள்.

3. அவனுக்கு (விதிக்கப்பட்ட) ஆறு செயல்களுள் மூன்று, அதாவது, பிறருக்காக வேள்வி செய்தல், கற்பித்தல், நல்லவர்களான மனிதர்களிடமிருந்து தானம் ஏற்றல் ஆகியவை அவனுடைய வாழ்க்கை ஆதார வழிகளாகும்.

4. பிராமணனை அடுத்து சத்திரியனை (எடுத்துக் கொண்டால்), (முன்னவனின் கடமையாக உள்ள) மூன்று செயல்கள், அதாவது,

---

(16) மேற்படி III.110; (17) மேற்படி III.111; (18) மேற்படி III.112.

(1) மனு X.74. (2) மனு X.75; (3) மேற்படி X.76; (4) மேற்படி X.77;

கற்பித்தல், பிறருக்காக வேள்வி செய்தல், அதன்மூலம் தானங்களை ஏற்றல் ஆகியவை தடை செய்யப்படுகின்றன.

5. இதே போல, இவை, வைசியனுக்கும் தடை செய்யப்படுகின்றன; இது முடிவான விதியாகும்; படைப்புயிர்களின் அதிபதியான (பிரஜாபதி) மனு இவற்றை இந்த இரண்டு (சாதிகளின்) (மனிதர்களுக்கு) விதிக்கவில்லை.

6. அடிப்பதற்கும் எய்வதற்குமான ஆயுதங்களை ஏந்திச் செல்வது சத்தியர்களுக்கு வாழ்க்கை ஆதார வழியாக (விதிக்கப்படுகிறது); வாணிபம் செய்வது, கால்நடை (வளர்ப்பது), விவசாயம் வைசியர்களுக்கு; ஆனால் இவர்களின் கடமைகள் கொடுத்தல், வேதம் கற்றல், வேள்வி செய்தல் ஆகும்.

7. பலவகைத் தொழில்களுள்ளும் வேதத்தைக் கற்பித்தல் பிராமணனுக்கும், மக்களைப் பாதுகாத்தல் சத்திரியனுக்கும், வாணிபம் வைசியனுக்கும் மிகச் சிறந்தவையாகும்.

8. பிராமணர்களுக்குச் சேவை செய்வது மட்டுமே சூத்திரனுக்கு மிகச் சிறந்த தொழில் என்று அறிவிக்கப்படுகிறது; இதைத் தவிர அவன் எதைச் செய்தாலும் அதனால் அவனுக்குப் பயன் கிடைக்காது.

## II

9. ஆனால், ஒரு பிராமணன் இங்கு அவனுக்கு விதித்துக் கூறப்பட்ட சிறப்புத் தொழில்கள் மூலம் வாழ்க்கை நடத்த முடியவில்லை என்றால், அவன் சத்திரியனுக்கு உரிய சட்டத்தின்படி வாழலாம்; ஏனென்றால் சத்திரியன், வரிசையில் அவனுக்கு அடுத்த இடத்தில் இருக்கிறான்.

10. இந்த இரண்டு வகை (தொழில்களாலும்) அவன் வாழ முடியவில்லை என்றால் (என்ன செய்வது என்று வினவினால் அதற்கு விடை) அவன் வைசியனின் வாழ்க்கை முறையை மேற்கொண்டு, விவசாயத்திலும் கால்நடை வளர்ப்பிலும் ஈடுபடலாம்.

11. துன்பத்தில் வீழ்ந்துவிட்ட சத்திரியன் (வைசியனுக்கு அனுமதிக்கப்பட்ட வழிகளின்மூலம் வாழலாம்.

12. தனது சொந்தக் கடமைகளின் மூலம் வாழமுடியாத வைசியன் சூத்திரனின் வாழ்க்கை முறையைப் பின்பற்றி உயிர்வாழலாம்; (ஆயினும்) (அவனுக்குத்) தடை செய்யப்பட்ட செயல்களைத் தவிர்க்க வேண்டும்; அவனால் முடியும்போது இந்த வாழ்க்கை முறையை விட்டுவிடவேண்டும்.

---

(5) மேற்படி X.78; (6) மேற்படி X.79; (7) மேற்படி X.80; (8) மேற்படி X. 123; (9) மேற்படி X.81; (10) மேற்படி X.82; (11) மேற்படி X.95; (12) மேற்படி X.98;

13. ஆனால், ஒரு சூத்திரன் இருபிறப்பாளரிடம் சேவை செய்யக் கிடைக்காமல் (பசியினால்) மனைவி மக்களை இழந்துவிடக்கூடிய அபாயம் நேர்ந்தால் கைத்தொழில்கள் செய்து வாழ்க்கை நடத்தலாம்.

14. ஒரு சத்திரியன் ஒருபோதும் அகம்பாவத்துடன் தன்னைவிட மேலானவர்களுக்கு, அதாவது பிராமணர்களுக்கு (விதிக்கப்பட்ட) வாழ்க்கை முறையைப் பின்பற்றக்கூடாது.

15. வைசியன் வாணிபம் செய்யவும், லேவாதேவி நடத்தவும், நிலத்தில் பயிர் செய்யவும், கால்நடை வள்ர்க்கவும், சூத்திரன் இருபிறப்பாளருக்குச் சேவை செய்யவும் மன்னன் கட்டளையிட வேண்டும்.

16. வைசியர்களும் சூத்திரர்களும் தங்களுக்கு (விதிக்கப்பட்ட) வேலையைச் செய்யும்படி (மன்னன்) கவனமாகக் கட்டாயப்படுத்த வேண்டும்; ஏனென்றால், இந்த இரண்டு (சாதிகளும்) தங்களுடைய கடமைகளிலிருந்து விலகினால், அது இந்த, உலகம் (முழுவதையும்) குழப்பத்தில் தள்ளிவிடும்.

## IV

1. பார்வையில்லாதவன், மந்த மதியுடையவன், ஊன்றுகோல் உதவியுடன் நடமாடும் (ஊனமுற்றவன்), எழுபது வயது நிரம்பியவன், சுரோத்திரியர்களுக்கு நன்மைகள் அளிப்பவன் ஆகிய இவர்கள் வரி செலுத்தும்படி (மன்னன்) கட்டாயப் படுத்தக்கூடாது.

2. (நிதி இன்மையால்) இறப்பதாயிருந்தாலும் மன்னன் சுரோத்திரியர்கள் மீது வரி விதிக்கக் கூடாது; அவனுடைய நாட்டில் வசிக்கும் சுரோத்திரியர் யாரும் பசியால் மடியக்கூடாது.

3. மன்னன் தன் நாட்டில் பொருள்கள் விற்று வாழ்க்கை நடத்தும் சாதாரண மக்கள், ஆண்டுக்கொரு முறை ஒரு சிறுதொகையை வரியாகச் செலுத்தச் செய்வானாக.

4. இயந்திர வேலை செய்வோர், கைத்தொழில்கள் செய்வோர், உடல் உழைப்பால் வாழ்க்கை நடத்தும் சூத்திரர்கள் ஆகியோரை அவன் (மன்னன்) ஒவ்வொரு மாதமும் ஒரு (நாள்) (தனக்காக) வேலை செய்ய வைக்கலாம்.

5. (தலையை) மழிப்பது, பிராமணனுக்கு (மரண தண்டனைக்குப் பதிலாக) விதிக்கப்படுகிறது; ஆனால் மற்ற சாதிகளைச் சேர்ந்தவர்களுக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும்.

---

(13) மேற்படி X.99 (14) மனு X. 95; (15) மேற்படி VIII.410; (16) மேற்படி VIII.418; (1) மனு VIII 334; (2) மனு VII.133; (3) மனு VIII.137; (4) மேற்படி VII 138; (5) மேற்படி VIII.379;

6. பிராமணன் எல்லாக் குற்றங்களையும் செய்திருந்தாலும் (மன்னன்) ஒருபோதும் அவனைக் கொல்லக்கூடாது. அப்படிப்பட்ட (குற்றவாளியை) அவனுடைய சொத்துக்களையெல்லாம் (தனக்கு) விட்டு விட்டு, அவனுடைய (உடலுக்குத்) தீங்கு இல்லாமல் நாட்டைவிட்டு நீங்கச் செய்யவும்.

7. பிராமணனைக் கொல்வதைவிடப் பெரிய குற்றம் பூமியில் கிடையாது; எனவே மன்னன் தன் மனத்தில் கூட பிராமணனைக் கொல்வது பற்றி நினைக்கக் கூடாது.

8. கல்வி கற்ற பிராமணன் ஒருவன் முந்தைய (காலங்களில்) வைக்கப்பட்ட புதையலைக் கண்டால், அவன் (அது) முழுவதையும் எடுத்துக் கொள்ளலாம்; ஏனென்றால் அவன் எல்லாவற்றுக்கும் அதிபதியாவான்.

9. மன்னன் பழங்காலத்தில் பூமியில் மறைத்துவைக்கப்பட்ட புதையலைக் கண்டால், பாதியைப் பிராமணர்களுக்குக் கொடுத்துவிட்டு; (மற்றப்) பாதியைத் தனது கருவூலத்தில் வைப்பானாக.

வாழ்க்கை முறை

1. தூயவனாகத், தன்னைவிட மேலானவர்களின் பணியாளனாகப், பேச்சில் சாந்தமானவனாகக், கர்வம் இல்லாதவனாக, எப்போதும் பிராமணர்களிடம் புகலடைபவனாக (உள்ள சூத்திரன்) அடுத்த பிறவியில் மேல் சாதியைப் பெறுகிறான்.

2. ஆனால் சூத்திரன், சுவர்க்கத்திற்காகவாவது, அல்லது (இம்மை, மறுமை ஆகிய) இரண்டிற்காகவாவது பிராமணர்களுக்குப் பணி செய்யவும்; ஏனென்றால் பிராமணர்களின் பணியாளன் என்று அழைக்கப்படுபவன் அதன் மூலம் தன்னுடைய எல்லா நோக்கங்களையும் அடைகிறான்.

3. சூத்திரன் (பிராமணர்களிடம் பணிசெய்து வாழ முடியவில்லையென்றால்) அவன் சத்திரியர்களிடம் பணிசெய்யலாம், அல்லது செல்வந்தனான வைசியனிடம் பணி செய்து வாழலாம்.

4. அவர்கள் தங்களுடைய குடும்பச் சொத்தில் இருந்து தகுந்த ஒரு பராமரிப்பை, அவனுடைய திறமைக்கும், உழைப்புக்கும், அவன் காப்பாற்ற வேண்டியவர்களின் எண்ணிக்கைக்கும் தகுந்தபடி ஒதுக்கிக் கொடுக்க வேண்டும்.

---

(6) மனு VIII.380; (7) மனு VIII.381; (8) மேற்படி VIII.37; (9) மேற்படி VIII33. (1) மனு IX. 335; (2) மேற்படி X.122; (3) மேற்படி X. 121; (4) மேற்படி X. 124;

5. அவர்களுடைய உணவின் மிச்சம் அவனுக்குக் கொடுக்கப்பட வேண்டும்; அவர்களுடைய பழைய துணிகள், கழிவு தானியங்கள், பழைய வீட்டுச் சாமான்கள் ஆகியவற்றையும் கொடுக்க வேண்டும்.

6. சூத்திரன் செல்வம் சேர்க்கும் திறன் பெற்றவனாயிருந்தாலும் அவன் செல்வம் சேர்க்கக்கூடாது; ஏனென்றால் செல்வம் சேர்த்துள்ள சூத்திரன், பிராமணர்களுக்கு வேதனை தருகிறான்.

7. சட்டத்தின்படி வாழ்கின்ற சூத்திரர்கள் (தங்கள் தலைகளை) ஒவ்வொரு மாதமும் சவரம் செய்யவேண்டும்; அவர்கள் தூய்மை செய்து கொள்ளும் முறை வைசியர்களின் முறையே ஆகும். அவர்களுடைய உணவு, ஆரியன் உண்ணும் உணவின் துணுக்குகளே ஆகும்.

முன்னமே கூறியது போல, புராதன சட்ட ஆசிரியர்கள் கருத்தில் கொண்டு சட்டம் இயற்றிய சமூகத்தில் இரண்டு பகுதிகள் இருந்தன - இவற்றில் ஒன்று சதுர்வர்ண முறையின் உள்ளே அமைந்திருந்தது. மற்றப் பகுதி சதுர்வர்ண முறைக்கு வெளியே உள்ள மக்களைக் கொண்டது. இவர்கள் தாழ்ந்த சாதியினர் என்று பேசப்படுகிறார்கள். இந்தத் தாழ்ந்த சாதிகள் எப்படி ஏற்பட்டன என்பதுபற்றி நான் இப்போது ஆராயவில்லை. புராதன இந்துச் சட்ட ஆசிரியர்களின் கூற்றுப்படி சதுர்வர்ண முறையின் உள்ளே உள்ள அந்த நான்கு சாதிகளிடையே - பிராமணர்கள் சத்திரியர்கள் வைசியர்கள் - சூத்திரர்கள் ஆகியோரிடையே ஏற்பட்ட கலப்பு மணங்களால் தோன்றிய சந்ததிகளால் இவை உருவாயின என்று மட்டும் கூறுவது போதுமானது. இது எவ்வளவு தூரம் உண்மை என்பது வேறொரு சமயத்தில் ஆராயப்படும். நாம் இப்போது முதன்மையாக, சமூக உறவுகள் பற்றித்தான் ஆராய்கிறோம், அவற்றின் தோற்றம் பற்றி அல்ல. இதுவரை சதுர்வர்ண முறையின் உள்ளே உள்ளவர்கள் சம்பந்தப்பட்ட சட்டங்கள் மட்டுமே தரப்பட்டன. சதுர்வர்ண முறையின் வெளியே உள்ளவர்கள் அல்லது தாழ்ந்த சாதிகள் என்று அழைக்கப்பட்டவர்கள் பற்றிய சட்டங்களைத் தருவதுதான் இனி மிஞ்சியுள்ளது. தாழ்ந்த சாதிகளின் வாழ்க்கையைஒழுங்குபடுத்தும் சட்டங்கள் மிகச் சிலவே என்பது விசித்திரமானது. அவை சிலவாக இருந்தாலும் அவை நறுக்கென்று கூறப்பட்டிருப்பதால் விரிவான சட்டங்களுக்குத் தேவை இருப்பதாகத் தோன்றவில்லை. அவை வருமாறு:

1. (பிரம்மத்தின்) வாய், தோள்கள், தொடைகள், பாதங்கள் ஆகியவற்றில் இருந்து தோன்றியவர்களின சமுதாயத்திற்கு வெளியில் உள்ள எல்லா இனக்குழுக்களும், அவர்கள் மிலேச்சர்களின்

(5) மேற்படி X.125; (6) மேற்படி X. 129. (7) மேற்படி ப.140.

(1) மனு X. 45;

(நாகரிகமற்றவர்களின்) மொழியை அல்லது ஆரியர்களின் மொழியைப் பேசினாலும், தஸ்யூக்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

2. நன்கு அறியப்பட்ட மரங்களுக்கும் சுடுகாட்டிற்கும் அருகிலும் மலைகளில் மேலும் இந்த (இனக்குழுக்கள்), (சில குறிகளால் அறியப்பட்டனவாக) தங்களுக்கே உரியவையான தொழில்களைச் செய்து கொண்டு வசிக்கட்டும்.

3. ஆனால், சண்டாளர்களும் ஷ்வாபகர்களும் வசிக்குமிடம் கிராமத்திற்கு வெளியே இருக்கவேண்டும். அவர்கள் அபபத்திரர்கள் ஆக்கப்படவேண்டும். அவர்களுடைய செல்வம் நாய்களும் கழுதைகளும் ஆகும்.

4. அவர்களின் உடை, இறந்தவர்களின் துணிகளே (ஆகும்); தங்கள் உணவை, உடைந்த தட்டுக்களிலிருந்து, (அவர்கள் உண்பார்கள்); கரும் இரும்பே அவர்களின் அணிகலன் (ஆகும்); அவர்கள் எப்போதும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குத் திரிந்து கொண்டேயிருக்க வேண்டும்.

5. சமயக் கடமைகளை நிறைவேற்றுபவன் அவர்களுடன் உடலுறவை நாடக்கூடாது; அவர்களுடைய தொடர்புகள் அவர்களுக்கிடையேயே இருக்கும்; அவர்களின் திருமணங்கள் அவர்களுக்குச் சமமானவர்களுடனேயே இருக்கும்.

6. அவர்களின் உணவு அவர்களுக்கு (ஆரியர் தவிர) மற்றவர்களால், உடைந்த தட்டில் கொடுக்கப்படும்; இரவில் அவர்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் நடந்துசெல்லக்கூடாது.

7. பகலில் அவர்கள், மன்னனின் கட்டளைப்படி அடையாளக் குறிகளுடன் தங்கள் வேலைகளைச் செய்யச் செல்ல வேண்டும்; உறவினர் இல்லாத (மனிதர்களின்) சவங்களை அவர்கள் எடுத்துச் செல்ல வேண்டும்; இது முடிவான விதியாகும்.

8. மன்னனின் உத்தரவுப்படி அவர்கள் குற்றவாளிகளுக்குச் சட்டத்தின்படி மரணதண்டனையை நிறைவேற்றுவார்கள்; அந்தக் குற்றவாளிகளின் துணிகள், படுக்கைகள், அணிகலன்கள் ஆகியவற்றை அவர்கள் எடுத்துக் கொள்வார்கள்.

9. மிகத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த பெண்ணுடன் தொடர்பு கொண்டவன் கொல்லப்படுவான்.

---

(2) மேற்படி X. 50; (3) மேற்படி X. 51 ; (4) மேற்படி X. 52; (5) மேற்படி X. 53; (6) மேற்படி X 54; (7) மேற்படி X.55; (8) மேற்படி X.56; (9) விஷ்ணு V.43;

10. (ஒரு சண்டாளன் அல்லது வேறு தாழ்ந்த சாதியைச் சேர்ந்த) தீண்டத் தகாதவன், வேண்டுமென்றே, இருபிறப்பாளர்களாலேயே தீண்டத் தகுந்த (இருபிறப்புச் சாதியைச் சேர்ந்த) ஒருவனைத் தொட்டுத் தீட்டாக்கினால் அப்படிச் செய்தவன் கொல்லப்படுவான்.

□□□

(10) விஷ்ணு V.104.

# பிரிவு - 3

## பிரச்சினையின் மூலங்கள்

## இயல் 8

### *இணையான வழக்குகள்*

*1. ரோமாபுரியில் அடிமைத்தனம் 2. இங்கிலாந்தில் நிலப்பிரத்துவம் 3. யூதர்களும் அடிமைத்தனமும் 4. நீக்ரோக்களும் அடிமைத்தனமும்*

சமூகச் சமத்துவமின்மை என்பது இந்துக்களிடையே மட்டுந்தான் உள்ளது என்பதன்று. இந்த வழக்கம் ஏனைய நாடுகளிலும் வழக்கில் இருந்தது என்பதோடல்லாமல், சமூகத்தில் உயர்ந்தோர் தாழ்ந்தோர், சுதந்திரமுள்ளவர்கள், சுதந்திரமில்லாதவர்கள், மதிப்பிற்குரியவர்கள், வெறுத்து ஒதுக்கப்பட்டவர்கள் என்பதற்கும் பொறுப்பாக இருந்தது. பண்டையக் காலத்திலும், தற்காலத்திலும் இந்தியாவிலுள்ள தீண்டப்படாதோரின் நிலை மற்றும் சமூக அந்தஸ்தையும், ஏனைய நாடுகளில் நிலவிய சுதந்திரமற்றோர் மற்றும் வெறுத்து ஒதுக்கப்பட்டோரின் நிலை மற்றும் சமூக அந்தஸ்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பது சுவையானதாகும். இந்த இரு பிரிவினருக்கும் இடையே உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை நுணுக்கமாகப் புரிந்து கொள்வதற்காக, ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு முன் இந்த இரு பிரிவினரையும் பற்றிய வரலாற்று வழக்காறுகளை அறிந்து கொள்வது அவசியமாகும். எனினும் உலகிலுள்ள அனைத்துப் பகுதிகளிலும் இத்தகைய மக்கள் அனைவரையும் ஆய்ந்துரைப்பது இயலாததுமட்டுமல்ல, தேவையற்றதுமாகும். சுட்டிக்காட்டுவதற்காக ஒரு சில குறிப்பான வழக்குகளை மட்டுமே எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

இந்துக்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்கும் இடையே உள்ள தொடர்புகளை ஆய்வு செய்யும்போது, மூன்று வினாக்கள் நம் நினைவுக்கு வருகின்றன. தீண்டாமை என்பது ஏன் மறைந்து ஒழியவில்லை? தீண்டப்படாதவருக்கு எதிராக இந்துக்கள் பின்பற்றும் சட்ட விரோதமான செயல்களை ஏன் அவர்கள் சட்ட பூர்வமானவை என்று கருதுகின்றனர்? தீண்டப்படாதவர்கள் சம்பந்தமான விவகாரங்களில், ஓர் இந்து எனப்படுவோர் மனச்சான்று என்பதில்லாமல் நடந்து கொள்வதேன்?

தீண்டப்படாதவர்களைப் போன்று கீழான மற்றும் வெறுக்கப்பட்ட நிலைகளில் இருந்த பிரிவினரான மக்கள், பிற சமூக மக்களிடையேயும் ஒரு காலத்தில் இருந்துள்ளனர். எடுத்துக்காட்டாக, அத்தகைய மக்கள் ஒரு காலத்தில் ரோமானிய நாட்டில் இருந்துள்ளனர். ரோமானிய மக்கள் பின்வரும் ஐந்து வகையினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். 1. உயர் குடியுரிமையாளர்கள் (பேட்ரிசியன்ஸ்) 2. பொதுமக்களைச் சார்ந்த இழி பிறப்பினர் (பிளிபியன்) 3. பிறரைச் சார்ந்திருப்போர் (கிளியன்ட்ஸ்) 4. அடிமைகள் 5. சுதந்திரமானவர்கள்.

பேட்ரிசியன்கள் ஆளும் வர்க்கத்தினர். எல்லா வகைகளிலும் இவர்கள் மிகுந்த உரிமை படைத்தவர்கள். மற்றவர்கள் அனைவரும் இவர்களின் அடியொற்றி வாழ்ந்த நிலையினர். பிலிபியன் மற்றும் கிளியன்டுகள் என்போர் போர்களிலே அழிக்கப்பட்டவர்கள். ஆளும் வர்க்கத்தினரான பேட்ரிசியன் குடும்பத்தலைவர்களின் பாதுகாப்பைப் பெற்று, அவர்களின் அடிவருடிகளாகப் பணிபுரிய உடன்பட்ட, வெளியிடங்களிலிருந்து வந்தேறியவர்கள் 'கிளியன்ட்ஸ்' எனப்பட்டனர். தனிப்பட்ட எவருக்கும் அடிபணியாதவர்களாக ஆட்சிப் பொறுப்பிலிருந்தவர்களிடம் தங்களை ஒப்படைத்துக் கொண்டு, அவர்களின் நிலக் குத்தகைக் காரர்களாக இருந்தவர்கள் பிளிபியன்ஸ் எனப்பட்டனர். இந்தப் பிளிபியன்கள், அசையும் மற்றும் அசையாச் சொத்துக்களை வைத்திருக்கவும், அவற்றை ரோம அரசு முத்திரையிட்ட தாள்கள் மூலம் விற்கவும், அவற்றிற்குத் தீர்ப்பாயங்களின் பாதுகாப்பு பெறவும் உரிமை பெற்றிருந்தனர். ஆனால், இவர்களுக்கு நகர நிர்வாகத்தில் பங்கு பெறும் உரிமை எதுவும் இல்லை. இவர்கள் அரைக் குடியுரிமை பெற்ற குடிமக்கள். நகரத்தின் மத விவகாரங்களில் பிளிபியன்கள் பங்கு பெறும் வாய்ப்பு மறுக்கப்பட்டது. பேட்ரிசியன்களுக்கும் பிளிபியன்களுக்கும் இடையே திருமண உறவுகள் என்ற கேள்விக்கே இடமில்லை என்ற நிலை இருந்தது. கிளியன்ட்கள் தங்களுடைய ஆதரவுக்கும் ஜீவனத்திற்கும் பேட்ரிசியக் காப்பாளர்களையே சார்ந்து இருக்க வேண்டியிருந்தது. இந்தப்

பேட்ரிசியக்காப்பாளர்கள், கிளியன்ட்கள் அவர்களின் மனைவி, மக்கள் ஆகியோரின் வாழ்க்கைத் தேவைக்கான அனைத்தையும் தரவேண்டியிருந்தது. இந்த உறவு, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்தது. அதாவது ஒரு கிளியண்ட்க் கவனித்து வந்த பேட்ரிசியன் இறந்து விட்டால், அந்தப் பொறுப்பை இறந்துவிட்ட பேட்ரிசியனின் மகன் ஏற்று வந்தான். கிளியன்டைட் தன்னுடைய ஜீவனத்திற்காக மட்டுமின்றிச், சட்டப் பாதுகாப்புக்கும் பேட்ரிசியக்காப்பாளரையே சார்ந்திருக்க வேண்டியிருந்தது. குடியுரிமையுடையவராக இல்லாத காரணத்தால், கிளியன்ட்கள், பேட்ரிசியப் பாதுகாப்பாளரையே சார்ந்திருக்க வேண்டியதாயிற்று. அதோடு, குடியுரிமை இல்லாததால் கிளியன்ட் எவர்மீதும் வழக்கு தொடர முடியாது. பேட்ரிசியக் காப்பாளர் தான், தன் பொறுப்பில் உள்ள கிளியன்ட்டுக்கு ஏதாவது பாதிப்பு ஏற்பட்டால் நியாயம் பெறுவதற்காக அவர் சார்பில் தீர்ப்பாயங்களில் வழக்கு தொடுத்து நியாயம் பெறவேண்டும்.

அடிமைகளைப் பார்த்தோமானால், அவர்கள் இலட்சக்கணக்கில் இருந்தனர். நிலவுடைமையாளர், நூற்றுக்கணக்கான,ஆயிரக்கணக்கிலும் கூட அடிமைகளை வைத்திருந்தார். ஏழைகளாக இருப்பவர்கள் தான், நிறைய அடிமைகளை வைத்துக் கொள்ள முடியாதவர்களாக, இருந்தனர். மற்ற பொருள்களை வைத்திருப்பது போலவே அடிமைகளைப் பெற்றிருப்பதும் உரிமைப் பொருளாகமட்டும் இருந்தது. சட்டத்தின் கண்களில் அவர்கள் மனிதர்களாகவே கருதப்படவில்லையாதலால், அவர்களுக்கு எவ்வித உரிமையும் தரப்படவில்லை. ஒரு சில மனிதாபிமானம் கொண்ட எஜமானர்கள் மட்டுமே இவர்களை அன்பாக நடத்தினர். மற்றவகையில், பொதுவாக இந்த அடிமைகள், மிகுந்த கொடூரமாக நடத்தப்பட்டனர். "உணவு உண்ணும்போது ஓர் அடிமை தும்மினாலோ, இருமினாலோ அல்லது தன் கையிலிருந்து ஒரு சாவிக் கொத்தைக் கீழே தவறவிட்டு அதனால் சத்தம் ஏற்பட்டாலோ எங்களுக்குக் கடும்கோபம் ஏற்படும்...... அவ்வப்போது, நாங்கள் அவனைக் கடுமையாகத் தாக்கிக் கை, கால்களையோ பற்களையோ உடைத்து விடுவதுண்டு. " என்று செனக்கா சொன்னார். பணக்கார ரோமானியர், தம்முடைய அடிமை கவனக்குறைவாக ஏதாவது செய்தால், அந்த அடிமையைக் குளத்தில் வீசி எறிந்து லாம்பிரே என்னும் மீனுக்கு இரையாக்கிவிடுவதும் வழக்கம். எஜமானர்களின் அதிருப்திக்கு ஆளாகும் அடிமைகள் நிலத்தடியிலிருந்த சிறைவைக்கப்படுவது சர்வ சாதாரணமாகும். பகல் வேளைகளில் அவர்கள், கனமான இரும்புச் சங்கிலிகளால் பிணிக்கப்பட்ட நிலையில் வேலை செய்ய வேண்டும். பல அடிமைகள் பழுக்கக்காய்ச்சிய இரும்புக் கம்பிகளால் சூடு போடப்பட்டனர். அடிமைகள் வேலை செய்த ஆலையொன்றின்

நிலையைப் பற்றி ரோமானிய நூலாசிரியர் ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார்:" ஐயோ கடவுளே, எத்தகைய பாவப்பட்ட, குறுகிப்போன மனிதர்கள் இவர்கள்! கட்டையால் அடிக்கப்பட்டு வரிவரியாகத் தழும்பேறிய வெள்ளைத் தோல்கள்...... அவர்கள் கிழிந்த உள்ளாடையின் தொங்கும் இழைகள்... கூன் விழுந்தது போல முன்பக்கம் வளைந்து, மழுங்கச் சிரைத்த தலையினராய், கால்கள் சங்கிலியால் பிணிக்கப்பட்டு, நெருப்பால் சிதைவுற்ற உடம்புடன் தீக் கொழுந்துகளால் இமைகள் கருகிப்போய் தூசிதும்புகளால் மூடப்பட்டவர்களாய் இருந்தனர்."[1]

ஆங்கிலேயர் சமூகத்திலும் ஒரு காலத்தில் இத்தகைய அடிமைகள் இருந்தனர். நார்மானியர்கள் இங்கிலாந்தை வெற்றி கொண்டபோது எழுதப்பட்ட டோம்ஸ்டே புத்தகத்தின் பக்கங்களைத் திருப்பினோமானால் இங்கிலாந்து நாட்டின் அப்போதைய சமூக நிலையை அறியலாம்.

இந்த டோம்ஸ்டே புத்தகம், இங்கிலாந்து நாட்டின் சமூக ஆய்வுப் புத்தகமாக, 1086-இல் வில்லியம் இங்கிலாந்தை வெற்றி கொண்டபோது பல்வேறு வகையாக நிலவிய நிலக்குத்தகையாளர்கள் பற்றிய குறிப்புகளுடன் எழுதப்பட்டதாகும். அந்த நூல், மக்கள் பின்வரும் வகையினராகப் பிரிக்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகின்றது:

| | | | |
|---|---|---|---|
| 1. பிரபுகளுக்கு அடுத்த நிலையில் இருந்த இடைநிலை மக்கள் (ஜென்ட்ரி) மற்றும் மதகுருமார்கள் (கிளர்ஜி) | உள்ளிட்ட | உயர்நிலைக் குத்தகைக்காரர்கள் - 1,400<br>இவர்களுக்கு உட்பட்ட குத்தகைக்காரர்கள் 7,900 | 9300 |
| 2. பெருநிலக்கிழார்கள் குறு நிலக்கிழார்கள் | உள்ளிட்ட | சுதந்திரமனிதர்கள் 12,000<br>குடியானவர்கள் 32,000 | 44,000 |
| 3. அரை சுதந்திரமுள்ளவர்கள் சுதந்திரமில்லாதவர்கள் | உள்ளிட்ட | அடிமைகளாக இல்லாமல் அடிமைநிலையிலுள்ள குடியானவர் 1,69,000<br>பண்ணைக் கூலிக் குடியாட்கள் 90,000 | 2,59,000 |
| 4. அடிமைகள் | | | 25,000 |

1. சைய்ன்போஸ், பண்டைய நாகரிக வரலாறு

மொத்தமிருந்த இந்த 3,37,000 பேர்களில், 2,84,000 பேர்கள் சுதந்திரமில்லாதவர்கள் அல்லது அடிமைகளாவர். இவை, மதம் அல்லது இனம் தொடர்பில்லாத அடிமைத்தனத்திற்கு எடுத்துக்காட்டுகளாகும். இனம் அல்லது மதம் காரணமாக அமைந்த அடிமைத்தனத்திற்கும் வரலாற்றில் எடுத்துக்காட்டுகள் இல்லாமலில்லை. யூதர்கள் இதற்கு முதன்மை எடுத்துக்காட்டாக உள்ளனர். இயேசு கிறிஸ்துவின் மரணத்திற்குக் காரணமானவர்கள் என்று கருதப்பட்டதால் யூதர்கள் துன்புறுத்தலுக்கு உள்ளானார்கள். மத்திய காலத்தில் பெரும்பான்மை ஐரோப்பிய நகரங்களில், யூதர்கள் நகரங்களிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டு நகரின் ஒதுக்குப்புறமான தனியிடங்களில் வாழும்படி வைக்கப்பட்டிருந்தனர். இவர்கள் வாழ்ந்த இடம் "கெட்டோ" எனப்படும் சேரிப்பகுதியாகும். 1050-இல் ஆஸ்திரேலியாவில் கொயான்ஸா என்ற இடத்தில் நடந்த கூட்டத்தில், "கிறித்தவர் எவரும் யூதர்களுடன் ஒரே வீட்டில் வசிக்கவோ சேர்ந்து உணவு உண்ணவோ கூடாது. இதை மீறி நடந்து கொண்டால், அவ்வாறு நடந்து கொண்டவர்கள் ஏழு நாள்களுக்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டும்; தவறினால் அந்தஸ்துள்ள குடிமக்களாயின் ஒரு ஆண்டுக்குச் சமூகத்திலிருந்து விலக்கி வைக்கப்பட வேண்டும்: கீழ் நிலையில் உள்ளவர்களாயின் நூறு கசையடிகள் தண்டனை பெறவேண்டும்" என்று தீர்மானம் இயற்றப்பட்டது. 1388-இல் பாலன்சிலா என்ற இடத்தில் நடந்த கூட்டத்தில், "யூதர்களுக்கும், மூர்களுக்கும் ஒதுக்கப்பட்ட குடியிருப்புகளில் கிறித்தவர்கள் குடியிருக்கக்கூடாது. அவ்வாறு குடியிருப்பவர்கள் இந்தத் தீர்மானம் நிறை வேற்றப்பட்ட இரண்டு மாதங்களுக்குள் வெறியேறி வந்துவிட வேண்டும்; தவறினால் சபையின் கண்டனத்திற்கு உள்ளாக நேரிடும்" என்று தீர்மானிக்கப்பட்டது. மத்திய காலங்களில் யூதர்கள் பொதுவான சமுதாயக் குளியலறைகளையே பயன்படுத்துமாறு கட்டாயப்படுத்தப்பட்டனர். கிறித்தவர்கள் குளிப்பதற்குரிய நதிகளில், யூதர்கள் குளிக்க அனுமதிக்கப்படாததால் மேற்குறித்த பொதுக் குளியலறைகளை யூதர் எவரும் வேண்டாம் என்று தவிர்க்க முடியாததானது. பதினான்காம் நூற்றாண்டில் ஆகர்ஸ் நகரிலிருந்த யூதர்கள், பல்வேறு கடினமான நிபந்தனைகளின் பேரில் நகரில் மீண்டும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். அவற்றில் ஒன்று, அவர்கள், கிறித்தவர்கள் குளிப்பதற்குரிய மெய்ன் நதியில் குளிக்கக் கூடாது என்பதாகும். யூதர்களுக்கென்று அரசு சில வகை வரிகளையும் விதித்தது. அவை மூன்று வகைப்பட்டவை. தனிப்பட்ட யூதர்கள் மீது சில ..ரிமைகள், சலுகைகளுக்காக விதிக்கப்பட்ட வரி, தண்டம், தீர்வை ..தலியன. இந்த வரியைச் செலுத்த வேண்டிய வயது யூத ஆண், ..பெண்களுக்கு இடத்திற்கு இடம் வேறுபட்டது. எப்படியும் இளைய வயதிலேயே இந்த வரி விதிக்கப்பட்டது. 1273-இல் இங்கிலாந்தில் இருந்தது போலவே ஸ்பெயின் நாட்டில் பத்து வயதுக்கு மேற்பட்ட

யூதர்கள் யாவரும் வரி செலுத்த வேண்டும். அமைதிக் காலங்களில் படைவீரர்கள் தங்குவதற்காக யூதர் விடுதிகளைப் பயன்படுத்த எடுத்துக் கொள்வது அடிக்கடி நிகழும் சுரண்டலாக இருந்தது. மத்திய காலங்களில் யூதர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட பலவகையான தீர்வையெல்லாம் பட்டியலிட்டுக் காட்டுவது இயலாததாகும். இவை எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல், 1215-இல் மூன்றாம் போப் இன்னொசென்ட், தம் காலத்தில் ஆங்கிலேயர்களிடமிருந்து யூதர்களை வேறுபடுத்திக் காட்ட ஏதுவாக, யூதர்கள் தங்களுடைய மேலங்கியில் நன்றாகத் தெரியும்படி அடையாள அட்டை பதிந்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தார். யூதர்கள் அடையாள அட்டை அணிய வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டிருந்த போதிலும், அந்த அடையாள அட்டைகளின் அளவு, நிறம், தன்மை ஆகியவற்றை வரையறுத்துச் சொல்வதை லேட்டரன் கவுன்சில் தவிர்த்து, மாநில மற்றும் உள்ளூர் ஆளுநர்களிடம் விட்டுவிட்டது. ஆளுநர்களும், மாநில அரசுகளும் தாங்கள் விரும்புகிற மாதிரியில் இந்த அடையாள அட்டைகளை அமைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டது. இதனால் ஏற்பட்ட பலவகையான மாற்றங்கள் காரணமாகச் சில போது இந்த அடையாள அட்டைகளின் அளவும், வடிவமும் அடையாளங்காண முடியாதவாறு வழக்கற்றுப்போனதால், யூதர்கள் இவற்றை அணியாமலேயே சமாளித்துக் கொண்டனர். இந்த அடையாள அட்டைகள் ஆடைகளுக்குள் மறைந்து போக நேர்ந்ததால், 1525-இல் ஏழாவது போப் கிளமெண்ட், அடையாள அட்டைகளுக்குப் பதில் தலையில் மெல்லிய மஞ்சள்நிறக் குல்லாய் அணிய ஆணையிட்டார்.

தீண்டப்படாதோரின் நிலையை நினைக்கும் போது, இங்கிலாந்தில் கத்தோலிக்கருக்கு இருந்த நிலையே நினைவுக்கு வருகிறது. கத்தோலிக்கர்கள் பல வழிகளிலும் துன்பத்திற்கு ஆளானார்கள். அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. கத்தோலிக்கத் திருமணங்கள் அப்போது வழக்கத்திலிருந்த சட்டங்களின்படிச் செல்லத் தக்கவையல்ல என்று விளம்பப்பட்டமையால், கத்தோலிக்கப் பாதிரிமார்களால் நடத்தி வைக்கப்பட்ட கத்தோலிக்கத் திருமணங்கள் அல்லது கத்தோலிக்கர் திருமணங்கள் சட்டப்படி செல்லாதவை என்பதோடு, ஏதேனும் ஒரு காரணத்தால் திருமணம் செய்து கொண்ட இருவரில் ஒருவர், மற்றவரைப் பிரிந்து கைவிடப்பட்ட நிலையில் சபையினரிடமிருந்தோ அல்லது மணமகன் அல்லது மணமகள் நாட்டு சட்டத்தினாலோ அவர்களுக்குப் பரிகாரம் எதுவும் கிடைக்கவில்லை. அதோடு, இந்தத் திருமணத்தை நடத்தி வைத்த பாதிரி நாடு கடத்தப்படலாம் அல்லது சிறைப்படுத்தல்படலாம் என்றிருந்தது.

2. கத்தோலிக்கப் பாதிரிமார்களின் ஜீவனத்திற்காக நிறுவப்பட்ட நிதிகள், பணம் முதலியவையும் கத்தோலிக்க வழிபாட்டுக்கு அளிக்கப்பட்ட ஆதரவு ஆகியவையும் மூட நம்பிக்கைகளுக்காகச் செய்யப்பட்டவை என்ற கணக்கில் கொள்ளப்பட்டு, அவை பறிமுதல் செய்யப்படலாம். அவ்வாறு பறிமுதல் செய்யப்படும் சொத்துக்கள் சட்ட வழிகளின் மூலம் மீண்டும் திரும்பப் பெற முடியாதவை. இவ்வாறு பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களுக்குப் பல உதாரணங்கள் உண்டு.

3. இங்கிலாந்தின் மேன்மைதங்கிய மன்னரின் ராணுவம் மற்றும் கடற்படையில் பணிபுரியும் கத்தோலிக்கர்கள் ஞாயிற்றுக் கிழமைகளிலும், ஏனைய விழாநாள்களிலும் அவர்களுக்குரிய தேவாலயங்களுக்குச் செல்லாமல் புரோடெஸ்டேண்ட் தேவாலயங்களுக்குச் செல்லுமாறு கட்டாயப்படுத்தப்படலாம். ஏனென்றால், இங்கிலாந்து முழுவதும் ஒன்றுபட்டிருந்து எதிரியைத் தோற்கடிக்க வேண்டிய தருணத்தில் இவ்வாறு கத்தோலிக்கர்கள் அவர்களுக்கென்று உள்ள ஆலயத்திற்குச் செல்வது, விசுவாசமும் வீரமும் நிறைந்த மக்களுக்கு மனவருத்தத்தை உண்டாக்கி அதனால் குறைபட்டுக் கொள்ள நேரும்.

4. பதின்மூன்றாவது இரண்டாம் சார்லஸ் என்னும் மன்னன் கொண்டுவந்த 'கார்ப்பரேஷன் சட்டத்தின் படி' நகர மற்றும் மாநகர அலுவலகங்களினின்றும் கத்தோலிக்கர்கள் விலக்கி வைக்கப்பட்டனர்.

5. இருபத்தைந்தாவது இரண்டாம் சார்லஸ் கொண்டுவந்த 'டெஸ்ட்' சட்டத்தின்படி யூதர்கள் ஆட்சி மற்றும் இராணுவப் பணிகளிலிருந்து விலக்கிவைக்கப்பட்டனர்.

6. ஏழாவது மற்றும் எட்டாவது மூன்றாம் வில்லியம் கொண்டு வந்த சட்டப்படி, ரோமன் கத்தோலிக்கர்கள் தேர்தல்களில் வாக்களிப்பதிலிருந்து விலக்கி வைக்கப்பட்டனர்.

7. முப்பதாவது இரண்டாம் சார்லஸ் கொண்டுவந்த சட்டப்படி, ரோமன் கத்தோலிக்கப் பெருங்குடியினர், நாடாளுமன்றத்தில் பல தலைமுறைகளாக இருந்து வந்த இடங்களில் நிரப்பப்படாமல் தடுக்கப்பட்டனர்.

8. இதே சட்டத்தின்படி, கத்தோலிக்கர்கள் 'காமன்ஸ்' சபையில் அமர்வது தடை செய்யப்பட்டது.

9. பல்வேறு சட்டங்களின்படி, ரோமன் கத்தோலிக்கர்கள் திருச் சபைகளுக்கு நன்கொடை அளிப்பது தடுக்கப்பட்டது. சொத்துரிமையின் பாற்பட்ட இந்த உரிமை யூதர்களுக்குக்கூட அனுமதிக்கப்பட்டிருந்த போதிலும், கத்தோலிக்கர்களுக்கு மறுக்கப்பட்டது.

10. மாட்சிமை தங்கிய மன்னரின் கடற்படை மற்றும் தரைப்படையில் பெரும்பகுதி ரோமன் கத்தோலிக்கர்கள் இருந்தாலும், அவர்களுக்கு மத சம்பந்தப்பட்ட வசதிகள் அளிக்கப்படாதது மட்டுமின்றி அவர்களுக்குக் கடுந்தண்டனையும் தண்டமும், இங்கிலாந்து நாட்டின் அதிகார பூர்வமான திருச்சபையின் சடங்குகளில் கலந்து கொள்ள மறுத்ததற்காக வழங்கப்பட்டது. போர் விதிகளின் 1-ஆவது பிரிவின்படி தெய்வீக ஆராதனை மற்றும் பிரசங்கங்களில் கலந்து கொள்ளாத ஒரு போர் வீரனுக்கு, அது முதலாவது முறையாக இருப்பின் ஒரு ஷில்லிங் அபராதமும் இரண்டாவது அதற்கு மேல் குற்றமாக இருப்பின் 'ஒரு ஷில்லிங் அபராதத்துடன் சிறைத்தண்டனையும் வழங்கப்பட்டது. அதே சட்டத்தின் 2-ஆவது பிரிவு உட்பிரிவு 5-இன் கீழ் தன்னுடைய மேலதிகாரியின் சட்டப்படியான உத்திரவுக்கு ஒரு படைவீரன் கீழ்ப்படிய மறுப்பானாகில் (அதாவது தெய்வீக ஆராதனை மற்றும் பிரசங்கக் கூட்டத்தில் கலந்து கொள்ள மேலதிகாரி சட்டப்படி இடும் உத்திரவு) அவன் மரண தண்டனை அல்லது ராணுவ நீதிமன்றம் அளிக்கும் தண்டனைக்கு ஆட்பட வேண்டும்.

11. பொதுவில் மாட்சிமை தங்கிய மன்னரின் ரோமன் கத்தோலிக்கக் குடிமக்கள் அதிகாரபூர்வ திருச்சபைக்குக் காணிக்கை அளிப்பதோடு தங்களுடைய திருச்சபைகளுக்கும் அவர்கள் காணிக்கை அளிக்க வேண்டும்; அதாவது அவர்கள் இரண்டு முறை மத சம்பந்தப்பட்ட நிறுவனங்களுக்காக செலவிட வேண்டும். உண்மைதான், எவ்வாறிருப்பினும் அவர்கள் இது குறித்துப் புகார் ஏதும் செய்வதில்லை. எனினும் அவர்களுக்குள்ள கடுமையான மனக்குறைவு யாதெனில் அவர்களுடைய மத நிறுவனங்கள் அவர்களினின்றும் மாறுபட்ட புரொடஸ்டென்டுகள் (சீர்திருத்த) அதிருப்தியாளர்களைப் போல அங்கீகரிக்கப்படவில்லையே என்பதுதான்.

12 மருத்துவமனைகள், பணியிடங்கள், மற்றும் உள்ள பொது நிறுவனங்களில் குழுக் கூட்டங்களில் ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அவர்களுடைய பாதிரி அல்லது பிரசங்கிகள் கலந்து கொள்ளுவது கூட மறுக்கப்பட்டது என்பதோடு ரோமன் கத்தோலிக்கப் பெற்றோரது கண்ணெதிரிலேயே புரொடஸ்டெண்டுகள் பள்ளிகளில் பலவந்தமாகத் தள்ளப்பட்டார்கள்"

கத்தோலிக்கர்களைப் போலவே தீண்டப்படாதோர் என்று ஒதுக்கப்பட்ட மக்களும் பலவிதத் துன்பங்களை அனுபவிக்கிறார்கள்.

## 2

*(கீழ்க்கண்ட கட்டுரை எஸ்.எஸ். ரேகையிடமிருந்து பெறப்பட்டது. நீக்ரோக்களும் அடிமைத்தனமும், இந்த இயலுக்குரிய திட்டத்தின்படியான பொருள் மேலே கண்ட விவாதத்தில் ஆய்வு செய்யப்படாததால் இங்கே இணைக்கப்படுகிறது - பதிப்பாசிரியர்).*

விதி, ஆப்பிரிக்கக் கண்டத்தைச் சுதந்திரமான, நாகரிமான ஆசிய மற்றும் ஐரோப்பாக் கண்ட மக்களுக்கு வேண்டிய அடிமைகளை உற்பத்தி செய்யும் நாற்றங்காலாக என்றென்றைக்கும் இருக்க வேண்டும் என்று சபித்து விட்டிருக்கிறது போலும். அமெரிக்கா நாட்டிற்கு அடிமையாக நீக்ரோவை அறிமுகப்படுத்துவதற்கு வெகு காலத்துக்கு முன்பே, அரபு நாட்டார் அவனை அடிமையாக ஆசியாக் கண்டத்திற்கு இறக்குமதி செய்தார்கள். இது எவ்வாறிருந்தபோதிலும், அமெரிக்காவிலும் ஐரோப்பிய காலனிகளிலும் நீக்ரோக்களின் அடிமைத்தனம் என்பது ஒரு துக்ககரமான வரலாறு ஆனதால் அரபு நாட்டிற்கு அவர்கள் அடிமைகளாக இறக்குமதி செய்யப்பட்டதையே மக்கள் மறக்கும் படியாகிவிட்டது. ஏனென்றால், அமெரிக்காவில் ஐரோப்பியர்களால் செய்யப்பட்ட நீக்ரோ அடிமைத்தனம் என்பது மிகவும் மோசமான ஒன்றாக இருந்தது. இந்த வியாபாரம் 16-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தொடங்கி 19-ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை தொடர்ந்து நடந்தது.

1492-இல் கொலம்பஸ், முதன் முதலாக பஹாமா தீவில் கால் வைத்த பின் ஐம்பது ஆண்டுகளுக்குள் ஸ்பெயின் நாட்டவர் மெக்சிகோ முதல் பெரு வழியாக உருகுவே வரை மேற்கு இந்தியத் தீவுகள் உள்பட ஒரு பெரிய பகுதியைப்பிடித்து ஆக்ரமித்தார்கள். 1531-இல் போர்த்துக் கீசியர்கள் பிரேசிலைக் காலனி ஆதிக்கத்திற்கு உட்படுத்தினார்கள். புதிதாக வந்த ஸ்பானியர்களும் போர்த்துக் கீசியர்களும் தாங்கள் ஆக்ரமித்த பகுதிகளின் பெரும் இயற்கை வளங்களைப் பயன்படுத்த ஆரம்பித்தார்கள். அதாவது முக்கிய பகுதிகளில் தங்கம் மற்றும் வெள்ளிச் சுரங்கங்களையும், புகையிலை, இண்டிகோ மற்றும் சர்க்கரைத் தோட்டங்களைப் பிற பகுதிகளிலும் அமைத்தார்கள், ஆனால், இந்த வேலைகளைச் செய்வதற்கு வேண்டிய தொழிலாளர்கள் அவர்களுக்குக் கிடைப்பது வெகு விரைவில் மிகவும் சிரமமாயிற்று, தொழிலாளர்கள் பெருமளவு தேவைப்பட்ட நிலையில் வெள்ளைக்காரர்களுக்குத் தரவேண்டிய அதிகப்படியான கூலியும் அங்கு இருந்த கடுமையான வெயிலும் தங்களுடைய தொழிலாளர்களையே அவர்கள் பயன்படுத்திக்கொள்ள இயலாமல் செய்துவிட்டது. உள்ளூர் இந்தியர்கள் மட்டுமே அவர்களுக்கு அப்போது அந்தப்பகுதியில் கிடைத்தார்கள். போரின்போது ஸ்பானியர்களும் போர்த்துக் கீசிர்களும்

இந்தியர்களைப் பெருமளவு கொன்று குவித்து விட்டார்கள். அவர்களில் பெரும்பாலோர் ஸ்பானியர் மற்றும் போர்த்துக்கீசியரின் கொடுங் தாக்குதல்களிலிருந்து தப்பித்து மலைப்பகுதிகளுக்கும் காடுகளுக்கும் ஓடிவிட்டார்கள். எஞ்சியிருந்தவர்களை அடிமைகளாக்கிச் சுரங்கங்களில் வேலைக்குப் பயன்படுத்தினார்கள், ஸ்பானியர்கள் மற்றும் போர்த்துக்கீசியர்களின் கடுமையானக் கசையடிகளாலும் தொடர்ந்து ஓய்வின்றி அவர்களிடம் சுரங்கங்களில் வேலை வாங்கியதாலும் இந்தியர்களில் பலர் நோய்வாய்ப்பட்டு இறந்துபோனார்கள்.

"காண்குவெஸ்டிடார்கள்" என்று தென் அமெரிக்காவில் அழைக்கப்பட்ட ஸ்பானியர்கள், நிக்கோலஸ் தே ஓவான்டா என்பவரின் தலைமையில், அவர் கொலம்பஸின் வழியைப் பின்பற்றி பேட்ரோலோம் தேலாஸ் காசாஸ் என்ற பக்திக்காக பெரிதும் அறியப்பட்ட பாதிரியாரை அழைத்து வந்தனர். லாஸ்காசாவிற்குப், புனிதக் கிறித்துவ மதத்தைப் பற்றிய அறிவை இந்தியர்களுக்கு அன்புடன் போதிக்க ஸ்பெயின் கோர்ட் அறிவுறுத்தியது. லாஸ்காசா தான், மெக்சிகோவின் முதல் பேராயர் ஆவார். லாஸ்காசா தமக்களிக்கப்பட்ட பணியைச் செய்துவரும்போது இந்தியர்களுக்கு, வெற்றி கொண்ட ஸ்பானியர்கள் இழைத்த கொடுமைகளைக் கண்டார். மீதமிருந்த கரிபியர்கள் என்று அழைக்கப்பட்ட இந்தியர்களைத், தவிர்க்க இயலாத ஸ்பானிய எஜமானர்களின் அழிவிலிருந்து காப்பாற்றத் தம் வாழ்நாளின் இறுதிவரை பாடுபட்டார். கரிபியர்கள் யாருக்கும் துன்பம் தராத, மிகுந்த பெருந்தன்மை கொண்ட அன்பான இனத்தவர்கள். முதன் முதலாகக் கொலம்பஸ் அவர்களைக் கண்டபோது அவர்கள் சுமார் 10 லட்சம் பேர்களுக்குக் குறையாத மக்கள் தொகையுடன் தங்கள் பகுதிகளைச் சிறு சிறு ராஜ்ஜியங்களாகப் பிரித்து, ஒவ்வொரு தலைவரைக் கொண்டு அமைதியாக வாழ்ந்து வந்தார்கள். வெற்றி கொண்ட ஸ்பானியர்களின் சீரான குரூரமான நடவடிக்கைகளின் விளைவாக அவர்களின் எண்ணிக்கை 60000த்திற்கு வந்துவிட்டது. அவர்களின் கொடுமைகளிலிருந்தும் சித்ரவதைகளிலிருந்தும் தப்பிக்கக் கிராமம் கிராமமாக அவர்கள் தற்கொலை செய்துகொண்டனர். மற்றவர்களையும் இதே வழியைப் பின்பற்ற அழைத்தார்கள். இதுபோன்ற பல தற்கொலைகளை லாஸ்காசா நேரில் பார்க்க நேர்ந்தது. அவர் இந்தக் கொடுமையை நியாய உணர்வுடன் எதிர்த்தார். ஆனால், அவர் எதிர்ப்பிற்கு ஒரு பலனும் ஏற்படவில்லை. ஏற்படவும் வாய்ப்பில்லை. காடுகளைத் திருத்தும் பணிகள், நிலத்தை பண்படுத்தும் பணிகள், சுரங்கப்பணிகள் ஆகியவை தொடர்ந்து நடைபெற வேண்டியிருந்தது. இப்பணிகள் நடைபெறவில்லை எனில் கடவுளால் அளிக்கப்பட்ட ராஜ்ஜியம் மனிதர்களின் சொர்க்கமாக

மாற வழிகிடையாது என்பதை லாஸ்காசா உணர்ந்தார். ஆனால் இந்தப்பணிகள் நடக்க வேண்டுமானால் இந்தியர்கள் எத்தகைய துன்பங்களுக்கு ஆளாக வேண்டும் என்பதை அவர் நினைத்த போது துன்பம் அவர் மனதை அழுத்தியது. அவருடைய சீரிய உணர்வுகள் அவரை ஸ்பானிய மன்னருக்கு நீக்ரோக்களை எளிதாக இறக்குமதி செய்ய அனுமதிக்க மனு அளிக்கத் தூண்டியது. 1511-இல் ஸ்பானிய அரசு, புதிய உலகிற்குப் பெருமளவு நீக்ரோக்கள் ஏற்றுமதி செய்யப்பட வேண்டும் என்று தீர்மானித்தது. இத்தீர்மானத்தின் விளைவாக ஆப்பிரிக்க நீக்ரோக்கள் என்ற சரக்கை ஏற்றிக்கொண்டு புதிய உலகைச் சொர்க்கமாக்கக் கப்பல்கள் விரைந்தன. இந்தியர்களை ஒப்பிட்டுப் பார்க்கையில் நீக்ரோக்களின் வலிவு எத்தகையது என்பது விரைவில் புரிந்தது. ஒரு ஸ்பானியர், நீக்ரோக்களின் வலிமைக்குச் சான்றுரைக்கையில் அட்லாண்டிக் சமுத்திரத்திலிருந்து பசிபிக் சமுத்திரத்திற்குச் செல்லும் குறுகிய இடைவழியாக மரங்களைத் தம்முடைய 4 சிறிய கப்பல்களில் அனுப்பத் தாம் 500 இந்தியர்களையும் 30 நீக்ரோக்களையும் ஈடுபடுத்தியபோது மேற்கண்ட பணியை முடிப்பதற்குள் 500 இந்தியர்களும் இறந்துவிட்டார்கள். ஆனால், 30 நீக்ரோக்கள் பணியை முடித்துப் பிழைத்திருந்தார்கள் என்று கூறினார். நீக்ரோக்கள் பிழைத்திருந்தது மாத்திரமல்ல, அவர்கள் மிகவும் செழிப்பான முன்னேற்றமும் கண்டார்கள் என்பது கீழ்க்கண்ட பொதுவான அபிப்பிராயத்திலிருந்து தெரிகிறது. "ஒரு நீக்ரோவைத் தூக்கிலிட்டாலொழிய இறக்கமாட்டான். ஏனெனில், இதுவரை அவர்களில் எவனும் உடல்நலக்குறைவால் இறந்ததாகத் தெரியவில்லை" நீக்ரோ தன்னுடைய நடவடிக்கை மற்றும் நடத்தையினால் தான், இந்தியனை விடத் திறமையான கருவி என்பதை நிரூபித்தான். இதனால் கடவுளால் வலிவு குறைவாகப் படைக்கப்பட்ட இந்தியர்கள் பணியினின்றும் விடுவிக்கப்பட்டனர்; வலிமை மிகுந்தவராகப் படைக்கப்பட்ட நீக்ரோக்கள் பயன்படுத்தப்பட்டார்கள். விளைவு, இந்தியர்கள் அடிமைத் தனையிலிருந்து தம்பினர்; அவர்களுடைய இடத்தை நீக்ரோக்கள் எடுத்துக்கொண்டார்கள், நீக்ரோக்கள் தங்களுடைய தகுதிகளின் காரணமாகவும் பக்தியும் பெருந்தன்மையும் மிக்க லாஸ்காசா வின் அழைப்பின் காரணமாகவும் அடிமைகளாக ஆனார்கள்.

'ஒரு நீக்ரோ நான்கு இந்தியர்களுக்குச் சமமான வேலையைச் செய்கிறான்' என்ற விவரம் தெரிந்துவிட்டதால், உடனடியாக நீக்ரோக்களின் இறக்குமதிக்கு ஒரு நிரந்தரச் சந்தை திறக்கப்பட்டது. ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையில் போர்த்துக்கீசியர்களால் ஆரம்பிக்கப்பட்ட இந்த அடிமை வாணிகம் உடனடியாக வரும்

லாபத்தைக் காட்ட ஆரம்பித்தது. ஏனெனில், புதிய உலகின் இயற்கை வளங்களை நீக்ரோ இல்லாவிட்டால் பயன்படுத்த முடியாது என்பதால், மக்கள் இந்தப் புதிய மனித வாணிகத்தில் முழுவதுமாகச் சூழ்ந்து விட்டனர்; இதனால் கிழக்கு நாடுகளுக்கும் புதிய வழி கண்டுபிடிக்கும் வேலையையே முற்றிலுமாகத் துறந்து விட்டார்கள்.

ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளிடையே இந்தப் புதிய வாணிகத்தில் பங்கு பெறுவதற்காகப் பெரும் போட்டி ஏற்பட்டது. ஸ்பெயின் மற்றும் போர்த்துக்கீசிய நாடுகளுக்குப் புதிய உலகின் வளங்களைத் தாமே ஏகபோகமாக அனுபவிக்கும் வண்ணம் போப் ஆண்டவரின் ஆணை ஒன்று பிறப்பிக்கப்பட்டது. ஆங்கில மற்றும் டச்சுக்காரர்கள் இந்த உத்திரவால் அமெரிக்க வளங்களை ஸ்பெயின் மற்றும் போர்த்துக்கீசியர் மட்டும் ஏகபோகமாக அனுபவிப்பார்கள் என்பதால் ஐரோப்பா முழுமைக்குமே ஆபத்து ஏற்படும் என்று அஞ்சி இதை அனுமதிக்கக் கூடாது என்பதில் உறுதியாயிருந்தார்கள்.

தங்களுடைய நாட்டுக்கு இந் த வாணிகத்தினால் பெரும் பயன் ஏற்பட இங்கிலாந்து பெரும் முயற்சி எடுத்துக்கொண்டது. 1553-இல் 24 நீக்ரோக்களை ஆப்பிரிக்கக் கரையிலிருந்து இங்கிலாந்து சந்தையில் சத்தமின்றி விற்றதுதான் முதல் வியாபாரம் ஆகும். இந்த மனித வியாபாரத்தில் வரலாற்றில் குறிப்பிடப்படுபவர் மிகத்துணிவானவர், இதயமற்றவர் என்று பெயர் பெற்ற ஜான் ஹாக்கின்ஸ் ஆவார். எலிசபெத்தின் கீழ் 'ஜீசஸ்' என்னும் கப்பலில் புறப்பட்டு ஆப்பிரிக்கா சென்று நீக்ரோக்களைக்கொண்டு வந்து ஸ்பானியக் காலனிகளில் விற்றார். ஸ்பானிய ஏகபோகத்தை ஒடுக்கும் முயற்சியில் ஹாக்கின்ஸைத் தொடர்ந்து, சர் பிரான்ஸ் டிரேக் என்பவர் இவ்வாணிகத்தில் ஈடுபட்டார். இந்தக் கள்ள நீக்ரோ வாணிகத்தின் காரணமாக சர்வதேச அளவில் தகராறுகள் முற்றி, மோதல் ஏற்பட்டு" ஸ்பானிஷ் ஆர்மடா" வை அழிப்பதில் அது முனைந்தது, இந்தச் சச்சரவுகளில் எல்லா நாடுகளும் தத்தம் நாட்டு மக்கள் செய்த நீக்ரோ அடிமைத் திருட்டு வாணிபத்தைத் "தனிப்பட்ட செய்கைகளாகக் கொள்ளாமல் பொதுவானது" என்று சொல்லி ஆதரவு அளித்தன.

"ஜீசஸ்" என்ற கப்பலைப் பயன்படுத்தி நீக்ரோக்களை அடிமைகளாக ஏற்றுமதி செய்த வேதனையான வேடிக்கை போதாதென்று, இன்னொரு முழுக்க வேதனையான வேடிக்கை நிறைந்த சம்பவமும் நடந்தது. பிளைமத் ராக்கில் மேபிளவர் என்ற இடத்தில் 'பில்கிரிம் பாதர்ஸ்' எனப்பட்ட ஆங்கிலேய மூத்த புனிதயாத்திரிகர்களும் 20 அடிமை நீக்ரோக்களும் ஒரே நேரத்தில் வந்து சேர்ந்ததுதான் அந்தச் சம்பவம். முதன் முதலாக ஆங்கிலேயர்களால் ஏற்படுத்தப்பட்ட ஆங்கிலக் காலனியான

வர்ஜீனியாவில் இந்தக் கனவான்களுக்காகப் பணி செய்ய இந்த அடிமைகள் ஏற்படுத்தப்பட்டார்கள்.

இவ்வாறு அமெரிக்காவில் நீக்ரோக்களும் வயோதிகப் பாதிரிகளும் ஒரே நேரத்தில் வந்து சேர்ந்தார்கள். வயோதிகப் பாதிரிகள் தங்களுடைய உரிமைகளை நிலை நாட்டவும், நீக்ரோக்கள் தங்களுடைய சுதந்திரத்தைப் பறிகொடுக்கவும் நேர்ந்தது. அமெரிக்க மக்கள் தொகையைப்பொறுத்த மட்டில் நீக்ரோக்கள் பெருந்தொகையினராக நெடுங்காலம் ஆதிக்கம் செலுத்தினார்கள். உண்மையில் சொல்லப்போனால் அமெரிக்கா மற்றும் இதனைச் சார்ந்த தீவுகளில் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த நீக்ரோக்கள் தான் பிரதானமாக குடியேறி இருந்தார்கள். 1800 க்கு முன் அமெரிக்காவில் இருந்த நீக்ரோக்களின் எண்ணிக்கை, மொத்த ஐரோப்பியர்களின் எண்ணிக்கையை விட இருபது மடங்கு அதிகமாக இருந்தது. இது தவிர்க்க இயலாதது, ஐரோப்பாவில் நடைபெற்ற தொடர்ச்சியான போர்களாலும் ஐரோப்பாவின் பின் தங்கியிருந்த நாகரிகத்திலிருந்து அப்போதுதான் முன்னேற துவங்கியிருந்ததாலும், ஐரோப்பாவின் மக்கள் தொகை மிகவும் குறைவாக இருந்தது. நீண்ட காலமாக இறக்குமதி செய்யப்பட்ட நீக்ரோக்களின் அந்தஸ்து நிர்ணயிக்கப்படாமலேயே இருந்தது. டச்சுக்காரர்களால் கூட்டி வரப்பட்டு ஜேம்ஸ் டவுனில் விடப்பட்ட 20 நீக்ரோக்கள் நீண்ட காலம் அடிமைகள் என்ற முத்திரை குத்தப்படாமலேயே இருந்தனர். அவர்கள் கூலித்தொழிலாளர்கள் என்றே கருதப்பட்டனர். வர்ஜீனியா காலனியிலிருந்த பணியாளர்கள் பட்டியலில், 1624 மற்றும் 1625 ஆண்டுகளில் 23 நீக்ரோக்கள் பணியாட்கள் என்றே குறிப்பிடப்பட்டுள்ளனர். இதே தகுதியிலிருந்த வெள்ளையர்களைப் போலவே, 20 நீக்ரோக்கள் வர்ஜீனியா வந்து 34 ஆண்டுகளுக்குப் பிறகும் ஜான்கேஸ்டர் என்னும் நீக்ரோவின் நிரந்தரப்பணி குறித்து, அந்தோணி ஜான்சன் என்பவர் தொடர்ந்த வழக்கில் அவருக்குச் சாதகமான தீர்ப்பு வழங்கப்பட்டிருப்பதும் பதிவாகி உள்ளது. அடிமைத்தனத்தின் அந்தஸ்து 50 ஆண்டுகளாகியும் உறுதியாகவில்லை. மிக மெதுவாகவும், படிப்படியாகவுமே இது உறுதிபெற்றது.

நீக்ரோக்களுக்கும் வெள்ளையர்களுக்கும் பொதுவாக இயற்றப்பட்ட கொத்தடிமை ச்சட்டத்துடன் இது ஆரம்பிக்கப்பட்டது. காலப்போக்கில் வெள்ளையர்களுக்கு வேற்று மனிதர்கள் (கிறித்தவரல்லாத) பால் ஏற்பட்ட அச்சம் மற்றும் பழக்க வழக்கங்கள் காரணமாக நீக்ரோக்களும் வெள்ளையர்களும் வெவ்வேறு விதமாக நடத்தப்பட்டு ஆப்பிரிக்க மக்களின் அந்தஸ்து மாறுபட்டு, "நீக்ரோ கொத்தடிமை" முழு அடிமைத்தனமாக மாறியது. அமெரிக்கக் காலனிகளில் இருந்த நீக்ரோ

சட்டம் மற்றும் சம்பிரதாயங்களின் மாற்றங்கள் மூலமாகச் சிறிது சிறிதாகப் பல்வேறு நிகழ்வுகள் வாயிலாக, நீக்ரோ அடிமைத்தனம் உருவானது. இவ்வாறு மாறியதில் இரண்டு முக்கியமாக கட்டங்கள் உள்ளன. முதல்படியான நீக்ரோக்களை ஆயுட்காலப் பணியாட்களாக வைத்துக்கொள்ளும் சம்பிரதாயம் அங்கீகரிக்கப்பட்டது. ஏற்கனவே குறிப்பிட்டவாறு அரசியல் மற்றும் குடியுரிமை இழப்பு தன்னாலேயோ, பிறராலேயோ ஏற்படுவது மட்டும் அடிமைத்தனமாகாது. அதைவிட இந்த இழப்பு முழுமையானதாகவும் நிரந்தரமானதாகவும் இருந்ததில்தான் அடிமைத்தனம் இருக்கிறது. மற்ற அடிமைத்தனங்களிலிருந்து அது மாறுபட்டது. குடியாள் நிலை, பண்ணையாள் முறை, கொத்தடிமை முறை எனப் பல பெயர்களில் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்றவாறு வழங்கிய அடிமைத்தனத்திலிருந்து இது வேறுபட்டது. அடிமைகளின் பணிக்காலத்தை நீட்டிக்கும் கோட்ட உரிமையாளரின் முயற்சி, வெள்ளைத் தொழிலாளர்களைப் பொறுத்தவரை பலிக்காதது நீக்ரோக்களைப் பொறுத்தவரை பலித்தது. பொதுமக்களின் கருத்தும் இந்த மாற்றத்திற்கு ஆதரவாகவே இருந்தது. ஏனெனில், நீக்ரோக்கள் கட்டுப்படுத்தப்படாமல் விடப்படுவது ஆபத்து என்று கருதப்பட்டதால் இரண்டாவது படியாகத் தாயின் பணி நிபந்தனைகள் மற்றும் அந்தஸ்து, பிறக்கும் குழந்தைக்கும் விரிவுபடுத்தப்பட்டவுடன் அடிமைத்தனத்தின் இரண்டாவது படியும் முழுமைபெற்றது. அடிமைத்தனத்தின் சின்னங்கள் தாயிடமிருந்து குழந்தைக்கும் விஸ்தரிப்பது ஒன்றும் கடினமானதாக இருக்க வில்லை. ஏனென்றால், தாயைக் கட்டுப்படுத்திய எஜமானருக்குக் குழந்தையைக் கட்டுப்படுத்துவதும் கடினமானதாக இராது. ஆயுட்காலத்துக்கு ஒருவரிடம் பணிபுரியும் பெற்றோர் தங்கள் குழந்தைகளின் ஜீவியத்திற்கு ஏதும் செய்ய இயலாது என்பதும் அதற்கும் அவர்கள் தங்கள் எஜமானர்களையே சார்ந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவு. சட்டத்தின் மூலமாக அங்கீகரிக்கப்படும் பல ஆண்டுகளுக்கு முன்னால், இந்நிலைமை சம்பிரதாயம் பழக்க வழக்கத்தின் மூலமாக அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் இதற்கெனச் சட்டங்கள் 1662 முதல் 1741 வரை அமெரிக்காவின் பல்வேறு மாநிலங்களில் இயற்றப்பட்டது.

இப்படித்தான் முதலில் பணியாளாக இருந்த நீக்ரோ, அடிமையானான். ஆனால், இந்த அடிமைத்தனம் என்பது நீக்ரோக்களின் தாயகமான ஆப்பிரிக்காவில் மிகப் பழங்காலத்திலிருந்தே ஒரு நிறுவனமாக இருந்தது என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. கீழ்க்கண்ட முறைகள் தான் அடிமைகள் ஆக சாதாரணமாக இருந்து வந்தது.

1) பிறப்பினாலேயே அடிமை 2) கடனுக்காக விற்கப்பட்டு அடிமையாவது 3) போரிலே சிறை பிடிக்கப்படுவதன் மூலமாக அடிமையாவது 4) பழிவாங்கவோ, பேராசையுடனோ,

லாபத்திற்காகவோ தனி மனிதர்களைக் கடத்திப்போய் விற்பதனால் அடிமையாவது. நீக்ரோக்களுக்கு உண்மையில் அடிமைத்தனம் பழக்கமானது என்பதும், அடிமைகளின் முதலாளியாக இருப்பதில் உண்டாகும் மகிழ்ச்சியையும் அவர்கள் அனுவத்திருக்கிறார்கள் என்பதும் உண்மை. ஆகவே, ஒரு நீக்ரோ, தான் அடிமைகளின் முதலாளயாக இருந்து இன்னோரிடத்தில் அடிமையாக ஆனால் அவர் மீது அனுதாபம் உண்டாகாது என்பது உண்மை. இருந்தபோதிலும் , இவ்வாறு, அடிமை, முதலாளியாக இருந்ததற்கு அது தண்டனை என்று கருதப்பட்டாலும் கூடப் புதிய உலகில் வேற்று முதலாளிகளிடம் இவர்கள் பட்ட துன்பங்களை, அனுபவித்த கொடுமைகளை நியாய உணர்ச்சி உள்ள எவரும் கண்டிக்காமல் இருக்க முடியாது.

புதிய உலகத்தில் அடிமை முறைக்கு ஆட்பட்ட நீக்ரோக்களின் துன்பங்கள் எவ்வளவு பெரியது என்பதை ஐரோப்பா மற்றும் ஆசியாவின் குடிமக்களால் கற்பனை செய்ய இயலாது. அவைகள் மூன்று தலைப்புகளின் கீழ்வரும்.

அவனைச் சிறையெடுக்கும்போது, அவனைப் பிரயாணமாகப் போகும்போது, அவன் உழைக்கும்போது ஏற்படும் துன்பங்கள், என்று மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

முதலாவது, அடிமைப்படுத்த நீக்ரோக்களைச் சிறையெடுப்பது குறித்துப் பார்ப்போம். ஆரம்பத்தில் கடற்கரையோரங்களில் திடீரென்று கப்பலில் வந்து கரையிறங்கி அங்குள்ளவர்களைச் சிறைப்பிடித்துச் சென்றார்கள். ஆனால், காலப்போக்கில் கடலில் கப்பல் வந்துகொண்டிருக்கும்போதே பார்த்து உஷாரான நீக்ரோக்கள் காடுகளில் போய் ஒளிந்து கொண்டார்கள். துணிவுள்ள சிலர், காடுகளுக்குள்ளும் அவர்களைத் துரத்திச் செல்லுவது உண்டு எனினும், அவர்கள் வழக்கமான நடைமுறை என்னவென்றால், வியாபாரம் செய்யும் உள்நாட்டவர்களுடன் பேசி, ஐரோப்பாவிலிருந்து அவர்கள் கொண்டு வந்துள்ள குறைந்த விலையுள்ள துணிகள், மணிகள், இரும்பு, வாசனைப்பொருட்கள், பவுடர் மற்றும் போதைப்பொருட்கள் ஆகியவற்றை உள்ளூர் தலைவர்களிடமுள்ள அடிமைகளுக்குப் பண்டமாற்று முறையில் கொடுத்துவிட்டு அடிமைகளைப் பெற்றுக்கொள்வார்கள். மற்றவர்களைக் காட்டிலும் வலிமை படைத்த உள்ளூர் இனங்களின் தலைவர்கள், இந்தப் பொருட்களை வேண்டாம் என்று மறுத்தலித்தாகவோ அல்லது மறுலிக்க விரும்பியதாகவோ எவ்வித ஆதாரமுமில்லை. குறிப்பாகத் துப்பாக்கிகள் மற்றம் சாராயத்திற்கு இது மிகவும் பொருந்தும். இந்த வாணிகத்தினால் ஒரே இனத்திற்குள்ளேயே மிகச் சிறு குற்றங்களுக்குக் கூட அடிமைப்படுத்துவது அதிகமாகக் கொண்டே போனது. இரண்டு

உள்ளூர்க் குருக்களிடையே பெண்களையும் குழந்தைகளையும் சிறைப்படுத்திக்கொண்டு போவதற்காக சமாதான காலங்களிலேயே சண்டை ஏற்படுவது என்பது ஆப்பிரிக்கர் வாழ்வின் நிரந்தரமான ஒரு நிகழ்ச்சியாகியதோடு, ஆப்பிரிக்கக் கண்டத்தின் ஏனைய பகுதிகளுக்கும் இப்பழக்கம் அடிமை வாணிகம் அதிகமாகப் பரவிக் கொண்டே போனது.

இரண்டாவது, அடிமைகளை அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யும்போது, அடிமைகளை வாங்கிய வணிகர்கள் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என்று அனைவரையும் ஒன்று சேர்த்து ஒரு நீண்ட ஊர்வலமாக, சில சமயம் மிக நீண்ட ஊர்வலமாக கடற்கரையை நோக்கி அழைத்துச் செல்வார்கள். வழக்கமாக அடிமைகள் தப்பிச் சென்றுவிடாமல் இருக்க அவர்களுக்கு விலங்கு போட்டு "அடிமைக் குச்சி" எனப்படும் குச்சியால் - இது ஒரு நீளமான குச்சி : அதன் இரு முனைகளிலும் கழுத்தைச் சுற்ற கயிறு இருக்கும்'- பிணைத்து அழைத்துச் செல்வார்கள். அவர்கள் தங்கள் தலையில் தங்களுக்கு வேண்டிய உணவு வகைகள் மற்றும் துணிமணிகளையும், உள்ளூரில் அடிமை வியாபாரி வாங்கிய தங்கம் மற்றும் உள்ளூர்ச் சரக்குகளையும் தூக்கிச் செல்வார்கள். ஊர்வலத்தில் செல்லும் பலவீனமான அடிமைகளுக்கு ஊர்வலத்தின் கடுமை தாங்க இயலாமல் போவதுண்டு. இவ்வாறு நோயுற்ற அடிமைகள் கொல்லப்படுவதுண்டு அல்லது சாக விட்டு விடப்படுவதுண்டு. அடிக்கடி அடிமைகள் கொண்டு செல்லப்படும் பாதைகளில் எலும்புத் துண்டுகள் சிதறிக் கிடக்கும். கடற்கரைக்கு அவர்கள் வந்து சேர்ந்தவுடன், அவர்களுக்கென்று உள்ள கப்பல்களுக்கு அவர்கள் கொண்டு செல்லப்படுவார்கள். நடுவில் 3 அடி இடைவெளி விட்டு கப்பல்கள் நீளவாக்கில் பிரிக்கப்பட்டு இருக்கும். அடிமைகளில் ஆண்கள், பெண்கள், தனித்தனியாக இரண்டிரண்டு பேர்களாக கைவிலங்கிடப்பட்டு அறைக்குள் விடப்படுவார்கள். சரக்கு அதிகம ாக இருந்தால் லாபம் அதிகமாக இருக்கும் என்பதால், சில சமயங்களில் அளவுக்கதிகமாக அடைக்கப்பட்டு அவர்கள் திரும்புவது கூட கடினமானதாயிருக்கும். 150 டன் எடையுள்ள கப்பலில் சுமார் 600 அடிமைகள் ஏற்றிச் செல்லப்பட்டார்கள். பிரேசிலுக்கு நேரடியாகச் செல்லும் பாதை ஓரளவு குறைந்த தூரம்தான் எனினும், அடிமைகள் வியாபாரத்திற்கு முக்கிய பகுதியாக விளங்கிய மேற்கு இந்தியத் தீவுகளுக்குச் செல்லும் "மத்திய பாதைப்" பயணம் வேகமாகக் காற்று வீசுவதாலும் நீண்ட நாட்களாகலாம். கடல் அமைதியாக இருக்கும் காலங்களில் அடிமைகள் கப்பலின் மேல் தளத்திற்குக் கொண்டு போகப்பட்டு அங்குப் பயிற்சி நிமித்தம் நடனம் ஆடக் கட்டாயப் படுத்துவதுண்டு. கடுமையான தட்ப வெப்ப காலங்களில் அடிமைகள் நிலையைக் கற்பனை செய்து கொள்ளலாம். கப்பலில் வியாதிகள் மலிந்து

இருக்கும். கப்பலில் உணவு உண்ண மறுக்கும் அடிமைகளுக்கு கட்டாயமாக உணவு புகட்டக் கருவிகள் வழங்கப்பட்டாலும் "18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கப்பலில் கொண்டு செல்லப்பட்ட அடிமைகளில் ஆறில் ஒரு பகுதியினர் பிரயாணத்தின் போதே இறந்து விட்டார்கள் என்பது அனைவரும் ஏற்றுக் கொண்ட உண்மை. பயணம் முடியும் தறுவாயில் அடிமைகள் பரிசோதிக்கப்பட்டு விற்பனைக்குத் தயார் செய்யப்படுவார்கள். புயலினாலோ தவறாகத் கையாளப்பட்டதாலோ ஏற்பட்ட காயங்களுக்கு மருத்துவ உதவி அளிக்கப்பட்டுக் கூடுமான வரை மறைக்கப்படுவதுண்டு. ஆனால், துறைமுகங்களிலுள்ள ஏஜெண்டுகள் "நீக்ரோக்கள், பொட்டலங்கள்", மிக மோசமானவை என்றோ, 'மிகவும் மட்டமானவை' என்றோ 'தவறாகக் கையாளப்பட்டவை' என்றோ அடிக்கடி புகார் செய்வதுண்டு. இறுதியாகக் கப்பலின் "தளத்திலோ அல்லது அடிமைகள் சந்தைகளிலோ" கூவியும் ஏலம் விட்டும் விற்கப்படுவார்கள். 18-ஆம் நூற்றாண்டில் நல்ல உடல் நிலை உடைய அடிமைகள் (ஆண்) 60 பவுண்டுகள் விலை வரை போவதுண்டு. நோயுற்ற அல்லது காயம்பட்ட அடிமைகளும் பெண்களும் குழந்தைகளுடன் "கும்பலாக அழிக்கப்பட்ட சரக்கு" என்று கூறி மலிவான விலைக்கு விற்கப்படுவதுண்டு. தோட்டங்களுக்குக் கடைசியாகக் கொண்டு செல்லப்படும் நிலையில் கூட அவர்கள் கடைசியாக இன்னொரு கஷ்டத்தையும் சந்தித்து விட்டுத்தான் தங்கள் எஞ்சிய வாழ்நாளைக் கழிக்கப் போகும் இடத்தில் துவக்க வேண்டும். வேலையின் ஆரம்ப மாதங்களைப் "பதப்படுத்தும்" காலங்கள் என்று கூறப்படும். ஆரம்ப மாதங்களில் குறைந்தது 3-இல் ஒரு பகுதிப் புதியவர்கள், புதிய தட்ப வெப்பங்கள், உணவுப் பணி ஆகியவற்றின் காரணமாகவோ, உடல் ரீதியாகவோ மன ரீதியாகவோ தயார் ஆக முடியாமல் இறந்து போவார்கள். மொத்ததில் இறப்புகளைக் கணக்கிட்டால் அடிமைகளைப் பிடிக்கும் "சண்டைகள்", கடலுக்குச் செல்லும் வேளைகள், மத்தியப் பாதை, பதப்படுத்துதல் ஆகிய காலங்களில் குறைந்த பட்சம் தயாராக ஒவ்வொரு அடிமைக்கு ஒரு அடிமை வீதம் இறந்து போவதுண்டு.

மூன்றாவதாகப், பதப்படுத்தப்பட்ட நீக்ரோ அடிமையின் வாழ்வின் நீக்ரோ அடிமைத்தளம் முதலாளிக்கு அடிமையை ஆளும் உரிமை, தண்டிக்கும் உரிமை ஆகிய இரு உரிமைகளைச் சந்தேகத்திற்கு இடமின்றி அளித்தது.

நீக்ரோவைச் சொந்தமாக வைத்துக் கொள்ளும் உரிமைக்கும் பரவலான அர்த்தம் கொடுக்கப்பட்டது. இவ்வுரிமை, ஒரு எஜமானருக்கு நீக்ரோ வேலை வாங்கும் உரிமை மட்டுமல்ல நீக்ரோவின் பணியைப் பிறருக்கு விற்க, வாரிசு உரிமையின்படி சந்ததிகளுக்கு அளிக்க, அவர்களை விரும்பும் வகையில் விற்க என்று பல உரிமைகள்

அவர்களுக்கு உண்டு. இந்த உரிமைக் கோட்பாட்டின் படி ஒரு அடிமையின் உடல், பொருளுக்குச் சமமானதாகக் கருதப்பட்டது. நீக்ரோ, அடிமையாக இவ்வாறு சொத்தாகப் பாவிக்கப்பட்டதால் எஜமாளரின் கடனுக்காக அடிமைகளைக் கைப்பற்றிக் கொள்ளுவதுண்டு. இப்படி கைப்பற்றப்பட்ட அடிமைகள் விடுவிக்கப்பட்டால் கூட, அதற்கு முன்னால் எஜமானர் பட்ட கடனுக்காக மீண்டும் சிறை பிடிக்கப்படுவது உண்டு. அடிமையை, மனிதனாக அல்லாமல் ஒரு சொத்தாக பாவிக்கும் இந்தக் கோட்பாட்டின் காரணமாக, அவனுடைய சட்ட மற்றும் நாகரிக உரிமை மேலும் பாதிக்கப்பட்டது. அவன் சொந்தமாகச் சொத்தை வாங்கவும் முடியாது; அனுபவிக்கவும் முடியாது. இது ரோமானிய சட்டத்திற்கு மாறுப்பட்டது. ஏனெனில், அங்கே அடிமைகள் பெக்கூலியம் என்று சொத்தை வாங்கும் உரிமையைப் பெற்றிருந்தார்கள். அது மிகவும் குறுகிய வரம்புள்ள உரிமை. எனினும், அங்கு அடிமை ஒரு சொத்தாக இருப்பினும் இந்த உரிமை அவனை ஒருமனிதனாக மதிக்கும் நிலையைக் காட்டுகிறது. நீக்ரோவை ஒரு மனிதனாக மதிக்கும் நிலையை இது காட்டுகிறது. நீக்ரோ ஒரு மனிதனாகக் கருதப்படாததால் அவன் வாணிகம் செய்ய முடியாது. திருமணமும் செய்ய முடியாது. ஒரு எஜமானர் தன் அடிமையைக் கண்டிக்கலாம் என்ற உரிமைக்கு மிகவும் குரூரமான விளக்கம் நீக்ரோவைப் பொறுத்தவரை அளிக்கப்பட்டது. 1829-இல் வட கரோலினா மாநிலத்தில் தன்னுடைய அடிமையை அடித்த எஜமானர் மீது தொடரப்பட்ட வழக்கில் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி எஜமானரை விடுதலை செய்து தீர்ப்பு அளிக்கையில் கீழ் கண்டவாறு கூறுகிறார்:

"ஒரு எஜமானருக்கும் அடிமைக்கும் உள்ள உறவைப், பெற்றவருக்கும் பிள்ளைக்குமிடையே உள்ள அளவுடன் ஒப்பிடுவது தவறு. ஒரு பெற்றவன் தன்னுடைய பிள்ளைக்குப் பயிற்சி அளிப்பதன் நோக்கம் வாழ்க்கையில் சுதந்திரமான மனிதனாக அவன் வாழத் தகுதியுள்ளவனாக்குவதுதான். இந்த நோக்கத்தில், அவன் தன் பிள்ளைக்கு ஒழுக்கம் மற்றும் அறிவுப் பயிற்சியை அளித்தான். ஆனால், அடிமையைப் பொறுத்தவரை இது அத்தகையதன்று. அடிமையின் விஷயத்தில் ஒழுக்க நெறி விஷயங்களையெல்லாம் பொருத்திப் பார்ப்பது அறிவுப் பொருத்தமற்றது. அடிமை முறையின் நோக்கம் அவனுடைய எஜமானரின் லாபத்தை, பாதுகாப்பை, பொது பாதுகாப்பை உறுதி செய்வதுதான். ஓர் அடிமை, தானும் தன் சந்ததியும் அறிவை வளர்க்காமலும், சொந்தமாகச் சொத்து சேர்க்காமலும் வாழும் வாழ்க்கையில் தன்னை ஒப்புவித்து அழிந்து விடுபவன். அறிவையும் சொத்தையும் தேட அவன் முயற்சிப்பது பயன் தராது. இப்படிப்பட்ட ஒரு மனிதனுக்கு என்ன நெறியைப்

பொருத்திப் பார்க்க இயலும்? அது ஒருக்காலும் முடியாது என்பது மட்டுமல்ல: ஒரு முழு முட்டாள் கூட இப்படிப்பட்ட நிகழ்வுகள் இருக்க முடியாது என்பதை உணர முடியும். ஆகவே, அவன் இயற்கை, கடமையைச் செய்யவும் மகிழ்ச்சியோடு செய்யவும் வேண்டும். ஏனெனில், தன்னுடைய உரிமையை, மற்றொருவனுக்குத் தெரிந்தே ஒப்புவித்து விட்டவன். ஒரு மனிதனின் உடம்பின் மீது மற்றொருவருக்கு உள்ள வரையற்ற கட்டுப்பாட்டின் காரணமாகத்தான் இந்த உரிமை ஏற்படுகிறது. வேறெதுவும் இப்படிப்பட்ட நிலையைத் தோற்றுவிக்க இயலாது. ஒரு எஜமானனுக்கு தன்னுடைய அடிமையை முழுமையாக அடக்க இந்த அதிகாரம் முழுமையாக இருக்க வேண்டும்."

எஜமானரின் உரிமைக்கு இப்படிப்பட்ட விளக்கத்தை அளித்ததன் விளைவாக, வெகு காலத்திற்கு, அமெரிக்காவில், இவ்வாறு தண்டிக்கப்படுகையில் ஒரு நீக்ரோ அடிமையாக எதிர்பாராமல் இறந்துவிட்டால் அது வருத்தத்துக்குரிய ஒரு விபத்தாகத்தான் கருதப்பட்டது. இந்த உரிமை எந்த அளவுக்கு ஈவு இரக்கமின்றி பயன்படுத்தப்பட்டது என்பது 1787-இல் ஆண்டிக்ளா மாநிலத்தைச் சேர்ந்த ஒருவர் எழுதிய கடிதங்களைப் பார்வையிடுகையில் தெரியவரும். எழுதியவர் கூறுகிறார்:

"நீக்ரோக்கள், அதிகாலையில் சூரியோதயத்தில் எழுப்பப்பட்டு 20 முதல் 60 பேர் கொண்ட குழுக்களாய் வெள்ளைக்காரக் கண்காணியின் கீழ் வேலை செய்ய அனுப்பப்படுவார்கள். இவர்கள் தங்கள் உழைப்பு மற்றும் திறமையினால் தோட்டங்களுக்கு உரிமையாளர்களாகவே ஆகிவிடுவார்கள். இவர்கள் வேலையாட்களாகச் சேர்ந்தவர்கள். இவர்களின் கீழ், கறுப்பர்கள் அல்லது கறுப்பர்களுக்கும் வெள்ளையர்களுக்கும் பிறந்த முலாட்டோக்கள் இருப்பார்கள். இவர்கள் மிகவும் மோசமானவர்களாயிருப்பார்கள். இவர்களுடைய வேலையே சற்றே நேரம் ஓய்வு எடுக்கும் முதியவர் அல்லது பெண்கள் யாராயினும் அவர்களைத் தங்கள் கையிலுள்ள சாட்டையால் விளாசிவிடுவதுதான். அவர்கள் சோம்பலின் காரணமாகச் சும்மாயிருக்கிறார்கள்: உடல்நலமின்றி இருக்கிறார்கள் என்பதெல்லாம் அவர்களுக்குக் கவலையில்லை. மதிய உச்சி வேளை 12 மணிக்கு அவர்கள் பணியிளின்றும் 11இ2 மணி நேரம் ஓய்வுக்கு அனுப்பினார்கள் 11இ2 மணி நேரத்தில் மீண்டும் அவர்கள் பணிக்குத் திரும்பிச் சூரியன் மறையும் வரை வேலை செய்ய வேண்டும்."

அடிமைகளுக்குத் தீவில் அளிக்கப்பட்ட தண்டனைகள் பல வகைப்பட்டவை, மிகவும் கொடூரமானவை, அவற்றில் ஒன்றுதான்

"தம்பாக்குரு' எனப்படும் தண்டனை. இதில், கட்டை விரல்கள் இரண்டும் ஒன்றாகச் சேர்த்துக் கட்டப்படும். அப்போது உயிரே போகும் அளவுக்கு வலி ஏற்படும். இன்னொன்று "இரும்பு கழுத்துப் பட்டை" ஆகும். இதில் கழுத்தைச் சுற்றி ஒரு இரும்பு வளையத்தை இரண்டு காலர்களுடன் போடுவார்கள். இந்த இரும்பு கழுத்துப் பட்டை அணிந்த அடிமைகள் கொஞ்சம் கூட வசதியாகக் குனிந்துபார்க்கவே முடியாது. "காலணிகள்" எனப்படுபவை கெட்டியான இரும்பு வளையங்கள், சுற்றளவில் நான்கு அங்குலங்கள் இருக்கும் கணுக்காலுக்கு சற்று மேலாக மூடப்பட்டிருக்கும்,இவற்றுடன் சில முதலாளிகள் சங்கிலியையும் பிணிப்பார்கள். இவற்றைப் பரிதாபத்திற்குரிய அடிமைகள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சமாளிக்க வேண்டும். மதிய வேளைகளில் அவ்வப்போது நீக்ரோக்கள் மேற்கண்டவைகளை அணிந்து கொண்டு நடமாடுவது அரிதான காட்சியல்ல.

நீண்ட காலணிகளை ஒத்த நீண்ட சங்கிலிகள் "ஸ்பர்" என்ற பெயருடையது. நீண்ட "பெட்லாக்" களுடன் இணைத்து சங்கிலியால் பிணைக்கப்பட்டு இந்தப் பாவப்பட்ட நீக்ரோக்கள் செல்வது அடிக்கடி காணப்படும் காட்சியாகும்.

தனி மனிதர்கள் இழைக்கும் கொடுமைகளை வைத்து எல்லா அடிமை முதலாளிகளையும் கணக்கிடுவது பெருந் தவறாகும். பல சந்தர்ப்பங்களில் அடிமைகள் தங்களை எஜமானர்களிடம் நட்போடு இருப்பதும், அவர்கள் பதிலுக்கு அடிமைகளிடம் கனிவுடன் இருப்பதும் உண்டு. ஆயினும் இந்த உறவு வெறும் பொருளாதார லாபத்தின் அடிப்படையில், மனிதர்களைப் பொருள் குவிக்கும் கருவிகளாக மனிதாபிமானமே இன்றிப் பயன்படுத்தும் முறையாகும்.

இந்தியாவைத் தவிர பிற நாடுகளிலும் கீழ் நிலையில், சுதந்திரமற்ற, சலுகைகளற்ற வர்க்கங்கள் இருந்தன என்பதற்கு மேலும்சான்றுகள் தேவையில்லை. ஆனால், மிக முக்கியமானது என்னவென்றால் இந்தச் சுதந்திரமற்ற சலுகைகளற்ற வர்க்கங்கள் தனி வர்க்கமாக இல்லாமல், சமூகத்தின் அங்கமாக அங்கேயெல்லாம் மாறிப் போயின. கேள்வி என்ன வென்றால் ஏன் தீண்டாமை அவ்வாறு மறையவில்லை? இதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. அவை பின்வரும் இயல்களில் ஆராயப்படும்.

□□□

# இயல் 9

## இந்துக்களும் பொது மனசாட்சியில்லாமையும்

தீண்டாதோருக்கு எதிராக இந்துக்கள் வன்முறையில் ஈடுபட்ட பிரச்சினைகள் எல்லாமே அனைவருக்கும் சமத்துவம் வேண்டும் என்பதற்கான கோரிக்கையினால் ஏற்பட்டதுதான். தீண்டாதோர் ஊர்வலமாகச் செல்ல விரும்பும்போது, அவர்களுக்கு, இந்துக்களும் ஊர்வலம் செல்வது குறித்து எந்த ஆட்சேபனையுமில்லை. தீண்டாதோர் தங்க, வெள்ளி நகைகளை அணியும்போது அவர்கள், இந்துக்களும் தங்க, வெள்ளி நகைகளை அணிந்து கொண்டால் ஆட்சேபனை செய்தில்லை. தீண்டாதோர் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிகளுக்கு அனுப்ப விரும்பும்போது அவர்கள், இந்துக்கள் கல்வி பயில முழு உரிமை உண்டு என்பதற்கு எதிராக இல்லை. தீண்டாதோர் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க விழைந்தால் இந்துக்களும் தங்கள் உரிமையைப் பயன்படுத்தித், தண்ணீர் எடுப்பதை அவர்கள் ஆட்சேபிக்கவில்லை. இது போன்ற பல விவகாரங்களைச் சொல்லாம். அதற்கு முடிவே இல்லை. ஆனால், அது தேவையற்றது. விஷயம் மிக எளிமையானது; எளிதில் புரிந்து கொளளக் கூடியது. தீண்டாதோர் எந்த உரிமையைக் கோரினாலும் அது அவர்களுக்கே மட்டும் உரியதல்ல என்பதோடு, அது, இந்துக்களின் சமத்துவத்திற்கான உரிமைக்கு மாறானதல்ல. அப்படியானால், ஏன் இந்துக்கள் இந்தச் சாதாரணமான சட்டபூர்வமான கோரிக்கையினை, வன்முறையைப் பயன்படுத்தித் தீண்டாதோருக்கு மறுக்க வேண்டும்? அவர்கள் ஏன் தங்கள் சட்ட விரோதமான செயலைச்

சட்டபூர்வமானதாகக் கருத வேண்டும்? இந்துக்கள் தீண்டாதோருக்கு எதிராக இவ்விவகாரங்களில் செய்யும் அல்லது செய்யத் தவறும் செயல்களைச் சமூகக் கொடுமைகள் என்ற பெயரைத் தவிர வேறு எந்தப் பெயரில் அழைக்க இயலும்? இந்துக்களுடைய செயல்கள் அல்லது செய்யத் தவறியவை வெறும் சமத்துவமின்மை மட்டுமல்ல: வெறும் அவமரியாதை மட்டுமல்ல: அவை மனிதனுக்கு மனிதன் இழைத்த மிகவும் கொடிய மனிதாபிமானமற்ற செயல்களாகும். தீண்டாதோர் என்ற ஒரே காரணத்துக்காக, ஒரு மருத்துவர் ஒரு மனிதனுக்கு சிகிச்சை அளிக்க மறுப்பது, தீண்டாதோர் வீடுகளை இந்துக்கள் கும்பலாகக் கூடி எரிப்பது, கிணறுகளிலே மனிதக் கழிவுகளைப் போடுவது போன்ற செயல்கள், மனிதாபிமானமற்ற செயல்கள் அல்ல என்றால், வேறு எந்தச் செயல்களை அவ்வாறு கூறுவது என்பது எனக்குள்ள வியப்பு. கேள்வியே இந்துக்களுக்கு ஏன் மனசாட்சியில்லை என்பதுதான்.

இவற்றுக்கெல்லாம் ஒரே பதில்தான் உள்ளது. மற்ற நாடுகளிலுள்ள வர்க்கங்கள், பொருளாதார மற்றும் சமூகக் காரணங்கள் அடிப்படையில் எழுந்தவை. அடிமைத் தனத்திற்கு மதத்தில் அடிப்படையில்லை. தீண்டாமை, இந்துக்களுக்குப் பொருளாதாரத் தன்மைகளைத் தரமுடியும்: தருகிறது என்றாலும், அது முக்கியமாக மதத்தினால் ஏற்பட்டதுதான். பொருளாதார, சமூக நன்மைகளைப் பொறுத்தவரை, புனிதமானது என்று சொல்ல ஏதுமில்லை. அவை, காலம் மற்றும் சூழ்நிலைகளுக்கு இடம் தருகின்றன. இதுதான் அடிமை முறை மற்றும் நிலப் பிரபுத்துவம் அழிந்து போனதற்கும் தீண்டாமை அழியாமல் இரும்பதற்கும் காரணமாகும். மற்ற இரண்டும் கேள்விகளுக்கும் கூட இதுவேதான் பதில். ஒரு இந்து தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறான் எனில் அவனுடைய மதம் அவனுக்கு அவ்வாறு கட்டளையிட்டு இருப்பதால்தான். தீண்டாதோரை நிலைபெற்றுள்ள சமுதாயக் கட்டுக்கோப்பினை எதிர்த்துத் தீண்டாதோர் புரட்சி செய்யாத வண்ணம் இந்துக்கள் கொஞ்சமும் ஈவிரக்கமின்றியும் சட்ட விரோதமாகவும் தீண்டாமையைக் கடைப்பிடிப்பதற்குக் காரணம் இந்து மதம் மதக்கட்டுப்பாடு தெய்வீகமானது; அதனால் புனிதமானது என்று சொல்வதோடு மட்டுமல்ல - இந்தக் கட்டுப்பாட்டினை எல்லா இயன்ற வழிகளிலும் பேணிக் காப்பது கடமை என்றும் விதித்திருப்பது தான். அவர்கள் மனிதாபிமானத்தின் குரலுக்குச் செவிசாய்ப்பதில்லை என்றால், அதற்குக் காரணம், அவர்கள் தீண்டாதோரை மனிதர்களாகவே கருதக் கூடாது என்று இந்து மதம் கட்டளை விடுத்திருப்பதுதான். தீண்டாதோரை அடிப்பது, அவர்கள் சொத்துக்களைக் கொள்ளையிடுவது, தீயிட்டுக் கொளுத்துவது மற்றும் பல்வேறு கொடுமைகளை அவர்களுக்கு இழைப்பது ஆகிய செயல்களை அவர்கள் மனசாட்சியின் உறுத்தல் கொஞ்சமுமின்றிச் செய்வதற்குக் காரணம்,

இந்து மதம் அவர்களுக்கு இந்தச் சமூகக் கட்டுக்கோப்பினை கட்டிக் காக்க எவ்விதப் பாவத்தையும் செய்வது தவறல்ல என்று போதிப்பதுதான்.

பல இந்துக்கள், இவ்வாறு கூறுவதை, அவர்கள் மதத்திற்கு வேண்டுமென்றே இல்லாததைக் கூறுவது போல எண்ணக்கூடும். அவர்களுடைய இந்த எண்ணத்தைத் தவறானது என்று நிரூபிக்கச் சிறந்த வழி, இந்து சமூக விதிகளை நிறுவியவர் என்று அறியப்பட்டுள்ள மனுவின் சாஸ்திரத்திலுள்ள அத்தியாயம் மற்றும் வாசகங்களை எடுத்துக் காட்டுவதுதான். நான் கூறுவதை மறுக்கும் எவராயினும், மனு, தீண்டாமை, தீண்டாதோர், இந்துக்களின் கடமைகள் ஆகியவற்றைக் குறித்து வெளியிட்டுள்ள கீழ்க்கண்ட விதிகளை படித்தும் பார்க்கட்டும்:

1. (பிரம்மத்தின்) வாய், தோள்கள், தொடைகள், பாதங்கள் ஆகியவற்றில் இருந்து தோன்றியவர்களின் சமுதாயத்திற்கு வெளியில் உள்ள எல்லா இனக்குழுக்களும், அவர்கள் மிலேச்சர்களின் (நாகரிக மற்றவர்களின்) மொழியை அல்லது ஆரியர்களின் மொழியைப் பேசினாலும், தஸ்யூக்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

2. நன்கு அறியப்பட்ட மரங்களுக்கும் சுடுகாட்டிற்கும் அருகிலும் மலைகளின் மேலும் இந்த (இனக்குழுக்கள்), (சில குறிகளால் அறியப்பட்டனவாக) தங்களுக்கே உரியவையான தொழில்களைச் செய்துகொண்டு வசிக்கட்டும்.

3. ஆனால், சண்டாளர்களும் ஷ்வாபகர்களும் வசிக்குமிடம் கிராமத்தில் வெளியே இருக்கவேண்டும். அவர்கள் அபபத்திரர்கள் ஆக்கப்படவேண்டும். அவர்களுடைய செல்வம் நாய்களும் கழுதைகளும் ஆகும்.

4. அவர்களின் உடை, இறந்தவர்களின் துணிகளே(ஆகும்); தங்கள் உணவை உடைந்த தட்டுக்களிலிருந்து (அவர்கள உண்பார்கள்); கரும் இரும்பே அவர்களின் அணிகலன் (ஆகும்); அவர்கள் எப்போதும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குத் திரிந்து கொண்டேயிருக்க வேண்டும்.

5. சமயக் கடமைகளை நிறைவேற்றுபவன் அவர்களுடன் உடலுறவை நாடக்கூடாது; அவர்களுடைய தொடர்புகள் அவர்களுக்கிடையிலேயே இருக்கும்; அவர்களின் திருமணங்கள் அவர்களுக்குச் சமமானவர்களுடனேயே இருக்கும்.

6. அவர்களின் உணவு அவர்களுக்கு (ஆரியர் தவிர) மற்றவர்களால், உடைந்த தட்டில் கொடுக்கப்படும்; இரவில் அவர்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் நடந்து செல்லக்கூடாது.

---

(1) மனு X, 45; (2) மேற்படி X, 50; (3) மேற்படி X, 51; (4) மேற்படி , 52; (5) மேற்படி X, 53; (6)

7. பகலில் அவர்கள், மன்னனின் கட்டளைப்படி அடையாளக் குறிகளுடன் தங்கள் வேலைகளைச் செய்யச் செல்லவேண்டும்; உறவினர் இல்லாத (மனிதர்களின்) சவங்களை அவர்கள் எடுத்துச் செல்லவேண்டும்; இது முடிவான விதியாகும்.

8. மன்னனின் உத்தரவுப்படி, அவர்கள் குற்றவாளிகளுக்கு சட்டத்தின்படி மரணதண்டனையை நிறைவேற்றுவார்கள்; அந்தக் குற்றவாளிகளின் துணிகள், படுக்கைகள், அணிகலன்கள் ஆகியவற்றை அவர்கள் எடுத்துக் கொள்வார்கள்.

9. மிகத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த பெண்ணுடன் தொடர்பு கொண்டவன் கொல்லப்படுவான்.

10. (ஒரு சண்டாளன் அல்லது வேறு தாழ்ந்த சாதியைச் சேர்ந்த) தீண்டத்தகாதவன், வேண்டுமென்றே, இருபிறப்பாளர்களாலேயே தீண்டத் தகுந்த (இருபிறப்புச் சாதியைச் சேர்ந்த) ஒருவனைத் தொட்டுத் தீட்டாக்கினால் அப்படிச் செய்தவன் கொல்லப்படுவான்.

மனுவின் இந்த விதிகளைப் படிப்பவர்கள் எவரேனும், இந்து மதம் தான் தீண்டாமையை நிரந்தரமாக்கியது என்பதையும் தீண்டாதோரைப் பொறுத்த அளவில் இந்துக்களின் மனசாட்சியற்ற தன்மைக்கும் சட்ட விரோத மனப்பான்மைக்கும் பொறுப்பு என்பதை மறுக்க இயலுமா? ஏற்கனவே முன் கண்ட இயல்களில் விவரித்துள்ள இந்துக்களின் செயல் அல்லது செயலின்மை மனுவின் இந்த 10 விதிகளுடன் ஒத்திட்டு நோக்கினால், இந்துக்கள் மேற்கண்ட செயல்களை, இந்த விதிகளைப் பின்பற்றித்தான் செய்து வந்துள்ளார்கள் என்பது விளங்கும். ஒரு இந்து, தீண்டாதானைத் தீண்டாமல் இருப்பதற்கும், தீண்டாதோர் தீண்டினால் குற்றம் என்று கருதுவதும் மேற்கண்ட விதிகளில் 5 மற்றும் 10 விதிகளின் படிதான். இந்துக்கள் தீண்டாதோரை ஒதுக்கியே வைத்திருக்க வேண்டும் என்று எண்ணுவது 3 ஆவது கட்டளையினால்தான். இந்துக்கள் தீண்டாதோரை, ஆடை அணிகலன்களை அணியக் கூடாது என்று கூறக் காரணம் 8 ஆவது கட்டளையைப் பின்பற்றித்தான். தீண்டாதோர் சொத்து, செல்வம் சேர்ப்பதை இந்துக்கள் சகிக்காது இருப்பதற்குக் காரணம் 3 ஆவது கட்டளைதான்.

உண்மையில் இதற்கும் மேல் இந்த விஷயத்தைக் கஷ்டப்பட்டு அலசத் தேவையில்லை. தீண்டாதோரின் இந்த துரதிர்ஷ்டத்திற்குக் காரணம், இந்து மதமும் அதன் போதனைகளும்தான் தலையாய பொறுப்பு

(7) 10:65 (8) 12:56 (9) விஷ்ணு புராணம் 5: 43 (10) விஷ்ணு 5:104.

என்பதற்கு மறுப்புக்கு இடமில்லை. அடிமை முறையைப் பொறுத்துப் புறச் சமயத்தையும் (பாகனிசம்) கிறித்துவ மதத்தையும், தீண்டாமையைப் பொறுத்து இந்துத்துவத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், கிறித்துவ மதத்திற்கும் இந்து மதத்திற்குமிடையே உள்ள வித்தியாசம்; அதாவது மேற்கண்ட மதங்களால் இந்த நிறுவனங்கள் மீது ஏற்பட்ட தாக்கம், அதாவது கிறித்துவ மதம் எந்த அளவுக்கு அடிமைகளை உயர்த்த உதவியது என்பதும், இந்து மதம் எந்த அளவுக்கு தீண்டாதோரைத் தாழ்த்தியது என்பதும் விளங்கும். அடிமைமுறையையும் தீண்டாமையையும் ஒப்பிட்டுப் பார்க்க விரும்பும் எவரும் அவர்கள் ஒரு பெரிய வேடிக்கையான முரண்பாட்டை உணர்வதில்லை. சட்டப்படி ஒரு அடிமை சுதந்திரமானவனல்ல. ஆனால், சமூக ரீதியாக அவன் தன்னுடைய ஆளுமைத் தன்மையை வளர்த்துக் கொள்ள முடியும். சட்டப்படி ஒரு தீண்டாதான் சுதந்திர மனிதன். ஆனால் சமூக ரீதியாக அவன் தன்னுடைய ஆளுமைத் தன்மையை வளர்த்துக் கொள்ள உரிமையில்லாதவன்.

இது, மிகவும் கண்கூடான விந்தையான முரண்பாடு. இந்த முரண்பாட்டுக்கு என்ன விளக்கம்? இதற்கு ஒரே ஒரு விளக்கம்தான் உள்ளது. அதாவது, அடிமைகள் விஷயத்தில் மதம் அவர்களுக்கு ஆதரவாக இருந்தது. தீண்டாதோரைப் பொறுத்த அளவில், மதம் அவர்களுக்கு எதிராக உள்ளது. ரோமானிய சட்டம் ஒரு அடிமையை, மனிதன் அல்ல என்று விளம்பியது. ஆனால், ரோமின் மதம் இந்தக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்ள மறுத்தது; எக்காரணம் கொண்டும் இந்தக் கோட்பாட்டினைச் சமூக வாழ்வுக்கு இது விரிவுபடுத்துவதை மறுத்தது. அது, அடிமை, தோழமை கொள்ளத் தகுந்த ஒரு மனிதனாகக் கருதியது. இந்து மதம், தீண்டாதோனை ஒரு மனிதன் அல்ல என்று விளம்பியது. பாகனிசத்திற்கு மாறாக இந்து மதம், தீண்டாமைக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டதோடு மட்டுமின்றி இதைச் சமூக வாழ்வுக்கும் விரிவுபடுத்தியது. இந்து மதம் தீண்டாதாரை மனிதன் என்றே ஏற்றுக் கொள்ளாததால் அவனைத் தோழமை கொள்ளத் தக்கவனாக அது கருத மறுத்தது.

ரோம மதம் அடிமையைச் சட்ட இழிவின் விளைவாக சமூக இழிவையும் அவன் அடைவதைத் தடுத்தது என்பது கேள்விக்கே இடமில்லாத விஷயம். அது அடிமையை இழிவுபடுத்துவதை 3 வித்தியாசமான வழிகளில் தடுத்தது. ஒரு வழி என்னவென்றால், அது ரோம அடிமை மிகவும் புனிதம் என்று கருதப்பட்ட இடத்தை அவன் பெறுவதற்கு அனுமதித்தது. அதாவது :

"உரோம மதம அடிமையிடம் எதிர்ப்புணர்ச்சி காட்டியதில்லை. அது ஆலயங்களில் கதவுகளை அவனுக்கு மூடி விடவில்லை: அது தன் விழாக்களின் அவன் கலந்து கொள்ளாமல் ஒதுக்கி வைக்கவில்லை. அடிமைகள் சில விழாக்களில் கலந்து கொள்வது தடை செய்யப்பட்டிருந்தால் அதே போல் மற்றவர்களும் விடுதலையான் பெண்கள், ஆண்கள், ஆகியோர் போனாத்யா, வெஸ்டா, சேரஸ் போன்ற விழக்களிலும் பெண்கள் "ஆரா மேக்சிமா" வில் நடைபெற்ற ஹெர்குலிஸ் விழா ஆகியவற்றிலும் கலந்து கொள்ளத் தடை விதிக்கப்பட்டது. பண்டையக் காலங்களில் ரோம தெய்வங்கள் எதற்காவது, அடிமைகளும் அதில் அதிகாரபூர்வமற்ற முறையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். அவர்களுக்கு மேற்கண்ட தெய்வங்களின் பாதுகாப்பு உள்ளது என்று கருதிக் கொள்ளலாம். அகஸ்டஸ், வெஸ்டா விழாவில் விடுவிக்கப்பட்ட பெண்கள் பூசாரிகளாக இருக்கலாம் என்று அனுமதித்தான். ரோமானியச் சட்டம், ஒரு அடிமையின் கல்லறையையும் புனிதமானதாகவே கருதியது. அவன் ஆத்மாவுக்கென்று ஒரு தனியான குறிப்பிட்ட சொர்க்கமோ, நரகமோ இருந்ததாக புராணங்கள் கூறவில்லை. ஜுவனல் கூட அடிமையின் ஆத்மாவும் உடலும் அவனுடைய எஜமானருடையது போன்றதுதான் என்று ஒப்புக் கொண்டது."

இரண்டாவது வழி யாதெனில், ரோம மதம், ஒரு அடிமை நகரத் தலைவரிடம் தனக்குத் தன் எஜமான் இழைக்கும் கொடுமை குறித்துப் புகார் கூற அனுமதித்ததுடன் அந்தப் புகாரை விசாரிப்பது அவர் கடமை என்று கூறியது. ஆனால் ரோமானிய மதம் மேலும் ஒரு நல்ல நிவாரணத்தையும் அளித்தது. அதன்படி அவன் பீடத்தில் விழுந்து, தன்னை வேறு கருணையுள்ள எஜமானனிடம் விற்று விடக் கோரும் உரிமையே அது.

மூன்றாவது வழியாக ரோமானிய மதம், ரோமானிய சட்டம் ஒரு அடிமையின் 'மனிதன் என்ற வகையில் புனிதமான ஆளுமைத் தன்மையை' அழிப்பதைத் தடை செய்தது. அவனை மனிதர்களோடு உறவாடவும், நட்புக் கொள்ளவும் தகுதியற்றவனாக அது ஆக்கவில்லை. ரோமானிய அடிமைக்கு இதுதான், அவனைக் காத்த மிகப் பெரிய கருணையாகும். ரோமானிய சமுதாயத்திற்கு ஒரு அடிமையிடமிருந்து காய்கறிகள் பால், வெண்ணெய் அல்லது தண்ணீர் அல்லது பழரசம் வாங்குவதற்கோ, அவர்களைத் தொடுவதற்கோ, அவர்களை வீடுகளுக்குள் செல்வதற்கோ, அவர்களுடன் பிரயாணம் செய்வதற்கோ ஆட்சேபணை இருந்திருக்குமானால் அவனுடைய எஜமானர்களால் அவனை அரைக் காட்டு மிராண்டித் தனத்திலிருந்து நாகரிக மனிதனாக மாற்றுவது இயன்றிருக்குமா? நிச்சயமாக முடியாது. ஏனென்றால்' ஒரு

ரோமானிய அடிமை தீண்டப்படத் தகாதவனாக கருதப்படாததால் தான், அவனுடைய எஜமானனால் அவனுக்கு வேண்டிய பயிற்சி அளித்து உயர்த்த முடிந்தது. நாம் மீண்டும் அதே முடிவுக்கு வருவோம். அதாவது, ஒரு அடிமையைக் காப்பாற்றியது என்னவென்றால் அவனுடைய ஆளுமைத் தன்மை அங்கே ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆனால், இங்கே ஒரு தீண்டாதானின் ஆளுமைத் தன்மையை இந்து சமூகம் அங்கீகரிக்கவில்லை. தீண்டாதவனைத் தூய்மையற்றவனாகக் கருதி அவனை மனிதர்களோடு உறவு கொள்ளவும், பொதுவான தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளவும் தகுதயற்றவனாகவும் அது பாவித்தது.

ஒரு அடிமையைச் சமூகத்திலிருந்து பிரிக்கக் கூடிய சமூக அல்லது மத ரீதியான பெரிய இடைவெளி ஏதுமில்லை. வெளித் தோற்றத்திற்கு அவனுக்கும் சுதந்திரமான மனிதனுக்கும் வித்தியாசம் எதுவுமில்லை. அவனுடைய நிறமோ உடையோ இதைக் காட்டும் வகையில் இல்லை; பிற சுதந்திர மனிதன் கண்டு களித்த அதே விளையாட்டுகளை அவனும் கண்டு களித்தான்: அவன் நகர வாழ்க்கையை அவர்களுடன் பகிர்ந்து கொண்டான். அரசுப் பணிகளிலும் அவன் பணியிடம் பெற்றான்; அவன் பிறரைப் போலவே வியாபாரம் மற்றும் வாணிபங்களைச் செய்யும் வாய்ப்பைப் பெற்றான். சட்டத்தின் கண்களில் உள்ள உரிமைகளை விடத் தனி மனிதனுக்கு வெளிப்படையாகத் தெரியக் கூடிய விஷயங்கள் பெரிதாகத் தெரிகிறது. ஒரு அடிமைக்கும் ஒரு சுதந்திர மனிதனுக்கும் இடையில் சமூகத்தில் தடைச் சுவர் சிறிதும் இல்லை. ஒரு அடிமைக்கும் சுதந்திரமான பெண்ணுக்கும், ஒரு சுதந்திரமான மனிதனுக்கும் அடிமைப் பெண்ணுக்கும் திருமணம் என்பது சர்வ சாதாரணமாக நடந்தது. அடிமை என்ற அந்தஸ்து அந்த அடிமைக்குள் இருந்த மனிதனைப் பாதிக்கவில்லை. அவன் தீண்டத்தக்கவன். ஏன், மதிக்கத் தக்கவனாகக் கூட இருந்தான். இவை எல்லாம் ரோமானிய மதம் அடிமையிடம் காட்டிய அணுகுமுறையின் காரணமாக இருந்தவை.

கிறித்தவ மதம் அடிமைகளிடம் காட்டிய அணுகுமுறையை முழுமையாக விவரிக்க இங்கு இடமில்லை. ஆனால், பாகனிசத்திற்கு மாறுபட்டது. அமெரிக்காவில் அடிமை முறை இருந்தபோது, அங்கிருந்த கிறித்துவப் பாதிரியார்கள் அடிமைகளை அவர்கள் அடிமைகளாக இருக்கும்போது கிறித்துவ மதத்திற்கு மாற்றினால் அது கிறித்துவ மதத்திற்கு இழிவானது என்று கருதியதால் அவர்கள் அடிமைகளை கிறித்தவர்களாக்கவில்லை என்பது பலருக்குத் தெரியாது. அவர்களுடைய கருத்துப்படி, ஒரு கிறித்தவர் இன்னொரு கிறித்தவனை அடிமையாக வைத்திருக்க இயலாது. ஒரு கிறித்தவன் மற்றொரு கிறித்தவனிடம் நட்பு ப் பாராட்டியாக வேண்டும்.

சுருக்கமாகச் சொல்வதென்றால், சட்டமும் மதமும் தான் மனிதர்களின் நடத்தையை நிர்ணயிக்கும் இரண்டு சக்திகள் ஆகும். சில சமயங்களில் அவை, ஒன்றுக்கொன்று உதவிகரமாக இயங்குகின்றன. சில நேரங்களில் அவை ஒன்றுக்கொன்று எல்லையை மீறாத வண்ணம் பார்த்துக் கொண்டு சமநிலைப்படுத்துகின்றன. இந்த இரண்டு ஆற்றல்களில் சட்டம் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்குட்பட்டது. ஆனால் மதம் அவ்வாறல்ல. சட்டம், நியாயம் மற்றும் சமத்துவத்திற்கு விரோதமாக இருக்கக்கூடும். ஆனால், மதம் ஒரு சட்டத்தால் உருவாக்கப்படும் அநீதியை அது களையலாம். இது ரோம் நாட்டில் அடிமைகளைப் பொறுத்த விஷயத்தில் நடந்தது. ஆகவே மதம் மனிதனைப் மேம்படுத்தக் கூடியது, அவனைத் கீழ்நிலைப்படுத்தாது என்று நம்பப்படுகிறது. இதற்கு இந்துமதம் விதிவிலக்கானது. அது தீண்டாதோரை மனித நிலைக்குக் கீழாக வைத்தது. அது இந்துவை மனிதாபிமான மற்றவனாக்கியது. இவ்வாறு நிலைபெற்றுவிட்ட, மனித நிலைக்குக் கீழான, மனிதாபிமானமற்ற நிலையிலிருந்து இரு பிரிவினருமே தப்பிக்க இயலாது.

□□□

# இயல் - 10.

## இந்துக்களும் அவர்களது சமூக உணர்வற்ற தன்மையும்

மிகவும் கடினமான சூழ்நிலையில் உள்ள தீண்டாதோரைக் கண்டு வருந்தும் அனைவரும் இவ்வாறுதான் ஆரம்பிக்கிறார்கள்: "தீண்டாதோருக்கும் நாம் ஏதேனும் செய்ய வேண்டும்" ஆனால், இந்தப் பிரச்சனையில் அக்கறையுள்ள எவரும் "இந்துவை மாற்ற நாம் ஏதாவது செய்வோம்" என்று கூறுவதை யாரும் கேட்டதேயில்லை. அனைவருமே தீண்டாதோர்தான் சீர்திருத்தப்பட வேண்டியவர்கள் போலச் சிந்திப்பது வழக்கமாகிவிட்டது. தீண்டாமை, ஏதோ, தீண்டாதோரின் தவறினால், குறைபாட்டினால் ஏற்பட்டதைப் போலவும் தீண்டாதவர்தான் அவன் நிலைமைக்கும் காரணம் என்பது போலவும் பேசுவது வழக்கம். ஏதாவது இயக்கம், பணி தேவைப்படுகிறதென்றால் அது தீண்டாதோருக்குத்தான் தேவை. இந்துவைப் பொறுத்தவரை அவனுக்குச் செய்ய வேண்டியது எதுவுமில்லை. அவன் மனம், பழக்க வழக்கம் மற்றும் ஒழுக்க ரீதியாக மிகவும் நன்றாக இருக்கிறான் அவன் முழுமை படைத்தவன்: அவனிடம் எந்தக் குறையும் இல்லை. அவன் பாவி அல்ல.

ஆனால், உண்மை நிலவரம் என்ன? இந்துக்களிடம் எந்தக் குறையும் இல்லை; தீண்டாதோரின் துன்பங்களுக்குக் காரணம் அவர்களேதான் என்ற வாதம், யூதர்களின் துன்பங்களுக்குக் காரணம் அவர்களேதான் என்று கிறித்துவர்கள், யூதர்களுக்கு இழைத்த மனிதாபிமான மற்ற கொடுமைகளைப் பற்றிக் கேட்டால் முன்வைக்கும் எதிர்வாதத்தைப் போன்றதுதான் இது. துன்பப்படும் யூதர்களுக்காகக் கிறித்துவர்களின் வாதத்தினைத் தவிடு பொடியாக்கும் கீழ்க் கண்ட பதிலை அளித்தார்

"யூதர்களின் பிரச்சினை உண்மையில் யூதரல்லாத புறமதத்தவரான உயர்குடிப் பிரச்சினைதான் என்பதற்குச் சாதாரணமாக வீடுகளில் நடைபெறும் ஒரு நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டி அதை எப்படிப் பார்க்க வேண்டும் எனச் சொல்ல விரும்புகிறேன். எனக்குத் தெரிந்து ஒரு ஐரீஸ் கலப்பின ஐரீஸ் டெர்ரியர் நாய் இருந்தது. என் நண்பர் பேடி என்னும் அந்த நாயைத் தன்னுடைய இரு கண்களின் கருமணி போல எண்ணி வந்தார். என் நண்பரின் நாய்க்கு ஸ்காட்ச் டெர்ரியர் நாயைக் கண்டால் பிடிக்காது. ஸ்காட்ச் டெர்ரியர் நாய், அதன் அருகில், ஏன், இருபது அடி தூரத்தில் போனால், கூட போதும் ஐரீஸ் டெர்ரியர்நாய் உடனே அக்கம்பக்கம் உள்ளவர்கள் காது செவிடாகும்படி குரைக்க ஆரம்பித்து விடும். சொல்லப் போனால் இந்த நாய் குரைக்கக் காரணமான ஸ்காட்ச் டெர்ரியரோ கொஞ்சமும் ஆபத்தில்லாத பிராணியாகும். அது முதலில் குரைக்க ஆரம்பிப்பதேயில்லை. என்னுடைய நண்பருக்குத் தன்னுடைய நாயின் மீது மிகுந்த பாசம் இருந்தாலும், அதனுடைய விரும்பத்தகாத நடத்தைக்குக் காரணம் அதனுடைய குறையேதான் என்று என் நண்பரே கருதுகிறார். மாலை வேலைகளில் சாதாரணமாக மோப்பம் பிடித்துக் கொண்டு வரும் ஒரு அண்டை நாயைப் பார்த்து ஐரீஸ் டெர்ரியர் குரைக்க ஆரம்பித்தால் அதற்காக அண்டை வீட்டார்தான் தண்டிக்கப்பட வேண்டும் என்பார்களே தவிர, உண்மையான குறை என்ன என்று இதுவரை ஒருவரும் சொல்லவில்லை".

நாம், ஐரீஸ் கலப்பினமான பேடி நாயை ஓர் இந்துவுக்கும், ஸ்காட்ச் டெர்ரியர் நாயைத் தீண்டாதோருக்கும் பொருந்திப் பார்த்தோமானால் அவர்களின் வாதம் கிறித்துவர்களுக்கு எவ்வளவு பொருந்துகிறதோ, அவ்வளவுக்கு இந்துவுக்கும் பொருந்துகிறது. திரு. கோல்டிங் அவர்கள் கூறியிருப்பதிலிருந்து யூதர்களின் பிரச்சினை எந்த அளவுக்கு உண்மையில் கிறித்தவர்களின் பிரச்சினையோ அந்த அளவுக்குத் தீண்டாதோரின் பிரச்சினை அடிப்படையில் ஓர் இந்துவின் பிரச்சினையே!

தீண்டாதோரின் பிரச்சினை உண்மையில் தங்களுடைய பிரச்சினைதான் என்பதை இந்துக்கள் உண்மையில் உணருகிறார்களா? அவ்வாறு அங்கீகரிக்கிறார்களா? அவர்கள் அதைப்பற்றிக் கவலைப்படுகிறார்களா? அது அவர்கள் மனங்களில் உரைக்கிறதா? சில முடிவான பரிசோதனைகளின் வாயிலாக நாம் இந்த உண்மையைக் கண்டு பிடிக்கலாம். ஒன்று, இது சம்பந்தமாக இதுவரை பெருமளவில் வெளியாகி உள்ள புத்தகங்கள். நீக்ரோக்கள் பிரச்சினை குறித்து அமெரிக்க நாட்டில் வெளியாகியுள்ள புத்தகங்களின் எண்ணிக்கையை இதற்கு அளவுகோலாக வைத்துக் கொள்ளலாம். நீக்ரோக்கள் பிரச்சினை குறித்து அமெரிக்காவில் வெளியாகியுள்ள புத்தகங்களின்

எண்ணிக்கையை ஒருவர் பார்த்தால் மிக மிக வியப்பாக இருக்கிறது. நீக்ரோ பிரச்சினை குறித்து வெளியாகியுள்ள புத்தகங்களின் பட்டியலைப் பார்த்தால் அவை நூறாயிரக்கணக்கில் இருக்கும். இது தொடர்பான நூல்கள் உண்மையில் அளவிடமுடியாதவை. இது வெள்ளையருக்கு எவ்வளவு பெரிய பிரச்சினையாக இருக்கிறது என்பதை இந்த நூல்கள் வெளிப்படுத்துகின்றன. பல தலைமுறைகளாக இந்தப் பிரச்சினை அமெரிக்காவின் மத, ஒழுக்கவாதிகள், அரசியல் தத்துவவாதிகள், ராஜதந்திரிகள், சமூக சேவகர்கள், சமூக விஞ்ஞானிகள், அரசியல்வாதிகள், வியாபாரிகள், மற்றும் சாதாரணக் குடிமகன் அனைவரையும் பாதித்திருக்கிறது.

ஆனால், தீண்டாதோரைப் பற்றி இந்தியாவில் உள்ள புத்தகங்களின் எண்ணிக்கை என்ன? இது பற்றி அரை டஜன் துண்டுப் பிரசுரங்கள்தான் இங்குவெளியாகி உள்ளது.

இன்னொரு சோதனை, சமூக நடத்தையாகும். நான் இதற்குச் செய்தித்தாளில் வெளியிடப்பட்டுள்ள இரண்டு வழக்குகளைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 1926 மார்ச் 5-ஆந் தேதி பிரதாப் என்ற இதழில் வெளியாகியுள்ள ஒரு நிகழ்ச்சி :-

"பிப்ரவரி மாதம் 23 ந் தேதி லக்னோ, பேகம்கஞ்சில் பகல் சுமார் 11.00 மணியளவில் 12 அல்லது 13 பேர் கொண்ட குழுவினர் பூமியைத் தோண்டிக் கொண்டு இருந்தனர். அப்போது திடீரென்று சுரங்கம் சரிந்து அவர்கள் அனைவரும் மண்ணுக்குள் புதைத்து விட்டார்கள். ஒரு சிறுவனும் 6 பெண்களும் மண்ணைத் தள்ளி வெளியே எடுக்கப்பட்டதில் அவர்களில் மீர்பூரைச் சேர்ந்த ஒரே ஒரு பெண்மணி மட்டும் உயிருடன் இருந்தார். அவளுக்கும் கடுங்காயங்கள் ஏற்பட்டிருந்தன என்பதால் அவள் மிகவும் ஆபத்தான நிலையில் இருந்தாள். ஆனால், பேகம் கஞ்ச்சில் இருந்த இந்துக்கள் அந்தப் பெண்மணியைக் கிடத்தப் படுக்கை தர மறுத்து விட்டார்கள். கடைசியில் ஒரு முஸ்லீம் படுக்கை தர முன்வந்தார். ஆனால், அவளை அவள் வீட்டிற்குத் தூக்கிச் செல்ல முன் வரவில்லை. கடைசியில் ஒரு தெருக்கூட்டும் தொழிலாளி அழைத்து வரப்பட்டு அந்தத் தொழிலாளி அவளைப்படுக்கையுடன் தூக்கிச் செல்ல ஒப்புக்கொண்டார்."

தீண்டாதோரைப் பொறுத்தவரை இந்துக்களுக்கு மனசாட்சியேயில்லை என்பது 'சங்ராம்' இதழின் செய்தியாளரின் தகவலின் பேரில் 1946 ஜுலை மாதம் 10-ஆந் தேதி மேற்கண்ட இதழில் பிரசுரமாகியுள்ள கீழ்க் கண்ட நிகழ்ச்சிதான் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

"1946 -ஆம் ஆண்டு ஜுலை மாதம் 8 -ஆம் தேதி கோவாவில் மாப்சே என்ற கிராமத்தில் கிறித்துவர்களால் நடத்தப்பட்ட

'அசில்'என்னும் அனாதை ஆசிரமத்தில் இருந்த ஒரு பெண்மணி இறந்துவிட்டார். இந்து எனக் கருதப்படும் அந்தப் பெண்மணிக்கு உறவினர் இல்லை; தனியாக இருந்தார். அந்தப் பெண்மணியின் சடலத்தைப் புதைப்பதற்கும் இறுதிச் சடங்குகளைச் செய்வதற்கும் வேறு ஆட்கள் இல்லை என்பதால் கிராமத்தில் இருந்த இந்துக்கள் ஊரில் நிதி திரட்டினார்கள். பிணத்தைப் பிச்சைக்காரர் இல்லத்திலிருந்து அவர்கள் கொண்டு வரும்போது, அங்கு வந்த தீண்டாதோர் சிலர் அந்தப் பிணத்தை அடையாளம் கண்டு கொண்டார்கள். அந்தப் பெண் தீண்டாதோரைச் சேர்ந்தவள் என்று தெரிந்த மறுகணமே இந்துக்கள் பிணத்தை அப்படியே விட்டு விட்டுச் சென்றுவிட்டார்கள். தீண்டாதோர், இந்துக்கள் திரட்டி வைத்திருந்த நிதியையாவது சவப்பெட்டி வாங்குவதற்கும் பிணத்தைச் சுருட்ட த் தார்ப்பாய் வாங்குவதற்கும் கேட்டார்கள். ஆனால் இந்துக்கள், இறந்தவர் இந்து என்று சொல்லித்தான் பணம் வசூலிக்கப்பட்டதால் பணத்தைத் தர மறுத்து விட்டார்கள். அவள் இந்துவாக இல்லாமல் தீண்டாதவனாக இருப்பதால் பணத்தை அவன் இறுதிச்சடங்கிற்குச் செலவு செய்ய முடியாது என்று சொல்லி விட்டார்கள். தீண்டாதோர் தங்களால் இயன்ற அனைத்தையும் செய்து பிணத்தை ஒருவாறு புதைத்தார்கள். இவ்வாறு தீண்டாதோருக்கு இந்துக்களுக்குத் தங்கள் மீதிருந்த அன்புக்கும் பாசத்துக்கும் நல்ல சாட்சியம் கிடைத்தது."

கீழ்க் கண்ட செய்தி 'மிலாப்' என்ற செய்தித்தாளில் 1925-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2-ஆந் தேதி வெளியானதும் செய்தியாளர் கூறுகிறார்:-

"ருத்திரப் பிரயாக் என்ற ஊரில் இருந்த தர்மசாலைக்குச் செப்டம்பர் மாதத்தின் முதல் வாரத்தில் ஒரு அரிஜன் வந்ததாக ருத்திரப் பிரயாக்கிலிருந்து தகவல் கிடைத்தது. அங்கு ஒவ்வொரு நாளும் இரவு புலி வருவதாக அவருக்குத் தெரியவந்ததால் ஆசிரமத்தின் பூசாரியிடம் புலியிடமிருந்து தாம் தப்பிக்கத் தன்னை ஆசிரமத்தில் எங்காவது ஒரு மூலையில் ஒளிந்திருக்க அனுமதிக்கும்படியும் அவர் கேட்டுக் கொண்டார். ஆனால் அந்த மோசமான பூசாரி அவன் கோரிக்கை ஏற்க மறுத்து ஆசிரமத்தின் கதவுகளைப் பூட்டி விட்டான். கெட்ட நேரத்தின் காரணமாக அந்த அரிஜன் பயத்துடன் வெளியில் படுத்துக் கொண்டான். இரவின் முடிவில் புலி வந்து அந்த மனிதனைத் தாக்கியது. அந்த மனிதன் நல்ல வலிவுடன் திடகாத்திரமாக இருந்ததாலும் இடுக்கண் காரணமாக அச்சமும் இல்லாததாலும் அவன் புலியின் கழுத்தைப் பிடித்துக் கொண்டு 'நான் புலியைப் பிடித்து விட்டேன்; வந்து அதைக் கொல்லுங்கள்' என்று சத்தம் போட்டான். ஆனால் மேல் சாதியைச்

சேர்ந்த அந்தப் பூசாரி புலியைக் கொல்லவும் வரவில்லை; வேறு உதவியையும் செய்யவில்லை. வெகு விரைவில் அரிஜனின் பிடி தளர்ந்தது : புலியும் ஓடி விட்டது. தற்போது அந்த மனிதன் ஸ்ரீ நகரில் (கார்வால்) காயத்துடன் விழுந்து கிடக்கிறான். அவனுக்குச் சிகிச்சை அளிக்கிறார்கள். அவனுடைய நிலைமை மிகவும் கவலைக்குரியதாக இருக்கிறது."

இந்த நிகழ்ச்சிகளிலிருந்து இந்துக்களின் இதயமற்ற தன்மை வெளிப்படுவதோடு தீண்டாதோருக்கு அவர்கள் செய்யும் கொடுமைகளைப் பற்றியோ தீண்டாதோருக்கு என்ன நடக்கிறது என்பதைப் பற்றியோ அவர்கள் கவலைப்படுவதில்லை என்றும் தெரிகிறது.

மூன்றாவது சோதனை என்னவென்றால், தீண்டாதோரை உயர்த்து வதற்குச் செய்திடும் சேவையையும் தியாகத்தையும் அமெரிக்காவில் நீக்ரோவிற்கு அமெரிக்கர்கள் செய்த சேவை மற்றும் தியாகத்தையும் அளவுகோலாகக் கொண்டு மதிப்பிடுவதாகும்.

கீழ் வருவன சில புள்ளி விவரம்:- நீக்ரோக்களின் நலனுக்காக அமெரிக்கர்கள் அளித்துள்ள நன்கொடைகளைக் கவனிக்க:[1]

| I கொடையாளர் | தொகை (டாலர்களில்) | II கொடையாள் | தொகை (டாலர்களில்) |
|---|---|---|---|
| கேன் | 50,000 | மேஸன் | 1,00,000 |
| ஹார்ட்டன் | 5,000 | நான் பெர்ட் | 40,000 |
| டிரப்டன் | 1,60,000 | ஹாரிசன் | 2,30,000 |
| ஓட்டார்கள் | 500 | மஸ்கர் | 75,000 |
| கேம்பிரில் | 35,000 | காலாலிஸ் | 45,000 |
| ஜரப்கி | 1,000 | ராசன் பானின் | 1,000 |
| ஸ்ட்ராக் | 500 | கான்ராய் | 1,00,000 |
| கிளோடின் | 10,000 | பர்ட்டன் | 1,000 |
| உட் | 500 | கான்ராய் | 1,00,000 |
| ஹார்க்னஸ் | 12,50,000 | சென்ட் | 10,000 |
| பீட்டி | 2,90,000 | பியூக் | 1,40,000 |
| மார்க்கென்ட் | 5,000 | மார்சிலன்ட் | 5,000 |
| நியூடன் | 5,000 | மேசே | 25,000 |
| அம்மில்டன் | 25,000 | நிக்கோலஸ் | 20,000 |
| பெல்ப்ஸ் ஸ்ட்ரோகிஸ் | 2,80,000 | கார்ரெட்சன் | 15,00,000 |
| பட்டலர் | 30,000 | ஹேடீசர் | 20,000 |
| | | காட் | 10,000 |

1. நீக்ரோ இயர்புக் 1931-32 ப. 202 லிருந்து எடுத்த தகவல்படி தயாரித்த தகவல்.

இந்தத் தொகை 1930க்கு முன்னால் கொடுக்கப்பட்டதாகும். நீக்ரோக்களின் கல்வி முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப்பட்ட கல்வி நிதியையும் ஒப்பிட்டுப் பார்க்க:[1]

1) ஆவரி நிதி

2) விலாஸம் நிதி

3) ஆப்பிரிக்க நிதி

4) பக்கிங்காம் நிதி

5) ஜார்ஜ் வாஷிங்டன் கல்வி நிதி

6) மைனர் நிதி

7) ஸ்பீவர்டு மிஷினரி நிதி

8) டேனியல் கை நிதி

9) ஜான் ஸ்லேட்டர் நிதி

10) பெல்ப் ஸ்டோக்ஸ் நிதி

இதைத் தவிர கார்னிஜ் கார்ப்பரேசன் ஜுலியஸ் வால்டு நிதி, ராக்பெல்லர் பவுண்டேஷன் நிதி ஆகிய நிதியங்களின் மூலம் நீக்ரோக்களுக்கு உதவுகின்றனர். இவற்றின்மூலம் எவ்வளவு செலவழிக்கிறார்கள் என்று தெரியவில்லையாயினும் இது லட்சக் கணக்கில் இருக்கும் எனலாம்.

மத நிறுவனங்கள் நீக்ரோக்கள் நலனுக்காகச் செலவிடும் தொகையும் ஒப்பிடுவோம்:[2]

ஆண்டு செலவு (டாலர்களில்)

நீக்ரோ கல்விக்கான நிரந்தர நிதி (டாலர்களில்)

பள்ளிகளில் கல்வி வளர்ச்சிச் சாதனங்கள் முதலியவற்றுக்கு (டாலர்களில்)

அமெரிக்க பாப்டிஸ்டு ஹோம்மிஷன் போர்டு 1,16,247 15,97,700 35,94,257

நீக்ரோகளுக்கான அமெரிக்க சர்ச் (நிறுவனம் மறை மாவட்டத்திற்குட்பட்டது) 1,85,100 4,50,000 30,00,000

அமெரிக்க மிஷினரி சங்கம் 3,68,057 32,28,241 32,88,000

சர்ச் ஆப் கிரைஸ்ட், ஐக்கிய கிறித்தவ மிஷனரி சங்கம் 91,072 5,00,000

1. பார்க்க : முன்குறிப்பிட்ட 'இயர் புக்' பக். 213-18

2. முன்காட்டிய நூல், ப. 213.

அமெரிக்க இவான்ஜிலிகல் சினாட் மாநாடு வட அமெரிக்க கருப்பர் மிஷனரிபோர்டு 74,900 - 1,75,000

மெத்தாடிஸ்ட் எபிஸ்கோப்பல் சர்ச்போர்டு நீக்ரோ கல்விக்கான நிறுவனங்கள் 2,59,264 19,62,729 50,00,000

மெத்தாடிஸ்ட் எபிஸ்கோபல் மகளிர் சபை 1,04,975 - 3,60,000

பெரிபிஸ்டேரியன் சர்ச் கருப்பர்களுக்கான யூ.எஸ்.ஏ. மிஷனரிகளின் கிளை 4,05,327 19,94,032 35,60,000

ஐக்கிய பெரிபிஸ்டேரியன் சர்ச்போர்டு, சுதந்திர மனிதருக்கான மிஷன் 98,000 6,45,000 10,00,000

இதன்படி, நீக்ரோக்களின் முன்னேற்றத்திற்கு 1865 முதல் 1930 வரை மத மற்றும் சேவை நிறுவனங்கள் அமெரிக்காவில் 13,50,00,000 டாலர்கள் செலவிட்டுள்ளார்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இந்தத் தொகையில் 8,50,00,000 டாலர்கள் வெள்ளையர்கள் மட்டுமே அளித்தி ருக்கிறார்கள்.

ஆனால், தீண்டாதோர் முன்னேற்றத்திற்காக இந்துக்கள் செய்துள்ள சேவை அல்லது தியாகம் எவ்வளவு என்று சொல்லிக் கொள்ளும்படியான அளவு எங்குள்ளது? அரிஜன் சேவக் சங்கம் என்ற ஒரே நிறுவனம்தான் இத்தகைய பெருமைப்பட்டுக் கொள்ள முடியும். அதனுடைய மூல நிதி சுமார் 10 லட்சத்திற்கு மேல் போகாது. அதனுடைய ஆண்டுச் செலவு சிறிய, முக்கியத்துவமற்ற அவசியமற்ற பணிகளுக்காக, செலவிடப்படுவது சில ஆயிரம் ரூபாய்களுக்கு மேல் போகாது. மேற்கண்ட நிதி நல நிதி அன்று. அது, முக்கியமாக அரிசனங்கள் சாதி இந்துக்களுடன் வாக்களிக்க வேண்டுமென்பதற்கு உருவாக்கப்பட்ட அரசியல் நிதியாகும்.

ஏன் இந்த வித்தியாசம்? ஏன் அமெரிக்கர்கள் நீக்ரோக்களின் உயர்வுக்காக இவ்வளவு சேவையும் தியாகமும் செய்கிறார்கள். ஆனால், ஏன் இந்துக்கள் தீண்டாதோரின் உயர்வுக்காக ஒன்றுமே செய்வதில்லை? இதற்கு விடையாதெனில் அமெரிக்கர்களுக்குச் சமூக மனசாட்சி உள்ளது. ஆனால் இந்துக்களுக்கு அது இல்லை, இதனால் இந்துக்களுக்குச் சரி, தவறு - நல்லது, கெட்டது - ஒழுக்கம் அல்லது ஒழுக்கமின்மை பற்றிய உணர்வேயில்லை என்பதல்ல. ஆனால், தவறு என்னவென்றால் இதெல்லாம் இந்துக்களுக்குத் தங்களுடைய சாதியைச் சேர்ந்தவர்களிடம் மட்டும்தான் பிறக்கும், பிறரிடம் வருவதில்லை. திரு.எச். ஜே. பேட்டன் சொல்வதுபோல,

> "ஒரு மனிதன் ஒரு வரம்புக்குட்பட்ட சமூகத்தில் நல்ல உறுப்பினராக அவன் நல்லொழுக்கம் உடையவனாக இல்லாவிட்டாலும் இருக்க முடியும் என்பது தெளிவு. தன்னுடைய

வாழ்வில் தனிப்பட்ட கொள்கையைப் பின்பற்றியும் ஒரு மனிதனுக் உயர்ந்த ஒழுக்கம் குறித்த ஒரு எதிர்ப்பார்ப்பு அல்லது அதன் நிழல் உள்ளது. ஒரு மனிதன் ஒரு கட்டத்தில் விசுவாசமாக இருப்பின், அது திருடர் கூட்டமாக இருந்தாலும் அதையே நாம் நல்ல பண்பு என்று கூடக் கூறி விடுவோம். திருடர்களுக்குள் ஒருவர் கௌரவமானவராக இருப்பதாலேயே திருடர்களெல்லாம் கௌரவமானவர்கள் என்று நாம் சொல்லி விடமுடியாது. உண்மையில் ஒழுக்கமான மனிதன் என்றால் ஒரு சமூக வரம்புக்குள் மட்டுமல்ல எல்லையைக்கடந்த ஒரு சமூகத்திலும் நல்லவனாக இருக்க வேண்டும். பல்வேறு சமூகங்களை உள்ளடக்கிய ஒரு சமூகத்திலும் அதுவும், பல நோக்கங்களை, அந்தச் சமூகத்திற்கப்பால் வேறு முரண்பட்ட கடமைகள் கொண்ட சமூகமே ஆயினும் அங்கும் ஒழுக்கமானவனாக இருக்க வேண்டும்."

தீண்டப்படாதவன் ஒருவன் இந்துக்களின் சமூகத்தைச் சேர்ந்தவன் அல்ல. இந்துக்களும் தீண்டப்படாதவரைத் தங்கள் சமூகத்தைச் சேர்ந்தவராகக் கருதுவதில்லை. இதனால்தான் ஒரு இந்துவின் நடத்தை, ஒழுக்கத்தைப் பற்றிய கவலையற்றதாக இருக்கிறது.

இந்த மனச்சாட்சி இல்லாததால் ஓர் இந்துவுக்குப், பிறருக்கு இழைக்கப்டும் அநியாயங்கள், அநீதிகள் ஆகியவற்றால் ஏற்படும் துன்பம் குறித்து ஒரு நியாயமான கோபம் ஏற்படுவதில்லை. இந்த அநீதிகள், அநியாயங்கள், தீண்டப்படாதவருக்கு இழைக்கப்படுவது தவறு என்று அவன் கருதுவதில்லை. இந்த மனசாட்சி இல்லாததால் தீண்டாமையை ஒழிக்கும் பாதையில், இந்து ஒரு பெரிய தடைக் கல்லாக இருக்கிறான்.

□□□

1. 'காங்கிரசும் காந்தியும் தீண்டாதோருக்குச் சாதித்தது என்ன?' என்னும் என் நூலைப் பார்க்க :

## இயல் - 11

### *இந்துவும், சாதியில் அவரது நம்பிக்கையும்*

இந்து சமூகச் சீர்திருத்தவாதிகளில் மிதவாதிகளான பிரிவு ஒன்று உள்ளது. இந்தப் பிரிவினர், தீண்டாமை என்பது சாதி முறையிலிருந்து தனியானது என்று கருதுகிறார்கள். இந்தக் கருத்தைப் பின்பற்றி இவர்கள் சாதி முறையைத் தாக்காமலே தீண்டாமையை ஒழித்துவிட முடியும் என்று கருதுகிறார்கள். சமயப் பற்றுள்ள இந்து, சாதி முறையை ஒழிப்பதற்கு எதிராக இருப்பது போலவே தீண்டாமையை ஒழிப்பதற்கும் எதிராக இருக்கிறார். சமூகச் சீர்திருத்தத்தை ஒரே கட்டமாக நடத்துவதை எதிர்ப்பதைப் போலவே இரண்டு கட்டமாக நடத்துவதையும் அவர் எதிர்க்கிறார். ஆனால், அரசியல் ஈடுபாடு கொண்ட இந்துவுக்கு இந்தக் கருத்து மிகவும் பிடித்திருக்கிறது. இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. முதலாவதாக, இந்து, தாம் உண்மையில் இருப்பதைவிட மிகச் சிறந்த ஜனநாயகவாதி என்று சர்வதேச அரங்கில் காட்டிக் கொள்வதற்கு இது வாய்ப்பளிக்கிறது. இரண்டாவதாகச், சாதியை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டால் சாதி இந்துக்கள் காங்கிரசைக், கைவிட்டுவிடும் அபாயம் இருக்காது.

சாதி முறைக்குத் தீங்கு இல்லாமல் தீண்டாமையை ஒழிக்க விரும்புவோர், மனு ஸ்மிருதி பத்தாம் அத்தியாயம் நான்காம் சுலோகத்தைத் தங்கள் கருத்துக்கு ஆதாரமாகக் கொள்கிறார்கள். இந்தச் சுலோகத்தில் மனு, நான்கு வருணங்கள்தான் உண்டு என்றும், ஐந்தாவது வருணம் இல்லை என்றும் கூறுகிறார். இந்தச் சுலோகத்தின் படித்,

தீண்டப்படாதவர்கள் நான்காம் வருணத்தில் சேர்க்கப்பட்டுள்ளனர் என்றும், அவர்கள் சூத்திரர்களில் ஒரு பகுதியினர் என்றும், சூத்திரர்களைத் தொடுவதற்குத் தடை இல்லாததால் தீண்டபடாதவர்களைத் தொடுவதற்குத் தடை இருக்க முடியாது என்றும் பொருள் கூறப்படுகிறது. அரசியல் ஈடுபாடு உள்ள இந்துவுக்கு இவ்வாறு பொருள் கூறுவது மகிழ்ச்சி யளிப்பதாயிருந்தாலும், இது மனு கூற விரும்பும் கருத்துக்குப் பொருந்துவதாயில்லை. இந்தச் சுலோகத்துக்கு மற்றொரு விதமாகவும் பொருள் கூற முடியும். நான்கு வருணங்களுக்கு வெளியே உள்ள இந்தச் சமுதாயங்களை, ஐந்தாம் வருணமாக ஏற்றுக்கொண்டு, சதுர்வர்ண முறையைப் பஞ்சவர்ணமுறையாக விரிவுபடுத்த மனு தயாராயில்லை என்பதும் இதன் பொருளாக இருக்கமுடியும். ஐந்தாம் வருணம் இல்லை என்று அவர் கூறுவதன் பொருள், இந்த சமுதாயம் நான்கு வருணங்களுக்குப் பதில் ஐந்து வருணங்களைக் கொண்டதாகச் செய்வதன் மூலம், நான்கு வருணங்களுக்கு வெளியில் உள்ள மக்களை இந்துச் சமுதாயத்தில் இணைத்துவிட விரும்பவில்லை என்பதேயாகும். அவர் கூற விரும்பிய கருத்து இதுதான் என்பது, "பாஹ்யர்கள் "[1] அல்லது "வர்ண பாஹ்யர்கள்" என்ற ஒரு பிரிவைப் பற்றி அவர் பேசுவதிலிருந்து மிகத் தெளிவாகத் தெரிகிறது. எல்லா மக்களையும் நான்கு வருணங்களுக்குள் சேர்த்துக் கொள்ள மனு விரும்பியிருந்தால் சிலரை "வர்ண பாஹ்யர்கள்" என்று பேசக் காரணம் இல்லை. உண்மையில் வர்ண பாஹ்யர்களில் இரண்டு உட்பிரிவுகளை அவர் குறிப்பிடுகிறார். இந்த உட்பிரிவுகளை "ஹீனர்கள்"[2] என்றும் "அந்த்யேவாசின்கள்"[3] என்றும் அவர் அழைக்கிறார். இந்த உண்மைகளை வைத்துப் பார்க்கும் போது மனு ஸ்மிருதி சுலோகத்துக்குக் கூற முயலும் பொருள், தீவிர சமயப்பற்றுள்ள இந்துவை ஏமாற்றிவிட முடியாது. தீண்டாமையைப் பின்பற்றுவது மனுஸ்மிருதிக்கு முரணானது என்றும், அதை ஒழிப்பது இந்து சமயக் கோட்பாடுகளுக்கு முரணானது அல்ல என்றும் அவர் ஏற்றுக்கொள்ளமாட்டார்.

மனு ஸ்மிருதிக்கு இவ்வாறு பொருள் கூறி எடுத்துவைக்கப்படும் வாதம், கல்வியறிவில்லாத சாதாரண இந்துவுக்குப் புரியாத அளவுக்கு அறிவு நுட்பமானது. அவருக்குத் தெரிந்தது, சமூக உறவுகளில் தாம் பின்பற்ற வேண்டிய மூன்று தடைகள் உள்ளன என்பதே. இந்தத் தடைகள் : (1) சேர்ந்து உண்ணக்கூடாது என்ற தடை, (2) கலப்புத் திருமணம் செய்யக்கூடாது என்ற தடை, (3) சில வகுப்பு மக்களைத் தொடக்கூடாது என்ற தடை. முதல் இரண்டு தடைகளும் சாதிப்பிரிவினையாகும்; மூன்றாவது தடை தீண்டாமையாகும். சாதி

1. மனு X.28 2. மனு X.31 3. மனு X.39.

இந்துவுக்குத் தடைகளின் எண்ணிக்கை பற்றிக் கவலையில்லை. தடைகளைப் பின்பற்றி நடக்கவேண்டும் என்பதில் அவர் குறியாயிருக்கிறார். தடையைப் பின்பற்ற வேண்டாம் என்று அவரிடம் கூறினால், ஏன் வேண்டாம் என்று அவர் திருப்பிக் கேட்கிறார். அவருடைய வாதம் இதுதான்: முதல் இரண்டு தடைகளையும் நான் பின்பற்றலாம் என்றால், மூன்றாவது தடையைப் பின்பற்றுவதில் என்ன தவறு ? உளவியல் ரீதியாக சாதியும் தீண்டாமையும் ஒரே கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்த ஒரே ஒருங்கிணைந்த முறைமை ஆகும். சாதி இந்துக்கள் தீண்டாமையைப் பின்பற்றுகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர்கள் சாதியில் நம்பிக்கை வைத்திருப்பதேயாகும்.

இந்தக் கருத்தை வைத்துப் பார்த்தால், சாதி முறையை அழிக்காமல் தீண்டாமையை ஒழிக்கலாம் என்று நம்புவது சற்றும் பயனற்றது. சாதியும் தீண்டாமையும் வெவ்வேறானவை என்ற கருத்து தவறானது. இரண்டும் ஒன்றை விட்டு மற்றது பிரிக்க முடியாதவை. சாதி முறையின் நீட்சியே தீண்டாமை. இரண்டும் பிரிந்து நிற்கமுடியாது. இரண்டும் சேர்ந்தே நிற்கின்றன, சேர்ந்தே தான் வீழும்.

சட்டத்தின் மூலமான அல்லது பகுத்தறிவு ரீதியான யுக்திகளால் தீண்டாமை மறைந்துவிடாது என்பதற்கு மற்றொரு காரணம் உள்ளது. ஏற்கெனவே குறிப்பிட்டபடி இந்து சமூக அமைப்பு படிப்படியான சமத்துவமின்மை என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளது. இந்தக் கோட்பாட்டின் முக்கியத்துவத்தைப் பலர் உணரவில்லை என்றால் அது மிகையல்ல. சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பு, படிப்படியான சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. முன்னது பலவீனமானது, தன்னைத்தானே பாதுகாத்துக்கொண்டு நிலைக்கும் திறன் இல்லாதது. ஆனால், பின்னது தன்னைத்தானே பாதுகாத்துக்கொண்டு நிலைக்கும் திறன் கொண்டது. சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பில் கீழ்நிலைப் பிரிவுகள் ஒன்று சேர்ந்து அமைப்பைக் கவிழ்த்து விடமுடியும். அவற்றில் எதற்கும் அந்த அமைப்பைப் பாதுகாப்பதில் விருப்பம் கிடையாது. படிப்படியான சமத்துவமின்மை உள்ள அமைப்பில், பாதிக்கப்பட்ட பிரிவுகள் சேர்ந்து பொதுவான தாக்குதல் நடத்தும் வாய்ப்புக்கு இடமேயில்லை. இத்தகைய அமைப்பில் பாதிக்கப்பட்ட பிரிவுகள் பொதுவான நிலையில் இல்லை. உயர்ந்தது, தாழ்ந்தது என்ற நிலைகள் மட்டும் உள்ளபோதுதான் இவ்வாறு இருக்கமுடியும். படிப்படியான சமத்துவமின்மை முறையில் மிக உயர்ந்தவர்கள் (பிராமணர்கள்) உள்ளனர். அவர்களுக்குக் கீழே, சற்று அதிகம் உயர்ந்தவர்கள் (சத்திரியர்கள்) உள்ளனர். அவர்களுக்குக் கீழே, உயர்ந்தவர்கள் (வைசியர்கள்) உள்ளனர். அவர்களுக்குக் கீழே,

தாழ்ந்தவர்கள் (சூத்திரர்கள்) உள்ளனர். அவர்களுக்குக் கீழே, அதிகம் தாழ்ந்தவர்கள் (தீண்டப்பாடதவர்கள்) உள்ளனர். இவர்கள் அனைவருமே மிக உயர்ந்தவரிடம் மனத்தாங்கல் கொண்டவர்கள்தாம்; அவர்களைக் கீழே வீழ்த்திவிட விருப்பம் உள்ளவர்கள்தான். ஆனால், அவர்கள் ஒன்று சேரமாட்டார்கள். சற்று அதிகம் உயர்ந்தவன் மிக உயர்ந்தவனை ஒழித்துவிட ஆவலாயிருக்கிறான்; ஆனால் அவன், உயர்ந்தவனுடனும் தாழ்ந்தவனுடனும் மிகத் தாழ்ந்தவனுடனும் சேர விரும்பவில்லை; அவர்கள், தன்னுடைய நிலையை அடைந்து தனக்குச் சமம் ஆகிவிடுவார்கள் என்று அவன் நினைக்கிறான். உயர்ந்தவன் தனக்கு மேலே உள்ளவனான சற்று அதிகம் உயர்ந்தவனை வீழ்த்திவிட விரும்புகிறான்; ஆனால், அவன் தாழ்ந்தவனுடனும் மிகத்தாழ்ந்தவனுடனும் சேர விரும்பவில்லை; அவர்கள் தனது அந்தஸ்துக்கு உயர்ந்து தன்னுடன் சமநிலைபெற்றுவிடுவார்கள் என்று அவன் நினைக்கிறான். தாழ்ந்தவன், மிக உயர்ந்தவனையும், சற்று அதிகம் உயர்ந்தவனையும், உயர்ந்தவனையும் கீழே தள்ளிவிட விரும்புகிறான்; ஆனால் அவன் மிகத் தாழ்ந்தவனுடன் கூட்டுச் சேரமாட்டான். மிகத் தாழ்ந்தவன் அந்தஸ்தில் உயர்ந்து தனக்குச் சமம் ஆகிவிடுவான் என்று அவன் அஞ்சுகிறான். படிப்படியான சமத்துவமின்மை உள்ள அமைப்பில், சமூகக் கட்டமைப்பின் அடித்தளத்தில் உள்ள பிரிவைத் தவிர முற்றிலுமாக உரிமைகள் இல்லாதவர்கள் என்று எந்த வகுப்பும் இல்லை. மற்ற வகுப்புக்கூட, மிகத் தாழ்ந்த வகுப்புடன் ஒப்பிடும் போது, ஓரளவு உரிமைகள் பெற்றுள்ளது. ஒவ்வொரு வகுப்புக்கும் உரிமைகள் இருப்பதால், இந்தச் சமூக அமைப்பைப் பராமரிப்பதில் ஒவ்வொரு வகுப்புக்கும் அக்கறை இருக்கிறது.

தீண்டாமை, தீண்டப்படாதவர்களுக்கு ஒரு சாபமாயிருக்கலாம். ஆனால், இந்துக்களுக்கு ஒரு வரப்பிரசாதமே என்பதில் சந்தேகம் இல்லை. தங்களைவிடத் தாழ்ந்தவர்களாகக் கருதுவதற்கு ஒரு வகுப்பை, அது அவர்களுக்குக் கொடுக்கிறது. யாருமே முக்கியமானவர்களாயில்லாத ஒரு அமைப்பை இந்துக்கள் விரும்பவில்லை. எல்லோருமே முக்கியமானவர்களாக உள்ள அமைப்பையும் அவர்கள் விரும்பவில்லை. தாங்கள் முக்கியமானவர்களாகவும் மற்றவர்கள் முக்கியமில்லாதவர்களுமாக உள்ள ஓர் அமைப்பை அவர்கள் விரும்புகிறார்கள். தீண்டப்படாதவர்கள் முக்கியமில்லாதவர்கள். இது, இந்துக்களை முக்கியமானவர்கள் ஆக்குகிறது. தீண்டாமை முறை இந்துவின் இயல்பான பெருமை உணர்வுக்குத் தீனிபோட்டு, அவர்கள் தங்களைப் பெரியவர்களாக நினைக்கவும், பெரியவர்களாக காட்டவும் உதவுகிறது. இந்துக்கள், முக்கியமாகச் சிறியவர்களாக இருக்கும் பெரிய

பெரும்பான்மை மக்கள், தீண்டாமை முறையைக் கைவிடும் வாய்ப்பு ஏன் இல்லை என்பதற்கு இது மற்றொரு காரணமாகும்.

இந்து சமூக அமைப்பு முழுவதும், குறிப்பாக, சாதி முறை ஒழிந்தால் தான் தீண்டாமை மறையும். இது முடியுமா? ஒவ்வொரு அமைப்பு முறையும் ஏதேனும் ஒரு அங்கீகாரத்தை ஆதாரமாகக் கொண்டு இயங்குகிறது. ஓர் அமைப்பு முறைக்கு இவ்வாறு உயிர்ச் சக்தி அளிக்கும் அங்கீகாரங்கள் மூன்று வகைப்படும். அவை சட்ட, சமூக, சமய அங்கீகாரங்கள் ஆகும். அமைப்பு முறையின் உயிராற்றல் இந்த அங்கீகாரத்தின் தன்மையைப் பொறுத்தே அமைகிறது. சாதி முறையின் பின்னே உள்ள அங்கீகாரத்தின் தன்மை என்ன ? துரதிர்ஷ்டவசமாகச், சாதி முறையின் பின்னே உள்ள அங்கீகாரம் சமய அங்கீகாரம் ஆகும். வர்ண முறையின் புதிய வடிவமான சாதி முறை, தனது அங்கீகாரத்தை இந்து சமயத்தின் புனித நூலாகவும், தவறுதல் அற்றதாகவும் உள்ள வேதங்களிலிருந்து பெறுகிறது. 'துரதிர்ஷ்டவசமாக' என்று நான் கூறுவதற்குக் காரணம், சமய அங்கீகாரம் பெற்ற எதுவும், புனிதமானதாகவும் நிரந்தரமானதாகவும் ஆகிவிடுகிறது என்பதே. இந்துவுக்குச் சாதி புனிதமானது, நிரந்தரமானது. சாதி மறைந்துபோக முடியாது என்றால், தீண்டாமை ஒழிந்து போகும் என்ற நம்பிக்கைக்கு இடம் ஏது?

□□□

# பகுதி IV

## தீண்டாதவர்கள் எதிர்கொள்ள வேண்டியிருப்பவை

# இயல் 12

## நிர்வாகத்தின் எதிர்பபு நிலை

இந்திய தண்டனைச் சட்டத்தின் பிரிவு - 2 பின்வருமாறு உள்ளது:

"இந்தச் சட்டத்தின் ஷரத்துக்களுக்கு முரணான செய்கை அல்லது செய்யாமை என்ற குற்றத்தை பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் புரியும் ஒவ்வொருவரும் இந்தச் சட்டத்தின்படி தண்டனைக்குள்ளாவார்கள்; வேறு எதன்படியும் அல்ல."

குற்றச் சட்டத்தின் வரைவைத் தயாரித்த சட்ட ஆணையர்கள் பிரிட்டிஷ் அமைச்சருக்கு எழுதிய தந்துரையில் "ஒவ்வொருவரும்" என்ற சொல்லைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டுவது அவசியம் என்று கருதினார்கள். அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளனர்:

"இந்தச் சட்டத்தின் செயல்பாட்டிலிருந்து, கம்பெனியின் நிலப்பகுதிகளில் வசிக்கும் புராதன இந்திய அரச குடும்பங்களுக்கு விலக்களிக்க நாங்கள் யோசனை கூறவில்லை. அப்படி ஏதேனும் விலக்களிக்க வேண்டுமா என்பதை நாங்கள் தீர்மானிக்க விரும்பவில்லை. இதைத் தீர்மானிப்பதற்கு இப்போதுள்ள ஒப்பந்தங்கள், இந்த ஒப்பந்தங்கள் புரிந்து கொள்ளப்பட்டுள்ள தன்மைகள், நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் வரலாறு, அந்தந்தக் குடும்பங்களின் மனப்போக்கு, அதிகாரம், அந்தக் குடும்பங்களிடம் மக்களுக்கு உள்ள உணர்வுகள் ஆகியவற்றைப் பற்றி எங்களுக்குத் தெரிந்துள்ளதை விட மேலும் அதிகத் தெளிவாக விவரங்கள் தெரிய

வேண்டும். ஆனால், ஒன்று மட்டும் நாங்கள் கூற விரும்புகிறோம் - இத்தகைய விலக்கு ஒவ்வொன்றும் தீமையாகும். எந்த ஒரு மனிதனும் சட்டத்துக்கு மேலானவனாக இருப்பது ஓர் உயர்ந்த விரும்பத்தக்க சிறப்பு என்ற கருத்தை மக்களிடையே ஏற்படுத்துவது இதைவிடப் பெரிய தீமை. இத்தகைய உரிமைகள் எவ்வளவு அதிக காலத்துக்கு நீடிக்கின்றனவோ அந்த அளவுக்கு அவற்றை நீக்குவது கடினம். இவற்றை விலக்குவதற்குத் தகுந்த வாய்ப்பு பல்வேறு இனங்களையும் மதங்களையும் சேர்ந்த மக்கள் அனைவருக்கும் பொதுவான சட்டம் ஒன்றை அரசு அறிவிக்கும் சமயமே ஆகும். சம நீதியின் நன்மைகளுக்கெதிராகச் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு, பகிரங்க வாக்குறுதி ஏதேனும் அளிக்கப்பட்டிருந்தால் அதைத் தவிர வேறு எதுவும் இருக்க முடியாது."

சமநீதி என்ற கோட்பாடு, நிறுவப்பட்ட முறைமைக்குச் சாவுமணி அடித்திருக்கும் என்று நினைக்கக்கூடும். உண்மையில், நிறுவப்பட்ட முறைமைக்குத் தீங்கு எதுவும் ஏற்படவில்லை என்பது மட்டுமின்றி, அது தொடர்ந்து எப்போதும் போலச் செயல்பட்டு வருகிறது. சமநீதிக் கோட்பாட்டுக்குப் பலன் ஏதும் இல்லாமற்போனது ஏன் என்று கேட்கலாம். இதற்கு விடை கூறுவது எளிது. சமநீதிக் கோட்பாட்டை அறிவித்து விடலாம்; ஆனால் அதைப் பலனுள்ளதாக்குவது வேறு விஷயம். சமநீதிக் கோட்பாடு பலனுள்ளதாக இருக்கிறதா இல்லையா என்பது, இந்தக் கோட்பாட்டைப் செயல்படுத்தும் அரசு நிர்வாக சேவையின் தன்மையைப் பொறுத்தது. சிவில் நிர்வாகம் தன்னுடைய வகுப்புப் பாரபட்ச மனப்பான்மை காரணமாக நிறுவப்பட்ட முறைமைக்கு நண்பனாகவும், புதிய முறைமைக்குப் பகைவனாகவும் இருந்தால், புதிய முறைமை உருவாகவே முடியாது. புதிய முறைமை வெற்றி பெறுவதற்கு அதற்கு இசைவான சிவில் நிர்வாகம் தேவை என்பதை 1871-இல் பாரிஸ் கம்யூன் உருவானபோது கார்ல் மார்க்ஸ் உணர்ந்திருந்தார். லெனின், சோவியத் கம்யூனிசத்தை உருவாக்கிய போது அதையே பின்பற்றினார். துரதிர்ஷ்டவசமாக, பிரிட்டிஷ் அரசாங்கம் அரசுப் பணி அதிகாரிகளைப் பற்றிக் கவலைப்படவேயில்லை. உண்மையில் சமத்துவக் கோட்பாட்டுக்கு இடமேயில்லாத பழைய முறைமையில் நம்பிக்கை கொண்ட வகுப்பினருக்கு நிர்வாகத்தின் கதவுகள் திறந்துவிடப்பட்டன. இதன் விளைவாக, இந்தியாவின் ஆட்சி, பிரிட்டிஷாரிடம் இருந்தாலும் நிர்வாகம் இந்துக்களால் நடத்தப்பட்டது. அரசுப் பணியில் உள்ளவர்கள் பற்றிய சில புள்ளி விவரங்களைப் பார்த்தால் இந்த உண்மை தெளிவாகப் புலனாகும்.

இந்தியாவின் தலைநகர் முதல், கிராமம் வரை நிர்வாகம் முழுவதுமே இந்துக்களின் பிடியில் உள்ளது. நிர்வாகத்தின் எல்லாப் பிரிவுகளிலும் எல்லாம் வல்ல இறைவனைப்போல் பரவி நிறைந்து, அதன் எல்லா மூலை

முடுக்குகளிலும் அதிகாரம் பெற்றுள்ளவர்கள் இந்துக்கள். பழைய முறைமைக்கு எதிர்ப்பாக உள்ளவர்கள் எவரும் தப்பிக்க வழியே கிடையாது. எந்தத் துறையாக இருந்தாலும், வருவாய்த் துறை, காவல் துறை அல்லது நீதித்துறை என்ற எதுவானாலும், எல்லாவற்றிலும் இந்துக்களே பணியில் உள்ளனர். அரசின் இந்து அலுவலர்கள் தவறாமல் அளிக்கின்ற ஆதரவினால் தான், நிறுவப்பட்ட முறைமை தொடர்ந்து நிலைபெற்றுள்ளது. இந்து அதிகாரிகள், விஷயங்களின் தன்மையை மட்டும் பார்த்து நிர்வாகத்தை நடத்தவில்லை. அவர்கள், சம்பந்தப்பட்ட தரப்புகளைக் கருத்தில் கொண்டு நிர்வாகத்தை நடத்துகிறார்கள். அவர்களின் கோட்பாடு எல்லோருக்கும் சமநீதி என்பதல்ல. நீதி அளிப்பதில் அவர்களின் கோட்பாடு நிறுவப்பட்ட முறைமைக்கு இணக்கமாக உள்ளது. நிர்வாகத் துறையில் தீண்டப்படாதவர்களிடம் அரசு அலுவலர்கள் காட்டும் மனப்பான்மை இதைத் தெளிவாகக் காட்டுகிறது.

தீண்டப்படாதவர் ஒவ்வொருவரும் அறிந்துள்ள உண்மை இது தீண்டப்படாதவர் ஒருவர் காவல் துறை அதிகாரி ஒருவரிடம் புகார் கொடுக்கச் சென்றால், அவர் பாதுகாப்புப் பெறுவதற்குப் பதிலாக வசைமொழி தான் பெறுவார். அவருடைய புகார் பதிவுசெய்யப்பட மாட்டாது; அல்லது தீங்கிழைத்த தீண்டத்தக்கவர் தப்பித்துக் கொள்ள வழி இருக்குமாறு பொய்யான முறையில் பதிவு செய்யப்படும். அவர், தமக்குத் தீங்கு செய்தவர்கள் மீது மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தால் வழக்கு என்னவாகும் என்பதை முன்கூட்டியே சொல்லிவிட முடியும். தீண்டப்படாதவர் ஒருபோதும் இந்துக்களைச் சாட்சிகளாகப் பெறமுடியாது. அவருடைய வழக்கு எவ்வளவு நியாயமானதாயிருந்தாலும் அதற்கு ஆதரவளிக்கக்கூடாது என்று இந்துக்கள் சதி செய்து விடுவதுதான் இதற்குக் காரணம். அவர் தீண்டப்படாதவர்களைச் சாட்சியாகக் கொண்டு வந்தால் மாஜிஸ்ட்ரேட் அவர்களின் சாட்சியத்தை ஏற்கமாட்டார். அவர்கள் சொந்த அக்கறையுள்ளவர்கள் என்றும், சுயேச்சையான சாட்சிகள் அல்ல என்றும் அவர் எளிதாகக் கூறிவிடமுடியும். அல்லது, அவர்கள் சுயேச்சையான சாட்சிகளாயிருந்தாலும், தீண்டப்படாதவர்களின் சாட்சியம் தமக்கு உண்மையாகத் தோன்றவில்லை என்று கூறி அவர், குற்றம் சாட்டப்பட்டவரை விடுவித்துவிட முடியும். உயர்நீதி மன்றம், தமது தீர்ப்பை மாற்றிவிடாது என்று அவருக்கு நிச்சயமாகத் தெரியும். ஆதலால் அச்சமின்றி இவ்வாறு விடுவிக்க முடியும். தாம் நேரில் பார்த்து அவரது நடத்தையை மதிப்பிடுவதற்கு வாய்ப்பு இல்லாத ஒரு சாட்சியின் சாட்சியத்தை வைத்து மேல்நிலை நீதிபதி, விசாரணை நீதிபதியின் தீர்ப்பை மாற்றக்கூடாது என்பது நன்கு நிலைபெற்ற விதியாக உள்ளதால் தமது தீர்ப்பு மாற்றப்படாது என்று அவருக்கு நிச்சயமாகத் தெரியும்.

இத்தகைய பாரபட்சம் இருக்கிறது என்பதை இப்போது காங்கிரஸ்காரர்கள் கூட ஒப்புக்கொண்டுள்ளனர். தமிழ்நாடு ஹரிஜன சேவக் சங்கத்தின் 1937 செப்டம்பர் 30-ஆம் தேதியுடன் முடிவடைந்த ஆண்டுக்கான ஆண்டறிக்கை பின்வருமாறு கூறுகிறது:[1]

"காவல் துறையினரின் ஆட்சியே நடைபெறும் தொலைதூரமான கிராமங்களிலும் ஹரிஜனங்களிடம் தங்கள் உரிமைகள் பற்றி அரசியல் விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது என்றாலும், ஹரிஜன், இதைச் செய்வது எப்போதுமே சாத்தியமாகிவிடுவதில்லை. ஹரிஜன் தமது உரிமையை வலியுறுத்துவதென்றால் அவருக்கும், மேல் சாதியினருக்கும் இடையே மோதல் என்று ஆகிவிடுகிறது. இதில் பின்னவருடைய கைதான் எப்போதும் ஓங்கியிருக்கிறது. இந்த மோதலின் விளைவாகக் காவல் துறையிடம் அல்லது மாஜிஸ்ட்ரேட்டிடம் புகார் செய்யவேண்டியாதாகிறது. மாஜிஸ்ட்ரேட்டிடம் புகார் செய்வது ஹரிஜனின் சக்தி அப்பாற்பட்டது. காவல்துறையினரிடம் புகார் செய்வது ஒன்றுக்கும் உதவாததாக உள்ளது. பல வழக்குகளில் புகார்கள் பற்றிப் புலன் விசாரணையே நடத்தப்படுவதில்லை; மற்றும் பலவற்றில், மேல் சாதியினருக்குச் சாதகமான முடிவு எழுதப்படுகிறது. காவல் துறையினரிடம் நாங்கள் கொடுக்கும் புகார்களுக்கும் இதே கதிதான் ஏற்படுகிறது. கீழ்நிலையில் உள்ள காவல் துறையினரின் மனப்பான்மையில் மாற்றம் ஏற்படாததுதான் இந்த நிலைமைக்குக் காரணம். ஹரிஜனின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய அவர், அந்த உரிமைகள் இருப்பதையே அறியாதவராக உள்ளார், அல்லது அவர், மேல் சாதியினரின் செல்வாக்குக்கு உட்பட்டு நடக்கிறார். அல்லது அவர் முற்றிலும் அலட்சியமாக இருக்கவும் கூடும். வேறு சந்தர்ப்பங்களில் அவர் லஞ்சம் பெற்றுக் கொண்டு பணக்காரர்களான மேல் சாதியினருக்குச் சாதகமாக நடக்கிறார்."

இந்து அரசு அலுவலர் எவ்வாறு தீண்டப்படாதவருக்கு விரோதமாகவும், இந்துவுக்குச் சாதகமாகவும் உள்ளார் என்பதை இது காட்டுகிறது. அவருக்கு எப்போது அதிகாரம் இருந்தாலும், அது, தீண்டப்படாதவருக்கு எதிராகவே செயல்படுத்தப்படுகிறது.

காவல் துறையினரும் மாஜிஸ்ட்ரேட்டும் சில சமயம் லஞ்சப் பேர்வழிகளாக உள்ளனர். லஞ்சம் வாங்குவோராக மட்டும் இருந்தால் நிலைமைகள் ஒருவேளை இவ்வளவு மோசமாக இல்லாமலிருக்கக்கூடும்; ஏனென்றால், இருதரப்பினரில் யார் வேண்டுமானாலும் அவரை விலைக்கு வாங்கிவிடமுடியும். ஆனால் துரதிர்ஷ்டம் என்னவென்றால்,

1. 1938 மார்ச் 7-ஆம் "ஹிந்து" பார்க்கவும்.

காவல் துறையினரும் மாஜிஸ்ட்ரேட்டுகளும் லஞ்சப் பேர்வழிகள் என்பதைவிட, அதிகமாக பாரபட்சக்காரர்களாக உள்ளனர். அவர்கள் இவ்வாறு இந்துக்களிடம் பாரபட்சமாகவும் தீண்டப்படாதவர்களிடம் பகைமை உணர்வுடனும் நடப்பதால் தான் தீண்டப்படாதவர்களுக்குப் பாதுகாப்பும் நீதியும் மறுக்கப்படுகின்றன. இந்தப் பாரபட்சத்தையும் பகைமை உணர்வையும் மாற்றுவதற்கு வழியே இல்லை. ஏனென்றால், ஒவ்வொரு இந்துவிடமும் பிறப்பிலேயே உள்ளமைந்துள்ள சமூக, சமய வெறுப்புணர்வு அதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது. காவல் துறையினரும் மாஜிஸ்ட்ரேட்டுகளும் தங்களுடைய நோக்கங்கள், அக்கறைகள், வளர்க்கப்பட்ட முறை ஆகியவை காரணமாகத் தீண்டப்படாதவர்களிடையே செயல்படும் உயிர்ச் சக்தியிடம் அனுதாபம் கொள்வதில்லை. தீண்டப்படாதவர்களை இயக்கிவைக்கின்ற தேவைகள், வேதனைகள், ஆசைகள், விருப்பங்கள் ஆகியவை, அவர்களின் உள்ளங்களில் ஊடுருவி நிற்கவில்லை. இதன் விளைவாக, அவர்கள் தீண்டப்படாதவர்களின் நாட்டங்களுக்கு பகிரங்கமாக எதிர்ப்பும் விரோதமும் காட்டுகிறார்கள்; அவர்களின் நன்மைக்கு உதவாமல் பாதகமாக நடந்து கொள்கிறார்கள்; அவர்களிடம் பெருமை உணர்வையும் சுயமரியாதையையும் காட்டுவது போலத் தோன்றும் எதையும் சினந்து பேசுகிறார்கள். மறு புறத்தில், அவர்கள் இந்துக்களின் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்கிறார்கள்; தீண்டப்படாதவர்கள் மீது தங்களுடைய அதிகாரத்தையும், பெருமையையும் கௌரவத்தையும் நிலைநிறுத்துவதற்கு அவர்கள் செய்யும் முயற்சிகளில் அனுதாபம் காட்டுகிறார்கள். இவ்விரண்டு பிரிவினருக்கும் இடையே போராட்டம் எதுவும் ஏற்படும்போது அவர்கள் இந்துக்களின் ஏஜெண்டுகளாக நடந்துகொண்டு தீண்டப்படாதவர்களின் கிளர்ச்சியை ஒடுக்குகிறார்கள். தீண்டப்படாதவர்களுக்குப் பாடம் கற்பித்து அவர்களை அவர்களுடைய இடங்களிலேயே தாழ்த்திவைப்பதற்கு எல்லா இந்துக்களும் நேர் வழிகளிலும் மோசடி வழிகளிலும் செய்யும் முயற்சிகளில் அவர்கள் பகிரங்கமாகவும் சிறிதும் வெட்கமில்லாமலும் கலந்து கொள்கிறார்கள்.

இதில் மிகவும் மோசமான அம்சம் என்னவென்றால், இந்த அநியாயங்கள், கொடுமைகள் எல்லாவற்றையும் சட்டத்தின் வரம்புக்குள்ளேயே செய்ய முடிகிறது என்பதுதான். ஒரு இந்து, தாம் தீண்டப்படாதவரை வேலைக்கு வைத்துக் கொள்ள முடியாது என்றும், அவருடைய கால்நடைகளைத் தமது வயல் வழியாக இட்டுச் செல்ல அனுமதிக்க முடியாது என்றும், அவரைத் தமது நிலத்திலிருந்து வெளியேற்றிவிடுவேன் என்றும் தாராளமாகக் கூறமுடியும் இவற்றில் ஒன்றுமே சட்டத்துக்குச் சற்றுக்கூட முரணானதல்ல. இவ்வாறெல்லாம் அவர் கூறும்போது தமது உரிமையைத்தான் கூறுகிறார். அவர் என்ன நோக்கத்துடன் இவ்வாறு கூறுகிறார் என்பது பற்றிச் சட்டத்திற்குக்

கவலை இல்லை. தீண்டப்படாதவருக்கு அதனால் என்ன தீங்கு ஏற்படுகிறது என்பதைச் சட்டம் பார்ப்பதில்லை. காவல் துறையினர் தங்களுடைய சக்தியையும் அதிகாரத்தையும் தவறாகப் பயன்படுத்தலாம். ஆவணத்தில் பதிவு செய்யும்போது, சொல்லப்படாத ஒன்றை வேண்டுமென்றே எழுதிக்கொண்டு, அல்லது சொல்லப்பட்டதற்கு முற்றிலும் வேறான ஒன்றை எழுதிக் கொண்டு, பொய்யான ஆவணத்தை அவர்கள் தயாரித்துவிட முடியும்; தமக்கு அக்கறையுள்ள தரப்பினரிடம் சாட்சியத்தை வெளிப்படுத்த முடியும்; கைது செய்ய மறுக்க முடியும். வழக்கைக் கெடுப்பதற்கு அவருக்கு நூற்றொரு வழிகள் உள்ளன. இதையெல்லாம் அவர், தாம் பிடிபட்டுவிடுவோம் என்ற அச்சம் சிறிதும் இல்லாமல் செய்யலாம். சட்டத்தின் ஓட்டைகள் ஏராளம்; அவற்றையெல்லாம் அவர் அறிவார். அவர் தமது உசிதப்படி செயல்படுவதற்கு மிகப் பெருமளவு அதிகாரத்தை மாஜிஸ்ட்ரேட் அவருக்குக் கொடுத்திருக்கிறார். அதை அவர் தாராளமாகப் பயன்படுத்தலாம். ஒரு வழக்கின் முடிவு, சாட்சியம் அளிக்கக் கூடிய சாட்சியைப் பொறுத்தே உள்ளது. ஆனால், சாட்சிகள் நம்பத்தக்கவர்களா அல்லவா என்பதைப் பொறுத்தே அந்த முடிவு அமையும். மாஜிஸ்ட்ரேட் தமது விருப்பப்படி ஒரு தரப்பை நம்பலாம், மறு தரப்பை நம்பாமலிருக்கலாம். அவர் தமது மனம் போன போக்கில் ஒரு தரப்பை நம்பலாம்; யாரும் அதில் குறுக்கிடமுடியாது. மாஜிஸ்ட்ரேட் இவ்வாறு தமது விருப்பப்படி செயல்படுவதற்கு உள்ள அதிகாரம், தீண்டப்படாதவர்களுக்குப் பாதகமாகவே பயன்படுத்தப்பட்ட வழக்குகள் கணக்கற்றவை. தீண்டப்படாதவரின் சாட்சியம் எவ்வளவு உண்மையானதாக இருந்தாலும், மாஜிஸ்ட்ரேட்டுகள், பொதுவாக ஒரே மாதிரி 'நான் இந்தச் சாட்சிகளை நம்பவில்லை' என்று கூறிவிடுகிறார்கள். இதை யாரும் கேள்வி கேட்பதில்லை. என்ன தண்டனை விதிப்பது என்பதும் மாஜிஸ்ட்ரேட்டின் விருப்பமே. மேல் முறையீடு செய்யமுடியாத தண்டனைகளும் உள்ளன. தவறான தீர்ப்பை மாற்றச் செய்து நீதி பெறுவதற்கான வழியே மேல் முறையீடு. ஆனால் மாஜிஸ்ட்ரேட், மேல் முறையீடு செய்யக்கூடிய தண்டனையை வழங்க மறுப்பதன் மூலம், இந்த வழியை அடைந்துவிடமுடியும்.

நிறுவப்பட்ட முறைமையைப் பாதுகாப்பதில் இந்துச் சமூகம் தன் பங்கைச் செய்கிறது; அதேபோல, அரசாங்கத்தில் உள்ள இந்து அதிகாரிகளும் தங்கள் பங்கைச் செய்கிறார்கள். இருவருமாகச் சேர்ந்து நிறுவப்பட்ட முறைமையை அசைக்க முடியாததாகச் செய்துள்ளனர்.

❑❑❑

# இயல் - 13

பாரபட்சப பிரச்சினை

தீண்டப்படாதவர்களுக்குத் தாங்கள் பாரபட்சமாக நடத்தப்படும் பிரச்சினை தங்களுடைய ஆண்மையை மீட்டுப் பெறுவதற்கு அடுத்தபடியாக மிகக் கடுமையான பிரச்சினையாக உள்ளது. தீண்டப்படாதவர்களுக்கெதிராக இந்துக்கள் காட்டும் பாரபட்சத்தின் அளவை, வெளியில் உள்ளவர்கள் கற்பனைகூடச் செய்யமுடியாது. தீண்டப்படாதவர்களுக்கும் இந்துக்களுக்கும் போட்டி ஏற்படுகின்ற எந்தத் துறையிலும் தீண்டப்படாதவர்களுக்கு எதிராகப் பாரபட்சம் காட்டப்படுகிறது. இந்தப் பாரபட்சமும் மிகக் கடுமையானதாக உள்ளது.

சமூக உறவுகளில் இந்தப் பாரபட்சம், நடனம், குளித்தல், உண்ணுதல், குடித்தல், மற்போர், வழிபாடு ஆகியவற்றில் தடைகள் வடிவத்தில் வருகிறது. பொதுவாகப் பங்கேற்கும் எல்லாச் செயல்களிலும் பாரபட்சம் காட்டும் தடை விதிக்கப்படுகிறது.

பொது வசதிகள் விஷயத்தில் இந்தப் பாரபட்ச உணர்வு, பள்ளிகள், கிணறுகள், கோவில்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றில் தீண்டப்படாதவர்களை ஒதுக்கிவைக்கும் வழக்கமாக வடிவெடுக்கிறது. பொது நிர்வாகம் தீண்டப்படாதவர்களுக்கெதிரான பாரபட்ச உணர்வில் ஆழ்ந்து ஊறிக்கிடக்கிறது. நீதி மன்றங்கள், அரசுத் துறைகள், கூட்டுறவு வங்கிகள், குறிப்பாகக் காவல் துறை ஆகியவற்றில் இது ஊடுருவியுள்ளது. நிலம், கடன், வேலை ஆகியவற்றைப் பெறுவதில்

தீண்டப்படாதவர்களுக்கு எதிரான பாரபட்சம் மிகக் கடுமையாக உள்ளது. சேவைத் துறைகளில்தான் பாரபட்சம் மிக வலுவாகக் காட்டப்படுகிறது. சேவை விஷயத்தில் தீண்டப்படாதவர்கள் பணியில் சேருதல், பதவி உயர்வு ஆகியவைபற்றி நன்றாக அறியப்பட்ட விதிகள் உள்ளன. பெரும்பாலும், தீண்டப்படாதவருக்குப் பணியில் சேரவே வாய்ப்புக் கிடைக்காது. பல துறைகள் முற்றிலுமாக அவர்களுக்கு மூடப்பட்டுள்ளன. ஜவுளி ஆலைகளின் நெசவுப் பிரிவு, ராணுவம் முழுவதும் தீண்டப்படாதவர்களுக்கு மூடப்பட்டுள்ளன. அவர் பணியில் சேர்ந்து விட்டதும், ஒரு நிலைக்குமேல் அவர் உயரக்கூடாது என்ற வரம்பு உள்ளது. அவருடைய திறமை அல்லது பணிக் காலத்தின் அளவு ஆகியவை இதில் கருதப்படுவதில்லை. தீண்டப்படாதவர், இந்துக்களின் மீது நிர்வாக அதிகாரம் உள்ள பதவியில் வைக்கப்படக்கூடாது என்ற கோட்பாடு பொதுவாகப் பின்பற்றப்படுகிறது. இதன் விளைவாக, சேவையில் ஏதேனும் ஒரு பிரிவு முற்றிலுமாகத் தீண்டப்படாதவர்களைக் கொண்டதாக இருந்தாலன்றித், தீண்டப்படாதவர் பெறக்கூடிய முக்கியமான பதவி எதுவும் கிடையாது. விளக்கமாகச் சொன்னால், தீண்டப்படாதவர்களுக்கு எதிராகப் பாரபட்சம் இல்லாத ஒரே சேவைத் துறை துப்புரவுப்பணிதான். இதில் பாரபட்சத்திற்கு இடமில்லை; ஏனென்றால், துப்புரவுப்பணி முழுவதும் தீண்டப்படாதவர்களுக்கே விடப்பட்டுள்ளது; அதில் இந்துக்கள் போட்டியிடுவதில்லை. இதிலும் கூட, உயர் பதவிகளில் பாரபட்சம் வந்துவிடுகிறது. அசுத்தமான வேலைகள் எல்லாம் தீண்டப்படாதவர்களால் செய்யப்படுகின்றன. ஆனால் அசுத்தத்தைத் தொடத் தேவையில்லாதவையும் அதிகச் சம்பளம் உள்ளவையுமான மேற்பார்வைப் பதவிகளில் எல்லாம் இந்துக்களே அமர்த்தப்படுகிறார்கள். இத்தகைய நிலைமையில் குடிமக்களின் உரிமைகள் என்பவை தீண்டப்படாதவர்களின் உரிமைகள் என்று பொருள்பட முடியாது. மக்களுக்காக, மக்களுடைய அரசு என்பது தீண்டப்படாதவர்களுக்கான அரசு என்று பொருள்பட முடியாது. எல்லோருக்கும் சம வாய்ப்பு என்பது, தீண்டப்படாதவர்களுக்குச் சம வாய்ப்பு என்று பொருள்படாது; எல்லோருக்கும் சம உரிமை என்பது தீண்டப்படாதவர்களுக்குச் சம உரிமை என்று பொருள்படாது. நாடு முழுவதிலும் எல்லா மூலை முடுக்குகளிலும் தீண்டப்படாதவர் இடையூறுகளையும் பாரபட்சங்களையும் சந்திக்கிறார். இந்தியாவின் மிகவும் ஒடுக்கப்பட்ட மக்களான தீண்டப்படாதவர்களுக்கு எங்கும் அநீதியே வழங்கப்படுகிறது. இது எவ்வளவு பெரிய உண்மை என்பதை, இதனால் ஏற்படும் துன்பங்களையெல்லாம் அனுபவிக்கும் தீண்டப்படாதவர்கள்தான் அறிவார்கள். இந்தப் பாரபட்சம் தான், தீண்டப்படாதவர்களுக்கு எதிரான மிகப் பலமான தடையாகும். அவர்கள் அதைவிட்டு மேலே வர முடியாமல் இது தடுத்துவைக்கிறது. இது தீண்டப்படாதவர்களின் வாழ்க்கையை வேலை இன்மை, தாக்குதல்,

பான எதையெல்லாமோ பற்றி அஞ்சுகின்ற
கொடுமை மாற்றியுள்ளது. கொஞ்சமும் பாதுகாப்பு இல்லாத
வாழ்க்கை
வாழ்க் ... தமான பாரபட்சம் உள்ளது; இது நுட்பமானது
கவும் உண்மையானது. தகுதியும் திறமையும் உள்ள
வரின் கண்ணியத்தையும் அந்தஸ்தையும் குறைப்பதற்குத்
முயற்சி செய்யப்படுவது இந்தப் பாரபட்சமாகும். இந்துத்
வர் பெரிய இந்தியத் தலைவர் என்று வர்ணிக்கப்படுவார்.
ஷ்மீரி பிராமணராயிருந்தாலும் அவரை காஷ்மீரி
களின் தலைவர் என்று கூறமாட்டார்கள். ஆனால்
ாதவரான ஒரு தலைவரைக் குறிப்பிடும்போது அவரது
த் குறிப்பிட்டு, தீண்டப்படாதவர்களின் தலைவர் என்று
கள். ஒரு இந்து டாக்டர் சிறந்த இந்திய டாக்டர் என்று
ாக்கப்படுவார். அவர் ஒரு ஐயங்காராக இருந்தாலும், யாரும் அவரை
யங்கார் என்று குறிப்பிடமாட்டார்கள். ஆனால், ஒரு டாக்டர்
தீண்டப்படாதவராக இருந்தால், அவரை, இன்னார்,
தீண்டப்படாதவரான டாக்டர் என்றே கூறுவார்கள். ஒரு இந்துப்
பாடகர், பெரிய இந்தியப் பாடகர் என்று வர்ணிக்கப்படுவார். அவரே
தீண்டப்படாதவராக இருந்தால், அவர் தீண்டப்படாதவரான பாடக
என்று வர்ணிக்கப்படுவார். இந்து மற்போர் வீரரைப், பெரிய இந்திய
பயில்வான் என்று வர்ணிப்பார்கள். அவர் தீண்டப்படாதவரா
இருந்தால், தீண்டப்படாதவரான பயில்வான் என்றே வர்ணிக்கப்படுவ

இது போன்ற பாரபட்சத்திற்குக் காரணம், இந்துக்களின் மனத்
தீண்டப்படாதவர்கள் தங்களைவிடத் தாழ்வானவர்கள் எ
ஊறிப்போயுள்ள எண்ணமாகும். தீண்டப்படாதவர்கள் எவ்வளவு
பெற்றவர்களாக இருந்தாலும் அவர்கள் தீண்டப்படாதவர்களி
தான் பெரியவர்கள் என்பது இந்துக்களின் எண்ணம். அ
இந்துக்களில் பெரியவர்களாக உள்ளவர்களை
பெரியவர்களாகவோ அவர்களுக்குச் சமமானவர்களாகவோ
போதும் இருக்கமுடியாது. இது இத்தகைய பாரபட்சம் சமூ
பார பட்சம் என்றாலும் பொருளாதாரப் பாரபட்சத்தை
வகையிலும் கொடுமையில் குறைந்ததல்ல.

பாரபட்சம் என்பது சுதந்திரம் இன்மையின் மற்
திரு. டானி கூறுகிறார்[1] :“மார்க்கெட்டில் சுதந்தி
குறிப்பிட்ட காலம், இடம் என்ற உண்மைகளுக்
கிடையாது. அதற்கு என்ன பொரு

ளர் என்ன செய்ய முடியும் என்பதையே சுதந்தி

இல்லாவிட்டாலும், பலவற்றின் இடையே ஒன்றைத்
வாய்ப்பை அது குறிக்கிறது. இந்தத் தேர்வு வாய்ப்
இருந்தால் மட்டும் போதாது, உண்மையிலேயே இருக்கும்
சுருக்கமாகச் சொன்னால், ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ...தில்
சூழ்நிலைகளில் ஒரு செயலைச் செய்வதற்கு
செய்யாமலிருப்பதற்கு இயல்வதை அது குறிக்கிறது. இத
அதற்குப் பொருள் எதுவும் இல்லை. ஒரு மனிதன் சிந்திப்பவ
நிச்சயிப்பவனாகவும் செயல் செய்பவனாகவும் இருக்கும் போது
மிகுந்த அளவில் மனிதனாக இருக்கிறான்; எனவே சுதந்திரத்
பற்றிக் கவிஞர்கள் கூறியுள்ளவை எல்லாம் அதற்குத் தகும்; ஆயினு
அன்றாட வாழ்க்கை என்ற வசனத்தின் ஒரு பகுதியாகச் சுதந்திர
என்பது நடைமுறைக்கு ஏற்றதாக இருக்கவேண்டும். ஒவ்வொரு
தனிமனிதனுக்கும் சில தேவைகள் உள்ளன. உயிர் வாழ்வதற்கு
வேண்டிய பொருளியல் தேவைகள், எழுத்திலும் பேச்சிலும் தன்
கருத்துக்களைத் தெரிவிக்கும் தேவை, பொதுவான விவகாரங்களில்
பங்கெடுத்துக் கொள்ளும் தேவை, தனது சொந்த முறைப்படி
கடவுளை வழிபடுவதற்கு அல்லது வழிபடாமல் இருப்பதற்கான
தேவை - என்று பல வகையான தேவைகள் உள்ளன. இவை
நிறைவேறுவது அவனது நல்வாழ்வுக்கு அவசியமாகும். சுருக்கமாகச்
சொன்னால், அவனுடைய சுதந்திரம் என்பது, இயற்கையின்
வரம்புக்குள்ளும், மற்றவர்கள் இதே போன்ற வாய்ப்புகளை
அனுபவிக்கும் வரம்புக்குள்ளும், தன்னுடைய தேவைகள்
நிறைவேறுவதற்கான நடவடிக்கைகளை எடுக்கும் வாய்ப்பை அவன்
பெற்றிருப்பதாகும்."

...தனின் அத்தியாவசிய உரிமைகள் பற்றி ஏற்கெனவே உள்ள
...களுடன் மேலும் ஒரு பட்டியலைத் தருவது என் நோக்கமல்ல.
...இவை எல்லாவற்றுக்கும் பொருந்துவதான இரண்டு
...க் கூற விரும்புகிறேன். முதலாவதாக, இந்த உரிமைகள்
உத்தரவாதம் தருவனவாக இருக்கவேண்டும் என்றால்,
அல் சாப்பிடும் வசதி படைத்தவர்கள் அனைவருக்கும்
இ...ன்பதுபோல உருவாக்கப்படக்கூடாது. இந்த
செய...
உரி...த்தத் தேவையான சந்தர்ப்பம் நேரும்போது
கூட்...யே பயன்படுத்துவது சாத்தியமாக
என்று...ளிப்பதற்கும், கூட்டாகச் சேர்ந்து
ஆகிவிட...கள் இருந்தாலும், வாக்களிக்கும்
வெளியேற்றப்படுவான் என்றும்,
வேலையிலிருந்து நீக்கப்படுவான்
இந்த உரிமைகள் பலனற்றவை
மதிப்புக் குறைந்து போகிறது. இதே

கொடுமை முதலான எதையெல்லாமோ பற்றி அஞ்சுகின்ற வாழ்க்கையாக மாற்றியுள்ளது. கொஞ்சமும் பாதுகாப்பு இல்லாத வாழ்க்கை இது.

மற்றொரு விதமான பாரபட்சம் உள்ளது; இது நுட்பமானது என்றாலும் மிகவும் உண்மையானது. தகுதியும் திறமையும் உள்ள தீண்டப்படாதவரின் கண்ணியத்தையும் அந்தஸ்தையும் குறைப்பதற்குத் திட்டமிட்ட முயற்சி செய்யப்படுவது இந்தப் பாரபட்சமாகும். இந்துத் தலைவர் ஒருவர் பெரிய இந்தியத் தலைவர் என்று வர்ணிக்கப்படுவார். அவர் காஷ்மீரி பிராமணராயிருந்தாலும் அவரை காஷ்மீரி பிராமணர்களின் தலைவர் என்று கூறமாட்டார்கள். ஆனால் தீண்டப்படாதவரான ஒரு தலைவரைக் குறிப்பிடும்போது அவரது பெயரைக் குறிப்பிட்டு, தீண்டப்படாதவர்களின் தலைவர் என்று கூறுவார்கள். ஒரு இந்து டாக்டர் சிறந்த இந்திய டாக்டர் என்று வர்ணிக்கப்படுவார். அவர் ஒரு ஐயங்காராக இருந்தாலும், யாரும் அவரை ஐயங்கார் என்று குறிப்பிடமாட்டார்கள். ஆனால், ஒரு டாக்டர் தீண்டப்படாதவராக இருந்தால், அவரை, இன்னார், தீண்டப்படாதவரான டாக்டர் என்றே கூறுவார்கள். ஒரு இந்துப் பாடகர், பெரிய இந்தியப் பாடகர் என்று வர்ணிக்கப்படுவார். அவரே தீண்டப்படாதவராக இருந்தால், அவர் தீண்டப்படாதவரான பாடகர் என்று வர்ணிக்கப்படுவார். இந்து மற்போர் வீரரைப், பெரிய இந்தியப் பயில்வான் என்று வர்ணிப்பார்கள். அவர் தீண்டப்படாதவராக இருந்தால், தீண்டப்படாதவரான பயில்வான் என்றே வர்ணிக்கப்படுவார்.

இது போன்ற பாரபட்சத்திற்குக் காரணம், இந்துக்களின் மனத்தில் தீண்டப்படாதவர்கள் தங்களைவிடத் தாழ்வானவர்கள் என்று ஊறிப்போயுள்ள எண்ணமாகும். தீண்டப்படாதவர்கள் எவ்வளவு தகுதி பெற்றவர்களாக இருந்தாலும் அவர்கள் தீண்டப்படாதவர்களிடையே தான் பெரியவர்கள் என்பது இந்துக்களின் எண்ணம். அவர்கள் இந்துக்களில் பெரியவர்களாக உள்ளவர்களைவிடப் பெரியவர்களாகவோ அவர்களுக்குச் சமமானவர்களாகவோ கூட ஒரு போதும் இருக்கமுடியாது. இது இத்தகைய பாரபட்சம் சமூகரீதியான பார பட்சம் என்றாலும் பொருளாதாரப் பாரபட்சத்தைவிட எந்த வகையிலும் கொடுமையில் குறைந்ததல்ல.

பாரபட்சம் என்பது சுதந்திரம் இன்மையின் மற்றொரு பெயரே. திரு. டானி கூறுகிறார்[1] :"மார்க்கெட்டில் சுதந்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட காலம், இடம் என்ற உண்மைகளுக்கு அப்பாற்பட்டுக் கிடையாது. அதற்கு என்ன பொருள் இருந்தாலும்

1. தொழிலாளர் என்ன செய்ய முடியும் என்பதையே சுதந்திரம் என்கிறோம். பக். 83-85.

இல்லாவிட்டாலும், பலவற்றின் இடையே ஒன்றைத் தெரிந்தெடுக்கும் வாய்ப்பை அது குறிக்கிறது. இந்தத் தேர்வு வாய்ப்பு, காகிதத்தில் இருந்தால் மட்டும் போதாது, உண்மையிலேயே இருக்கவேண்டும். சுருக்கமாகச் சொன்னால், ஒரு குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒரு செயலைச் செய்வதற்கு அல்லது செய்யாமலிருப்பதற்கு இயல்வதை அது குறிக்கிறது. இதல்லாமல் அதற்குப் பொருள் எதுவும் இல்லை. ஒரு மனிதன் சிந்திப்பவனாகவும் நிச்சயிப்பவனாகவும் செயல் செய்பவனாகவும் இருக்கும் போதுதான் மிகுந்த அளவில் மனிதனாக இருக்கிறான்; எனவே சுதந்திரத்தைப் பற்றிக் கவிஞர்கள் கூறியுள்ளவை எல்லாம் அதற்குத் தகும்; ஆயினும், அன்றாட வாழ்க்கை என்ற வசனத்தின் ஒரு பகுதியாகச் சுதந்திரம் என்பது நடைமுறைக்கு ஏற்றதாக இருக்கவேண்டும். ஒவ்வொரு தனிமனிதனுக்கும் சில தேவைகள் உள்ளன. உயிர் வாழ்வதற்கு வேண்டிய பொருளியல் தேவைகள், எழுத்திலும் பேச்சிலும் தன் கருத்துக்களைத் தெரிவிக்கும் தேவை, பொதுவான விவகாரங்களில் பங்கெடுத்துக் கொள்ளும் தேவை, தனது சொந்த முறைப்படி கடவுளை வழிபடுவதற்கு அல்லது வழிபடாமல் இருப்பதற்கான தேவை - என்று பல வகையான தேவைகள் உள்ளன. இவை நிறைவேறுவது அவனது நல்வாழ்வுக்கு அவசியமாகும். சுருக்கமாகச் சொன்னால், அவனுடைய சுதந்திரம் என்பது, இயற்கையின் வரம்புக்குள்ளும், மற்றவர்கள் இதே போன்ற வாய்ப்புகளை அனுபவிக்கும் வரம்புக்குள்ளும், தன்னுடைய தேவைகள் நிறைவேறுவதற்கான நடவடிக்கைகளை எடுக்கும் வாய்ப்பை அவன் பெற்றிருப்பதாகும்."

மனிதனின் அத்தியாவசிய உரிமைகள் பற்றி ஏற்கெனவே உள்ள பட்டியல்களுடன் மேலும் ஒரு பட்டியலைத் தருவது என் நோக்கமல்ல. ஆனால், இவை எல்லாவற்றுக்கும் பொருந்துவதான இரண்டு கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். முதலாவதாக, இந்த உரிமைகள் சுதந்திரத்துக்கு உத்தரவாதம் தருவனவாக இருக்கவேண்டும் என்றால், 'ரிட்ஸ் ஹோட்டலில் சாப்பிடும் வசதி படைத்தவர்கள் அனைவருக்கும் உள்ள உரிமைகள் என்பதுபோல உருவாக்கப்படக்கூடாது. இந்த உரிமைகளைப் பயன்படுத்தத் தேவையான சந்தர்ப்பம் நேரும்போது அவற்றை உண்மையிலேயே பயன்படுத்துவது சாத்தியமாக இருக்கவேண்டும். வாக்களிப்பதற்கும், கூட்டாகச் சேர்ந்து செயல்படுவதற்கும் உரிமைகள் இருந்தாலும், வாக்களிக்கும் உரிமையைப் பயன்படுத்துபவன் வெளியேற்றப்படுவான் என்றும், கூட்டாகச் சேர்ந்து செயல்படுபவன் வேலையிலிருந்து நீக்கப்படுவான் என்றும் நிலைமைகள் இருந்தால், இந்த உரிமைகள் பலனற்றவை ஆகிவிடாவிட்டாலும் இவற்றின் மதிப்புக் குறைந்து போகிறது. இதே

போலத்தான் மற்ற உரிமைகளும் ஆகின்றன, அதாவது, ஒரு தொழிலைத் தெரிந்தெடுத்துக்கொள்ள உரிமை இருந்தாலும் அந்தத் தொழிலுக்குத் தகுதி பெறுவதற்காகும் செலவு தாங்கமுடியாததாக இருந்தால்; நீதி பெறுவதற்கு உரிமை இருந்தாலும் ஏழை மனிதன் யாரும் அதற்கு வேண்டிய பணம் செலவிட இயலாது என்றால்; உயிர்வாழ்வதற்கும், சுயேச்சையாயிருப்பதற்கும், மகிழ்ச்சியை நாடுவதற்கும் சுதந்திரம் இருந்தாலும், பிறப்பவர்களில் ஒரு கணிசமான விகிதம் பன்னிரண்டு மாதங்களுக்குள் இறந்துவிடும் சூழ்நிலை இருந்தால்; மீதமுள்ளவர்கள் செய்யும் மகிழ்ச்சி - முதலீடுகள் ஒரு சூதாட்டம் போல அமைந்தால் - இந்த உரிமைகள் மதிப்புக் குறைந்து போகின்றன. இரண்டாவதாகச் சுதந்திரத்திற்கு அவசியமாக உரிமைகள், ஒரு சிறுபான்மையினருக்கு மட்டுமின்றி எல்லோருக்குமே சுதந்திரம் கிடைக்கச் செய்வனவாக இருக்கவேண்டும். ஒரு நாட்டில் 5 சதவீதம் மக்கள் பலதார மணம் புரிந்தவர்களாகவும், பெரும்பாலானவர்கள் தங்கள் வாழ்க்கையைக் கணவர்கள் அல்லது மனைவிகள் இல்லாமல் கழிப்பவர்களாகவும் இருந்தால் அங்குத் திருமணம் என்பது ஒரு தேசிய முறைமையாகக் கருதப்படமாட்டாது என்று யாரோ ஓர் அறிஞர் கூறியிருக்கிறார். சுதந்திரத்திற்கும் இது பொருந்தும். ஒரு சமூகத்தில் சில குழுவினர் தாங்கள் விரும்பியபடி செய்யமுடியும், மற்றவர்கள் தாங்கள் செய்ய வேண்டியதைச் செய்யமுடியாது என்றால், அந்தச் சமூகத்தில் என்ன சிறப்புகள் இருந்தாலும், சுதந்திரம் அவற்றில் ஒன்றாக இருக்க முடியாது. ஒரு சமூகத்தின் பகுதிகளாக உள்ள மக்கள் தங்களுடைய சக்திகளை உயர்ந்தபட்ச அளவுக்குப் பயன்படுத்தவும், தங்களுடைய கடமை என்று அவர்கள் கருதுவதைச் செய்யவும், கோட்பாடு அளவில் மட்டுமின்றி உண்மையிலேயே எந்த அளவுக்கு இயலுகிறதோ அந்த அளவுக்குத்தான் சுதந்திர சமூகமாக இருக்கும். மனிதர்கள் என்பதற்குத் தகுதியான வாழ்க்கை வாழும் வாய்ப்பு ஒரு சிறுபான்மையினருக்கு மட்டுமே கிடைப்பதாயிருந்தால், அதைச் சுதந்திரம் என்று கூறமுடியாது; சிறப்பு உரிமை என்று கூறுவதுதான் பொருத்தமாயிருக்கும்.

தீண்டப்படாதவர்களுக்கெதிரான பாரபட்சங்கள், இந்துக்களின் தீண்டப்படாதவர்களுக்கெதிரான பாரபட்சங்கள், இந்துக்களின் உள்ளத்தில் ஆழ்ந்து வேரூன்றியுள்ள வலுவான உணர்வுகள் சட்டத்திலும் நிர்வாகத்திலும் பிரதிபலிப்பதைக் காட்டுகின்றன. தீண்டப்படாதவர்களுக்குப் பாதகமான முறையில் இந்துக்களுக்கும் தீண்டப்படாதவர்களுக்குமிடையே வேற்றுமை காட்டுவதை, நியாயப்படுத்தும் உணர்வுகள் இவை. சுதந்திரமான ஓர் உலகில் தீண்டப்படாதவர்கள் தங்கள் நிலைக்குமேல் உயர்ந்து, இந்து சமூக முறைமைக்கு ஓர் ஆபத்தாக உருவாகிவிடுவார்கள் என்று இந்துக்கள் கொண்டுள்ள அச்சத்தில் தான் இந்தப் பாரபட்சங்கள் வேரூன்றி

நிற்கின்றன. இந்துக்கள் தீண்டப்படாதவர்களை உயர்ந்த நிலையும் அவர்கள் மீது ஆதிக்கமும் பெற்றிருப்பதைப் பாதுகாக்கவேண்டும் என்பதுதான் இந்து சமூக முறைமையின் அடிப்படைக் கோட்பாடாகும். இந்து சமூக முறைமை நீடிக்கும் வரை தீண்டப்படாதவர்களுக்கெதிரான பாரபட்சங்கள் தொடர்ந்து இருந்து வரும்.

□□□

# இயல் - 14

## தனிமைப்பட்டு நிற்கும் பிரச்சினை

தீண்டப்படாதவர்களின் இயக்கம் ஏன் வெற்றியடையவில்லை? அவர்களுக்குத் தோழமையானவர்கள் யாரும் இல்லையா? தோழமையானவர்கள் இருந்தால், அவர்கள் ஏன் தீண்டப்படாதவர்களுக்கு உதவியும் ஒத்துழைப்பும் அளிக்கவில்லை? இது மிகவும் பொருத்தமான வினா. இதைச் சரியான முறையில் புரிந்துகொள்வது அவசியம். இந்தக் கேள்விக்கு விடையளிப்பதற்கு இந்து சமூக அமைப்பைப் பற்றியும், அதில் அடங்கிய வகுப்புகள் பற்றியும் மிகத் தெளிவாக அறிந்து கொள்வது அவசியம்.

இந்து சமூகத்தின் அமைப்பு மிகவும் சிக்கலானது; தனது வாழ்க்கை அதனுடன் பின்னிப் பிணைந்து இல்லாத ஒருவர், அதைப் புரிந்து கொள்வது கடினம். ஒரு விளக்கப்படம் போலக் காட்டுவது உதவியாயிருக்கும். இந்து சமூக அமைப்பைப் புரிந்துகொள்ள உதவும் என்று நான் கருதுகின்ற விளக்கப்படம் கீழே தரப்படுகிறது:

இந்துக்கள்

| சாதி இந்துக்கள் (சவர்ண இந்துக்கள்) | | சாதியில்லாத இந்துக்கள் (அவர்ண இந்துக்கள்) | |
|---|---|---|---|
| வகுப்பு I | வகுப்பு II | வகுப்பு III | வகுப்பு IV |
| உயர்ந்த சாதி - இருபிறப்பாளர்கள் த்ரைவர்ணிகர்கள் - மூன்று வர்ணங்களிலிருந்து, அதாவது, பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள் ஆகிய சாதிகளிலிருந்து உருவான சாதிகள் | தாழ்ந்த சாதிகள் - சூத்திரர்கள் என்ற நான்காவது வர்ணத்திலிருந்து உருவான சாதிகள் | 1. பூர்வ பழங்குடிகள் 2. குற்ற பரம்பரைப் பழங்குடிகள் | தீண்டப்படாதவர்கள் |

இந்த விளக்கப்படத்திலிருந்து, இந்துக்களிடையே எண்ணற்ற சாதிகள் உள்ளபோதிலும், இவை எல்லாவற்றையும் நான்கு வகுப்புகளாகத் தொகுத்துப் பிரிக்கலாம் என்று தெரிகிறது. இந்த நான்கினுள் வகுப்பு - I ஆளும் வகுப்பாகும். வகுப்பு III, வகுப்பு IV ஆகியவை ஆளப்படும் மக்களாவர்.

இப்போது, இந்த வகுப்புகளில் எது தீண்டப்படாதவர்களுக்கு இயற்கையான தோழமை வகுப்பாக இருக்கமுடியும் என்று பார்க்கலாம்.

வகுப்பு - I - இல் உள்ளவர்கள் இந்து சமூகத்தின் சிறப்பு உரிமைகள் பெற்றவர்கள். இதனால் பயனடைகிறார்கள்; இதைக் காப்பாற்று - வதே இந்த வகுப்பில் உள்ளவர்களின் நோக்கம். நலன்கள் ஒன்றாக இருப்பதனாலும் கருத்து அடிப்படையில் ஒற்றுமை இருப்பதனாலும் இந்த வகுப்பில் உள்ள இரண்டு நண்பர்களும் தோழமையாளர்களும் தங்களிடையே கருத்து வேறுபாடு கொள்ளமுடியாது.

குற்ற பரம்பரைப் பழங்குடிகள், பூர்வ பழங்குடிகள் ஆகியோரின் விஷயம் என்ன? இந்து சமூக அமைப்பைத் தூக்கியெறிவதற்கு மிக வலுவான காரணம் இவர்களுக்குத்தான் உள்ளது.

## சூத்திரர்களின் விஷயம் என்ன?

இந்து சமூக அமைப்பின் சட்டங்கள், தீண்டப்படாதவர்களான வகுப்பு-IV மக்களுக்கு எப்படி வெறுப்பாக உள்ளனவோ, அதேபோல சூத்திரர்கள் என்ற வகுப்பு-II மக்களுக்கும் வெறுப்பாக உள்ளன. இந்து சமூகத்தின் சிற்பியும் சட்டம் இயற்றியவருமான மனு, சூத்திரர்களுக்கு இந்து சமூகத்தில் கொடுத்திருக்கும் அந்தஸ்தைப் பார்ப்பது சுவாரஸ்யமாயிருக்கும். இதை எளிதாகப் புரிந்துகொள்வதற்கு உதவியாக சூத்திரர்களின் அந்தஸ்து பற்றிய விதிகள் கீழே தனித்தனித் தலைப்புகளில் தரப்படுகின்றன:

பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள் ஆகிய சாதிகளின் இல்வாழ்வோருக்கு மனு கூறுவது:

> **IV**.61 " சூத்திரர்கள் ஆள்வோராக இருக்கும் நாட்டில் அவன் வசிக்கவேண்டாம்."

ஒரு சூத்திரன் மரியாதைக்குரிய மனிதனாகக் கருதப்படக்கூடாது. மனு விதிக்கிறார்:

> **XI**.24. "பிராமணன், வேள்வி (செய்வதற்கு), அதாவது சமயம் தொடர்பான நோக்கங்களுக்கு ஒரு போதும் சூத்திரனிடம் பொருள் யாசிக்கக்கூடாது."

சூத்திரர்களுடன் திருமண உறவுகள் தடைசெய்யப்பட்டன. மற்ற மூன்று சாதிகளின் பெண்களை மணப்பது தடைசெய்யப்பட்டது. சூத்திரன், மேல் சாதிப் பெண்களுடன் தொடர்பு கொள்ளக்கூடாது. அவளுடன் உடலுறவு கொள்வது மரணதண்டனைக்குரிய குற்றம் என்று மனு கருதினார்.

**VIII**.374 ஒரு சூத்திரன், மேல் சாதியைச் சேர்ந்த பாதுகாப்பு உள்ள பெண்ணுடன் அல்லது பாதுகாப்பு இல்லாத பெண்ணுடன் உடலுறவு கொண்டால் அவன் பின்வருமாறு தண்டிக்கப்படுவான்: அவள் பாதுகாப்பு இல்லாத பெண்ணாக இருந்தால், அவன் தவறு செய்த உறுப்பை இழப்பான்; அவள் பாதுகாப்பு உள்ள பெண்ணாக இருந்தால், அவனைக் கொன்று அவனுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்யவேண்டும்.

**VIII**.20 வம்ச வழியினால் மட்டுமே பிராமணனாக உள்ள ஒருவன், அதாவது, வேதத்தைக் கல்லாதவனாகவும், வேதத்தில் விதிக்கப்பட்ட வேறு எந்தச் செயல்களையும் செய்யதாவனாகவும் உள்ள ஒருவன், அரசன் விரும்பினால் அவனுக்குச் சட்டத்தின் பொருளை எடுத்துரைக்கலாம், அதாவது நீதிபதியாகச் செயல்படலாம்; ஆனால், சூத்திரன் (எவ்வளவு கற்றவனாக இருந்தாலும்) ஒருபோதும் அதைச் செய்யக்கூடாது.

**VIII**.*21*. சூத்திரன் சட்டத் தீர்ப்பு செய்வதைப் பார்த்துக் கொண்டிருக்கும் மன்னனின் நாடு, புதை சேற்றில் அழுந்தும் பசுவைப்போலத் தாழ்ந்துபோகும்.

**VIII**. *272*. சூத்திரன் அகங்காரத்துடன் பிராமணனுக்கு சமய போதனை செய்ய நினைத்தால், மன்னன் அவனுடைய வாயிலும் காதுகளிலும் கொதிக்கும் எண்ணெயை ஊற்றச் செய்ய வேண்டும்.

கல்வியையும் அறிவையும் பெறுவதுபற்றி மனு பின்வருமாறு விதிக்கிறார்:

**III**.*156* சூத்திர மாணாக்கர்களுக்குக் கற்பிப்பவனும், சூத்திரனை ஆசிரியனாகக் கொண்டவனும் சிராத்தத்திற்கு அழைக்கப்படும் தகுதியை இழப்பார்கள்.

**IV**. *99*. அவன் ஒரு போதும் சூத்திரர்களின் முன் வேதத்தைப் படிக்கக்கூடாது.

மனுவுக்குப்பின் வந்தவர்கள், வேதத்தைக் கற்கும் சூத்திரனுக்கு விதிக்கப்படும் தண்டனையை மேலும் கொடுமையாக்கினார்கள். உதாரணமாக, காத்யாயனர் இவ்வாறு கூறுகிறார்: சூத்திரன் வேதத்தைக் கேட்டால் அல்லது வேதத்தின் ஒரு சொல்லைக்கூட உச்சரித்தால், மன்னன் அவனுடைய நாக்கை இரண்டாகப் பிளக்க வேண்டும்: அவனுடைய காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டும்.

சூத்திரன் சொத்து வைத்திருப்பது பற்றி மனு பின்வருமாறு விதிக்கிறார்:

**X**.*129*. சூத்திரன் செல்வம் சேர்க்கும் திறன் பெற்றவனாக இருந்தாலும் அவன் மிகையாகச் செல்வம் சேர்க்கக் கூடாது. ஏனென்றால், அடியவனான ஒருவன் செல்வம் சேர்த்தால் அவனுக்குக் கர்வம் வந்துவிடுகிறது; அவன் அவமதிப்பாகவோ அலட்சியமாகவோ நடந்து கொள்வதால் பிராமணர்களுக்கு வேதனை உண்டாக்குகிறான்.

**VIII**.*417*. பிராமணன் உயிர்வாழப் பொருளின்றி வாடினால் அவன் தனது சூத்திரனின் பொருள்களைத் தயங்காமல் கைப்பற்றலாம்.

சூத்திரன் ஒரே தொழிலைத்தான் செய்ய முடியும். இது மனுவின் மாற்றமுடியாத விதிகளில் ஒன்று. மனு கூறுகிறார்:

**I**.*91* ஒரே ஒரு தொழிலைத்தான் இறைவன் சூத்திரனுக்கு விதித்தார். மற்ற மூன்று சாதிகளுக்கும் (பிராமண சத்திரிய, வைசிய சாதிகளுக்கு) தாழ்ந்து பணி செய்வதே அது.

**X**.*121*. ஒரு சூத்திரன் (பிராமணனுக்குப் பணி செய்து உயிர்வாழ முடியவில்லை என்றால்) அவன் செல்வந்தனான வைசியனுக்குப் பணி செய்து வாழ்க்கை நடத்தலாம்.

X.122. ஆனால், (சூத்திரன்) சுவர்க்கத்திற்காகவோ (இம்மை, மறுமை ஆகிய இரண்டிற்குமாகவோ) பிராமணர்களக்குப் பணி செய்வானாக; ஏனென்றால், பிராமணனின் பணியாளன் என்று கூறப்படுபவன் அதன் மூலம் எல்லாவற்றையும் அடைகிறான்.

X.123. பிராமணர்களுக்குப் பணி செய்வது மட்டுமே சூத்திரனுக்கு மிகச் சிறந்த தொழில் என்று அறிவிக்கப்பட்டுள்ளது; ஏனென்றால், இதைத் தவிர அவன் வேறு எதைச் செய்தாலும் அவனுக்குப் பயன் இல்லை.

சூத்திரன் பணி செய்வது சுயேச்சையான ஒப்பந்த ஏற்பாடாக இருக்கும்படி மனு விட்டுவிடவில்லை. ஒரு சூத்திரன் பணி செய்ய மறுத்தால், அவனைக் கட்டாயமாகப் பணி செய்யவைக்க விதி செய்யப்பட்டுள்ளது. அது பின்வருமாறு:

VIII.413. பிராமணன் சூத்திரனை - அவன் வாங்கப்பட்டவனாக இருந்தாலும் வாங்கப்படாதவனாக இருந்தாலும் - அடியவனாகப் பணி செய்யுமாறு கட்டாயப்படுத்தலாம்; ஏனென்றால், பிராமணனின் அடிமையாக இருப்பதற்கே அவன் படைக்கப்பட்டிருக்கிறான்.

X.124. அவர்கள் தங்களுடைய சொந்தக் குடும்பச் சொத்திலிருந்து ஒரு பராமரிப்பை, அவனது திறமை, உழைப்பு, அவனால் ஆதரிக்கப்படவேண்டியவர்களின் எண்ணிக்கை ஆகியவற்றுக்குத் தகுந்தபடி, ஒதுக்கிக் கொடுக்கவேண்டும்.

X.125. அவர்களுடைய உணவின் மிச்சமும், வீட்டின் பழைய சாமான்களும் அவனுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

சூத்திரன் மற்ற வகுப்பினரிடம் பேச்சிலும் நடத்தையிலும் தாழ்ந்து அடங்கி இருக்கவேண்டும் என்று மனு விதிக்கிறார்.

VIII. 270. இருபிறப்பாளரிடம் கடுமையான வசைமொழி பேசி அவனை அவமதிக்கும் சூத்திரனின் நாக்கு துண்டிக்கப்படும்; ஏனென்றால், அவன் தாழ்ந்த பிறப்பை உடையவன்.

VIII.271. அவன் இருபிறப்பாளர்களின் பெயர்களையும் சாதிகளையும் அவமதிப்பாகக் கூறினால், பத்து விரல் நீளமுள்ள பழுக்கக் காய்ச்சிய ஆணி அவனது வாயில் செலுத்தப்படும்.

மனு இதோடு திருப்பதியடைந்துவிடவில்லை. சூத்திரனின் தாழ்ந்த அந்தஸ்து அவனது பெயரிலும் வெளிப்படுத்தப்படவேண்டும் என்று அவர் விரும்புகிறார். மனு கூறுகிறார்:

II.31. பிராமணனுடைய பெயரின் முதல் பகுதி ஏதேனும் மங்களமான ஒன்றைக் குறிப்பதாக இருக்கட்டும்; சத்திரியனுடையது சக்தியைக்

குறிப்பதாகவும், வைசியனுடையது செல்வத்தைக் குறிப்பதாகவும் இருக்கவேண்டும்; ஆனால் சூத்திரனுடையது இழிப்புக்குரிய எதையேனும் குறிப்பதாக இருக்கவேண்டும்.

**II**.32. பிராமணனுடைய பெயரின் இரண்டாம் பகுதி மகிழ்ச்சியைக் குறிக்கும் சொல்லாகவும், சத்திரியனுடையது பாதுகாத்தலைக் குறிக்கும் சொல்லாகவும், வைசியனுடையது வளவாழ்வைக் குறிக்கும் சொல்லாகவும், சூத்திரனுடையது சேவையைக் குறிக்கும் சொல்லாகவும் இருக்கவேண்டும்.

இந்த மூன்று வகுப்புகளும் இயற்கையாகவே தோழமை உடையவை என்பது தெளிவாகத் தெரிகிறது. இவர்கள், இந்து சமூக முறைமையை அழித்துவிட ஒன்று சேர்வதற்கு அனைத்துக் காரணங்களும் உள்ளன. ஆனால், இவர்கள் ஒன்று சேரவில்லை. இவர்களை ஒன்றுபடுத்துவதற்கு முயற்சி நடக்கவில்லை என்பது இதற்குக் காரணம் அல்ல. 1919-1935-இல் பிரபலமாக இருந்த பிராமணரல்லாதார் கட்சி, இத்தகைய ஒரு முயற்சி தான். இந்து சமூக முறைமையின் சிற்பிகளாகவும், இந்த அமைப்பின் மூலம் மிக அதிக நன்மை பெறுவதனால் இதை மிக வலுவாக ஆதரிப்பவர்களுமான பிராமணர்களின் ஆதிக்கத்தை ஒழிப்பதற்ககாக இந்த மூன்று வகுப்புகளையும் ஒரே அரசியல் கட்சியாக இணைக்கும் முயற்சிதான் அந்தக் கட்சி.

இந்த மூன்று வகுப்புகளிடையே ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு நடந்த முயற்சி இது ஒன்றுமட்டும் அல்ல. மற்றொரு முயற்சி தொழிலாளர் தலைவர்களால், குறிப்பாகக், கம்யூனிஸ்டுகளால் நடத்தப்பட்டது. உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் எந்தச் சமுதாயத்தினராயிருந்தாலும், அவர்கள் அனைவரின் நலன்களும் பொதுவானவை என்று அவர்கள் பிரசாரம் செய்தார்கள். அவர்களிடையே வர்க்க உணர்வும் வர்க்க ஒற்றுமையும் உருவாக வேண்டும்: அவர்கள் ஒன்றுபட்டுவிட்டால், தங்களுடைய எண்ணிக்கையின் பலத்தை வைத்துப் பொருளாதார முறைமையை உடைத்துவிட முடியும்; பொருளாதார முறைமை நொறுங்கிப் போனால், இந்துக்களின் சமூக முறைமை சிதறிப் போய்விடும், என்று அவர்கள் போதித்தார்கள். ஆனால், பலன் என்ன ஏற்பட்டது? அந்த ஒற்றுமை உருவாகவில்லை என்பதுதான் பலன். சூத்திரர்களும் குற்ற பரம்பரைப் பழங்குடிகளும் பூர்வ பழங்குடிகளும் பிராமணர்களிடம் காட்டும் பகைமையைவிட அதிகமாகத் தீண்டப்படாதவர்களிடம் பகைமை காட்டுகிறார்கள். உண்மையில் இந்து சமூக முறைமையின்மீது தீண்டப்படாதவர்கள் தொடுக்கும் தாக்குதலை முறியடிக்கும் போலீஸ் படையாகச் செயல்படுபவர்கள் சூத்திரர்களே. இது ஒரு விசித்திரமான நிலைமை; ஆனால் உண்மை. நிறுவப்பட்ட முறைமையின் விதிகளையும்

கட்டுப்பாடுகளையும் தீண்டப்படாதவர்கள் மீறினால், அவர்கள்மீது எத்தகைய கொடுமைகள் இழைக்கப்படுகின்றன என்பது முந்திய இயல்களில் விவரிக்கப்பட்டுள்ளது. இந்தக் கொடுமைகளையெல்லாம் செய்தவர்கள் சூத்திரர்களே.

இந்த ஒற்றுமைக் குறைவுக்குக் காரணம் காண்பது கடினமல்ல. படிப்படியான சமத்துவமின்மை - பிராமணர்கள் எல்லோருக்கும் மேலாகவும், சூத்திரர்கள் அவர்களுக்குக் கீழாகவும் தீண்டப்படாதவர்களுக்கு மேலாகவும் இருக்கும் அமைப்புமுறை இதற்குக் காரணமாகும். இந்து சமூக அமைப்பு, சமத்துவமின்மையை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தால் நீண்ட காலத்திற்கு முன்பே அது தூக்கியெறியப்பட்டிருக்கும். ஆனால், அது படிப்படியான சமத்துவமின்மையைக் கொண்டிருப்பதால், சூத்திரர்கள் பிராமணர்களைக் கீழே தள்ள விரும்பினாலும், தீண்டப்படாதவர்கள் தங்களுடைய நிலைக்கு உயர்ந்து வந்துவிடுவதை விரும்பவில்லை. அவர்கள் தீண்டப்படாதவர்களுடன் சேர்ந்து சமூக முறைமையின் மேல் படிகளையெல்லாம் ஒரே மாதிரியாகக் கீழிறக்குவதைவிடத், தங்கள் மீது பிராமணர்கள் சுமத்துகின்ற அவமதிப்புகளைத் தாங்கிக்கொள்வதையே விரும்புகிறார்கள். இதன் விளைவாகத், தீண்டப்படாதவர்களின் போராட்டத்தில் அவர்களுடன் சேர்ந்துகொள்ள யாரும் இல்லை என்று ஆகிவிடுகிறது. அவர்கள் முற்றிலுமாகத் தனிமைப்பட்டு நிற்கிறார்கள். தனிமைப்பட்டிருப்பது மட்டுமின்றி, அவர்களுக்கு இயற்கையாகத் தோழமையாளர்களாக இருக்கவேண்டிய வகுப்புகளே அவர்களை எதிர்த்து நிற்கிறார்கள். இவ்வாறு தனிமைப்பட்டிருக்கும் நிலை தீண்டாமையை ஒழிப்பதற்கு மற்றொரு இடையூறாக உள்ளது.

□□□

# பின் இணைப்பு - I

*தீண்டாமையால் மேலும் மோசமாகும் விஷயங்கள்*

*ஜெய்பூரிலிருந்து ஒருவர் 1953 ஜூன் மாதம் நடந்த பின்வரும் சம்பவம் பற்றி எழுதியிருக்கிறார்:*

*"ஜெய்பூர், ஜூன் 25: இந்த மாநிலத்தில் 'நாஹ்ரு' அல்லது 'பாலா' என்று அழைக்கபடும் கினிப் புழு நோய் காணப்படுகிறது. இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்கள் பல மாதங்கள், சில சமயம் ஓராண்டு அல்லது இரண்டாண்டு காலம் கூட அவதிப்படுகிறார்கள். பலர் இந்த நோயினால் ஒரு கை அல்லது காலைப் பயன்படுத்த முடியாமல் போகிறது.*

*இந்த நோய், குடி தண்ணீர் மூலம் பரவுகிறது. இதைத் தடுப்பதற்கு டாக்டர்கள் கூறும் ஒரே யோசனை, தண்ணீரைக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்கவேண்டும் என்பதே.*

*இந்த நோய் பல சமயங்களில் மழைக்காலம் தொடங்கியதும் பரவுகிறது. அதுதான் விதைப்புக்காலம். எனவே, கிராமவாசி வேலை செய்து சம்பாதிக்க ஆயத்தமாகும் சமயத்தில் படுக்கையில் கிடக்கிறான்.*

---

*1. புத்தகம் ஐந்துக்கு பின்இணைப்புகளாக அச்சிடப்பட்டுள்ள பத்திரிகை செய்திகள் எல்லாம் இந்தப் புத்தகத்தின் எழுத்துப் பிரதியின் இறுதியில் காணப்பட்டன.*

*2. இது 1953 ஜூன் 27-ஆம் தேதி 'ஸ்டேட்ஸ் மன்' பத்திரிகையில் வெளியாயிற்று.*

*பன்ஸ்வாரா அருகே கோப்ரா கிராமத்தில் நடத்திய விசாரணைகளில் இருந்து 57 குடும்பங்களில் 125 பேருக்குக் கினிப் புழு நோய் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தது. ஆறு பேர் கொண்ட ஒரு ஹரிஜனக் குடும்பத்தில் ஐந்து பேருக்குக் கினிப் புழு நோய் ஏற்பட்டிருந்தது. அவர்கள் உண்பதற்கு ஒரு சில உலர்ந்த இறைச்சித் துண்டுகளே இருந்தன.*

*பல சமயங்களில் இந்த நோய் இந்த மக்கள்மீது சமூகத்தால் சுமத்தப்படுகிறது. ஹரிஜனங்கள் தண்ணீர் எடுக்கும் குட்டை மிகவும் அழுக்கடைந்து போயிருந்தது; அது ஒரு கினிப் புழுப் பண்ணையாக இருந்திருக்கவேண்டும். பன்ஸ்வாரா மாவட்ட ஆட்சித் தலைவருக்கு அதைக் காண்பித்தபோது, அவர் அதிர்ச்சியடைந்துபோய் அதை உடனடியாக மூடிவிட உத்தரவிட்டார்.*

*அருகிலேயே கட்டப்பட்ட கிணறு ஒன்று இருந்தது. அதனுள் சென்று தண்ணீர் எடுக்கமுடியும். அந்தக் கிணற்றிலிருந்து ஹரிஜனங்கள் தண்ணீர் எடுத்துக்கொள்ள அனுமதிக்குமாறு இந்துக்கள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். ஆனால், அவர்கள் அதற்கு இணங்கவில்லை. அந்தக் குட்டையின் தண்ணீரை நீங்கள் குடிப்பீர்களா என்று மாவட்ட ஆட்சித் தலைவர் அவர்களைக் கேட்டார். அது மனிதர்கள் குடிப்பதற்குத் தகுதியற்றது என்று அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். ஆயினும் ஹரிஜனங்கள் கிணற்றைப் பயன்படுத்த அனுமதிக்க மறுத்தார்கள்.*

*நிலைமைகள் மோசமாக உள்ளன. ஹரிஜனங்கள் மிக அதிகமாகக் கஷ்டப்படுகிறார்கள். தீண்டாமை, சட்டத்தின்படி குற்றமாக்கப்பட்டுள்ளது. அதை ஒழிப்பதற்கு ஹரிஜன சேவக் சங்கம் நீண்டகாலமாகப் போராடி வருகிறது. ஆயினும் கிராமப் புறங்களில் உள்ள சாதி இந்துக்களின் இதயங்களிலும் மனங்களிலும் மாற்றம் ஏற்படவில்லை. இந்த விஷயத்தில் மாநில அரசுகளும் ஒன்றும் செய்யமுடியவில்லை.*

## பின்இணைப்பு II

*அங்கு சட்டை அணிவது குற்றம்*

தென்னிந்தியாவில் ஹரிஜனங்களின் துன்பங்கள்: ஒரு சமூகத் தொண்டரின் அனுபவம் (ஸ்வாமி ஆனந்த தீர்த்தர், மண்டல அதிகாரி, அகில இந்திய ஹரிஜன சேவக் சங்கம்) சமூக இயலாமைகள் ஒழிப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்து ஐந்து ஆண்டுகள் ஆனபின்பும் ஹரிஜங்களின் பல்வேறு சிவில் இயலாமைகள் நமது கிராமங்களில் இன்னமும் நீடிப்பது வருத்தமளிக்கிறது. மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் ஹரிஜனங்கள் மீதான சமூகத், தடைகளை ஒழிப்பதற்கு அகில இந்திய ஹரிஜன சேவக் சங்கம் தனது தீவிர இயக்கத்தைத் தொடங்கி இப்போது 9 மாதங்கள் ஆகிவிட்டன. இந்தக் காலத்தில் டீக்கடைகள், முடி திருத்தும் நிலையங்கள், கிணறுகள், குளங்கள், சாவடிகள் முதலானவற்றில் ஹரிஜனங்களுக்கு உள்ள தடைகள் பற்றிப் பிரசாரம் செய்யப்பட்டது. சில இடங்களில், இந்தச் சட்டத்தைப் பிரசாரம் செய்து அதை நடைமுறைப்படுத்தவேண்டிய கிராம முன்சீபுகளே மிகப் பிற்போக்கானவர்களாகவும், ஹரிஜனங்கள் தங்கள் உரிமைகளைப் பயன்படுத்துவதற்கு இடையூறாகவும் இருக்கிறார்கள். நம் சமூகத்தில் ஹரிஜனங்களுக்கெதிரான பாரபட்சம் எவ்வளவு ஆழ்ந்து வேரூன்றியுள்ளது என்பதைக் காட்டுவதற்குச் சில சம்பவங்கள் கீழே தரப்படுகின்றன.

நத்தம் அருகே, பரளி என்ற இடத்தில் ஒரு ஹரிஜன இளைஞர் சிரட்டையில் தேநீர் குடிக்க மறுத்துக் கண்ணாடித் தம்ளரில் கொடுக்கும்படிக் கேட்டார். அவரைச் சாதி இந்து ஒருவர் காலால் உதைத்துத், தலையில் செருப்பால் அடித்தார். மேலூர் சப்-மாஜிஸ்ட்ரேட் அந்த இந்துவுக்கு ரூ.10 மட்டுமே அபராதம் விதித்தார். மேலவளவு என்ற இடத்தில், நான் இரண்டு ஹரிஜனப் பையன்களுடன் ஒரு டீக்கடைக்குச்

சென்றபோது, அங்கு ஒரு குழுவினர் என்னைத் தாக்குவதாக அச்சுறுத்தி, அந்தப் பையன்களை விரட்டிவிட்டார்கள். டீக்கடைக்காரர் வேண்டுமென்றே ஒரு கண்ணாடித் தம்ளரை உடைத்தார். அங்கிருந்தவர்கள் எல்லோரும் அதற்கு நான் பணம் கொடுக்க வேண்டும் என்றும், இல்லாவிட்டால் அடிபடுவேன் என்றும் சொன்னார்கள். ஆனால், நான் அருகிலிருந்த தொடக்கப்பள்ளியில் போய்ப் புகலடைந்தேன். பஞ்சாயத்து வாரியத் தலைவர் தலையிட்டபின் கூட்டத்தினர் மறைந்து போனார்கள்.

கீழவளவு என்ற இடத்தில் ஹரிஜனங்கள் ஒரு அழுக்கடைந்த குட்டையிலிருந்து தண்ணீர் எடுக்கிறார்கள். அதில் மனிதர்கள் குளிக்கிறார்கள், மாடுகளும் குளிப்பாட்டப்படுகின்றன. ஹரிஜனங்கள் பொது ஊருணியில் போய்த் தண்ணீர் எடுக்குமாறு ஹரிஜனங்களுக்குத் தைரியம் சொல்லப்பட்டது. ஆனால், அவர்கள் சென்றபோது சாதி இந்துக்கள் அவர்களைத் திட்டி மிரட்டினார்கள். அதனால் ஹரிஜனங்கள் ஊருணியில் தண்ணீர் எடுக்கத் துணியவில்லை. கீழவளவில் காவல்நிலையம் ஒன்று இருக்கிறது. ஆனால் அங்குள்ள காவலர்கள் ஹரிஜனங்களின் இந்தக் கஷ்டங்களைப் பற்றி அலட்சியமாயிருக்கிறார்கள். ஆட்டுக்குளம் என்ற இடத்தில் நாங்கள் கூறியபடி பொதுக்கிணற்றில் தண்ணீர் எடுத்த ஹரிஜனங்களைச் சாதி இந்துக்கள் தடுத்து நிறுத்த முடியவில்லை. அதனால் அவர்கள் அந்தக் கிணற்றில் மலத்தைப் போட்டார்கள். எட்டிமங்கலத்தில் ஊர்ச் சாவடியில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தபோது ஹரிஜனங்கள் அங்கு நுழைந்தார்கள் என்பதற்காக, அவர்கள் அரசுப் புறம்போக்கு நிலத்தில் போட்டிருந்த நெல் நாற்றங்காலைச் சாதி இந்துக்கள் அழித்துவிட்டார்கள். இதைப்பற்றி ஹரிஜனங்கள் கொடுத்த புகார்மீது காவல்துறையினர் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

திருவாரூரில் நாங்கள் ஹரிஜனங்களை ஊருணியில் தண்ணீர் எடுக்கச் சொன்னோம். அதன்படி ஊருணிக்குச் சென்ற கர்ப்பிணியான ஒரு ஹரிஜனப் பெண்ணை சாதி இந்து இளைஞர் ஒருவர் தாக்கி அவளுடைய பானையையும் உடைத்தார். அவர் மீது காவல் துறையினர் வழக்குப்போட்டபோது சப்-மாஜிஸ்ட்ரேட் அவருக்கு ரூ. 15 மட்டுமே அபராதம் விதித்தார். அதற்குப்பின் ஹரிஜனங்கள் ஊருணியிலிருந்து தடையின்றித் தண்ணீர் எடுத்துவருகிறார்கள். கொட்டகுடியில் கிராமத்தின் முடிதிருத்தும் தொழிலாளி, ஒரு ஹரிஜனச் சிறுவனுக்கு முடிதிருத்த மறுத்தார். காவல் துறையினர் அவர்மீது வழக்குப் போட்டு, சப் மாஜிஸ்ட்ரேட் தண்டனை விதித்தார். ஆனால், அதன்பின் சாதி இந்துக்கள் ஹரிஜனங்களைச் சாவடிக்கு வரவழைத்து அந்த முடிதிருத்தும் தொழிலாளியை அவர்கள் கூப்பிட்டால் கூட்டு அபராதம் விதிக்கப்படும் என்று எச்சரித்தார்கள்.

கிடாரிப்பட்டியில் ஹரிஜனங்கள் பொது நடைபாதை வழியாகப் பிணத்தை எடுத்துச் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. கிராமத்துத் தெருக்களில் அவர்கள் சைக்கிளில் செல்லவும் அனுமதி இல்லை.

ஒரு ஹரிஜன் சைக்கிளில் சென்றபோது அவரைத் தடுத்ததற்காக மேலூர் சப்-மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் ஒரு வழக்கு விசாரணையில் உள்ளது. மேலூர் வட்டாட்சியர் அலுவலகத்திலிருந்து மூன்று பர்லாங் மட்டுமே தூரம் உள்ள நுண்டிக்கோவில்பட்டியில், ஹரிஜனங்கள் வாய்க்காலில் இருந்து குடிதண்ணீர் எடுக்கவேண்டியிருந்தது. இதைப்பற்றிக் காவல் துறையினரிடம் இரண்டு புகார்கள் கொடுக்கப்பட்டன. இப்போது சாதி இந்துக்கள் ஹரிஜனங்களைத் தடுக்கத் துணிவதில்லை. தெற்குத் தெருவில் மந்தைச் சாவடியில் பொதுக்கூட்டம் நடந்தபோது ஹரிஜனங்கள் அங்கே உட்கார்ந்ததற்காக அவர்கள்மீது கற்கள் வீசப்பட்டன. அவர்கள் அச்சமடைந்து வெளியேறிவிட்டார்கள்.

மேலூரிலிருந்து இரண்டு மைல் தொலைவில் உள்ள நாவினிப்பட்டியில், ஹரிஜனங்கள் பொங்கல் பண்டிகையின்போது நல்ல ஆடை அணிந்ததைக் கிராம முன்சீபே ஆட்சேபித்திருக்கிறார். அவர் இரண்டு ஹரிஜன இளைஞர்களைச் சட்டையையும் மேல் துண்டையும் அகற்றிவிடச் செய்தார். மேலும் அவர்களைக் கீழே விழுந்து கும்பிடச்செய்து, கோவணத்துடன் மட்டும் போகச் செய்தார்.

மிகவும் வேதனையளிக்கும் ஒடுக்குமுறை மதுரை நகரிலிருந்து பத்து மைல் தூரத்தில் உள்ள மண்குளத்தில் நடந்தது. அந்த ஊரில் டீக்கடையில் நுழைய அனுமதி மறுக்கப்பட்ட இரண்டு ஹரிஜன இளைஞர்கள் காவல்துறையினரிடம் புகார் செய்ததற்காகக் கிராம முன்சீப் அவர்கள்மீது கோபம் கொண்டார். ஊர்ப்பெரியவர்கள் அவர்களில் ஒருவரைத் தூணில் கட்டிவைக்கச் செய்து, சாதி இளைஞர் ஒருவரைவிட்டு இரக்கமின்றி அடிக்கச் செய்தார்கள். மற்றொரு ஹரிஜன், கிராம முன்சீபின் வேலையாளால் கத்தியால் தாக்கப்பட்டார். ஹரிஜனங்கள் ஊருணியிலிருந்து தண்ணீர் எடுத்ததற்காக அவர்களைச் சமூகப் பகிஷ்காரம் செய்து அவர்களுக்கு வேலை கொடுக்க மறுத்தார்கள். கடைக்காரர்கள் அவர்களுக்கு உணவுப்பொருள்களை விற்க மறுத்து இரண்டு நாள்கள் பட்டினியாயிருக்க வைத்தார்கள். வருவாய்க் கோட்ட அதிகாரி தலையிட்டபின்புதான் நிலைமை சீரடைந்தது.

சமீபத்தில் இரண்டு ஹரிஜனங்களும் நானும் குளத்தில் குளித்துவிட்டுச் சாவடியின் எதிரே இருந்த காப்பி கிளப்பில் நுழைந்ததற்காகச் சாதி இந்துக்கள் விறகுக் கட்டைகளால் அடித்தார்கள். நாங்கள் மதுரை அரசு மருத்துவமனையில் சேர்ந்து சிகிச்சை பெற்றோம்.

எனக்கு வலது பாதத்தில் எலும்பு முறிவு ஏற்பட்டதால் வலது காலை ஊன்றி நடக்கமுடியவில்லை. கிராம முன்சீப் உள்ளிட்ட 16 பேர் மீது காவல் துறையினர் குற்றச்சாட்டுப் பதிவு செய்திருக்கிறார்கள். சில காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய உறவினர்கள் இதில் சம்பந்தப்பட்டிருப்பதால் சமரசமாக முடிவு செய்ய முயற்சி செய்கிறார்கள். இவர்கள் இதற்காக அதிகாரிகளை அணுகி இருக்கிறார்கள். ஹரிஜனங்களை நமது இரத்த சகோதரர்களாகக் கருதவேண்டும் என்று மகாத்மாஜி கூறுகிறார். ஆனால் அந்தோ, இரத்தம் தண்ணீரைவிடக் கெட்டியானது.

மாபெரும் தியாகங்கள் செய்து நாட்டுக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த மகாத்மாஜி, தாழ்த்தப்பட்ட இந்த மக்களுக்கும் நாம் சுதந்திரம் அளிக்கவேண்டும் என்று போதித்தார். ஆயினும் இப்போதும் கூட சாதி இந்துக்களின் மனப்போக்கில் மாற்றம் இல்லை என்பதைக் காண உள்ளம் சோர்ந்து போகிறது. ஹரிஜனங்களின் அவல நிலையை மாற்றுவதற்கு வருவாய்த்துறை, காவல்துறை அதிகாரிகள் மிகவும் உதவமுடியும். தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு எதிரான பாரபட்சங்களை ஒழிப்பதற்கு, மகாத்மாஜியின் மகன் மணிலால் சத்தியாக்கிரகம் நடத்துகிறார். ஆனால், நம் நாட்டில் மகாத்மாஜி தம்முடைய சொந்த உற்றார் உறவினராகக் கருதும் ஹரிஜனங்களுக்குச் சம உரிமை தர நாம் மறுத்து வருகிறோம். மகாத்மாஜியைப் போற்றி வணங்கும் காங்கிரஸ்காரர்களும் சாதி இந்துக்களும் தீண்டாமை என்ற சாபம் நம் நாட்டின் எந்தவொரு மூலை முடுக்கிலும்கூட இல்லாமல் வேரோடும் கிளையோடும் அழிக்கப்பட்டாலன்றி அவரது ஆன்மா சாந்தியடையாது என்பதை நினைவில் கொள்ளவேண்டும். இந்தக் கொடுமையை நம் சமூகத்திலிருந்து ஒழிப்பதற்கு மேலும் தீவிர முயற்சி மேற்கொள்வதன் அவசியத்தை அரசு உணர வேண்டும்.

# பின் இணைப்பு III

*ஹரிஜனங்கள் மீது காட்டு தர்பார் தண்டனை*
*(தும்பப்பட்டியில் வேதனையான வெட்கமான கொடுமைகள்)*
*கிராமங்களில் சாவடி நீதிமன்றங்களைத் தடுக்க வேண்டும்.*

*சாவடி நீதிமன்றங்கள் :*

தமிழ்நாட்டின் கிராமங்களில் உள்ள பொதுச் சாவடிகளில் ஹரிஜனங்கள் ங்கள் நுழைய முடியாது என்பது அனைவரும் அறிந்த உண்மை. ஆனால், இந்தச் சாவடிகளில் தான் சாதி இந்துக்கள் அவர்கள்மீது விசாரணை நடத்தித் தண்டனை விதிக்கிறார்கள். இந்தத் தண்டனைகள் கொடுமையான முறையில் பழிவாங்கும் செயல்களாக இருப்பதால் ஹரிஜனங்கள் எப்போதும் சாதி இந்துக்களிடம் அஞ்சிக்கொண்டே உயிர்வாழ்கிறார்கள். ஹரிஜனங்கள் மீது உள்ள தடைகளை ஒழிப்பதற்கு நாம் நடத்தும் இயக்கத்தில் அவர்கள் ஒத்துழைக்காமலிருப்பதற்கு இந்த அச்சமும் ஒரு காரணமாகும். கிராமத்தின் பெரிய அம்பலக்காரர்தான் இந்தக் கொடுமைகளை நடத்துவதில் சாதி இந்துக்களின் தலைவர். பல இடங்களில் கிராம மக்கள் பஞ்சாயத்து நடத்துவது என்ற பெயரில், இந்தச் சாவடி நீதிமன்றங்களை நடத்துகிறார்கள். அப்பாவி ஹரிஜனங்கள் இந்தச் சாவடிகளுக்கு வரவழைக்கப்பட்டு அடிமைகளைப் போல விசாரணைக்கு உட்படுத்தப்படுகிறார்கள். இவர்களில் யாரேனும் பெரிய அம்பலக்காரரின் உத்தரவை மீறினால், அவர்மீது காட்டு தர்பார் சட்டம் கட்டவிழ்த்து விடப்பட்டு இரக்கமின்றி அடித்தும் சித்திரவதை செய்தும் கொடுமைப்படுத்தப்படுகிறார். ஹரிஜனங்கள் மனத்தில் பீதியை ஏற்படுத்துவதும் பெரிய அம்பலக்காரரின் கட்டற்ற அதிகாரத்தைக் காட்டுவதும் இதன் நோக்கம். சாவடியில் ஹரிஜனங்கள் மீது இழைக்கப்படும் கொடுமை, அந்தந்த சந்தர்ப்பத்திற்கும் பெரிய

அம்பலக்காரரின் மனம்போகும் போக்குக்கும் தகுந்தபடி பல்வேறு வடிவங்களை எடுக்கிறது. பகிரங்க சவுக்கடி, கடுமையான அபராதம், அதைச் செலுத்தத்தவறினால் சொத்துப் பறிமுதல், பொய் வழக்குப் போடுதல், பொருளாதாரப் பகிஷ்காரம், வேலைகொடுக்க மறுப்பது, ஊதியத்தைக் கொடுக்காமல் நிறுத்திவைப்பது, சமூகப் பகிஷ்காரம் செய்து சமூக நிகழ்ச்சிகளிலும் சமயச் சடங்குகளிலும் அவர்கள் பங்கேற்கமுடியாமல் தடுப்பது, குளங்களிலும் கிணறுகளிலும் தண்ணீர் எடுக்கக்கூடாது என்று தடை செய்வது, கிராமத்துக் கடைகளில் அவர்களுக்குப் பொருள்கள் விற்கக்கூடாது என்று தடைசெய்து உணவுப் பொருள்கள் கிடைக்காமல் செய்வது முதலான பல கொடுமைகள் அவர்கள்மீது சுமத்தப்படுகின்றன. கிராமங்களில் பஞ்சாயத்து என்ற பெயரில், இதுபோன்ற சட்ட விரோதமான நீதிமன்றங்கள் நடத்தப்படுவதைத் தடுத்தால்தான் ஹரிஜனங்கள் விடுதலை பெற முடியும். ஒரு பிற்படுத்தப்பட்ட சிறுபான்மைச் சமுதாயத்தின்மீது மேலே கூறப்பட்டது போன்ற கொடுமைகளைக் கிராம மக்கள் சுமத்துவதை எந்த ஒரு நாகரிக அரசும் சகித்துக்கொள்ளமுடியாது.

தும்பப்பட்டியில் கொடுமைகள் :

தும்பப்பட்டியில் 1953 ஆகஸ்ட் முதல் தேதி ஹரிஜனங்கள் மீது நடத்தப்பட்ட விசாரணை பற்றிய பின்வரும் விவரங்கள், யாருடைய இதயத்திலும் இரத்தம் கசியச் செய்யும். இந்தக் கிராமம் மதுரையிலிருந்து 22 மைல் தூரத்தில் உள்ளது. நாடாளுமன்ற உறுப்பினரும் தமிழ்நாட்டின் முக்கிய ஹரிஜனத் தலைவர்களில் ஒருவருமான திரு பி.கக்கனின் சொந்த ஊர் இது.

ஹரிஜனச்சேரியின் வயதுவந்தவர்கள் எல்லோரும் சாவடிக்கு எதிரேயுள்ள மந்தைக்கு வரவழைக்கப்பட்டார்கள். சாதி இந்துக்கள், பெரிய அம்பலக்காரருக்கும் அவரது சபையினருக்கும் வழக்கம்போல தரையில் வயிறு படும்படியாகக் கீழே விழுந்து கும்பிட்டு வணக்கம் செய்தார்கள். பின்பு சுமார் ஒரு டஜன் ஹரிஜன இளைஞர்களைக் கூப்பிட்டு விசாரணை நடத்தினார்கள். கிராமத்தில் நடந்த பல்வேறு சிறிய திருட்டுக்களை அவர்கள் செய்திருப்பதாகச் சந்தேகித்து இந்த விசாரணை நடத்தப்பட்டது, ஆயினும், சிறிது தைரியமாக நடப்பவர்களும் வழக்கமாக சாதி இந்துக்களுக்குக் கீழ்ப்படிந்து போகாதவர்களுமான இளைஞர்கள் தண்டனைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. அவர்களைக் கம்பால் அடித்து, அந்தத் திருட்டுக்களைச் செய்ததாக ஒப்புக்கொள்ளச் சொன்னார்கள். மற்ற ஹரிஜனங்களிடம் கேள்விகள் கேட்டார்கள். அவர்கள் தாங்கள் பழிவாங்கப்படுவோம் என்ற பயத்தினால் அந்தத் திருட்டுக் குற்றச்சாட்டுக்களை அந்த இளைஞர்கள் மேலேயே சுமத்தினார்கள்.

அந்த இளைஞர்கள்தான் குற்றவாளிகள் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. அவர்களில் சிலர் தண்டனை பெறுவதற்காகக் கைவிலங்கிடப்பட்டார்கள். ஆனால் அவர்களில் ஒருவர் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்ததாகவும் தப்பியோடப்பார்த்ததாகவும் தெரிகிறது. இவ்வாறு சாவடி நீதிமன்றத்துக்கு அவமதிப்புக்காட்டுவதைச் சாதி இந்துக்கள் கண்டித்தார்கள். உடனே பெரிய அம்பலக்காரர், அந்த இளைஞர்களைக் கடுமையாகத் தண்டிக்கும்படி உத்தரவிட்டார். காட்டு தர்பார் சட்டம் கட்டவிழ்த்து விடப்பட்டது. அந்த இளைஞர்கள் இரக்கமின்றித் தாக்கப்பட்டார்கள்.

ஹரிஜனங்கள்மீது ஏதேனும் கோபம் அல்லது வெறுப்பு உள்ளவர்கள் எல்லோரும் பயமில்லாமல் அவர்கள்மீது பழிவாங்குவதற்கு அது ஒரு வாய்ப்பாயிற்று. தப்பியோட முயன்ற இளைஞரின் காலைப்பிடித்து கல்லும் கரடுமான தரையில் இழுத்துச் சென்றார்கள். மற்றவர்களைக் கம்புகளால் அடித்து மரத்தில் கட்டிவைத்து மீண்டும் அடித்தார்கள். அடித்த அடியில் அவர்களின் எலும்புகள் அநேகமாக உடைந்துபோயின. அவர்கள் மரத்தில் கட்டிவைக்கப்பட்டபடியே, பரிதாபமான கேலிப் பொருள்களாக, எட்டு மணிநேரம் நிற்கவைக்கப்பட்டார்கள். ஹரிஜன ஊழியர்களுடன் ஒத்துழைக்கக்கூடாது என்று ஹரிஜனங்களுக்குப் பொது எச்சரிக்கை கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

பொய்வழக்கு சுமத்தப்பட்டது :

அதன்பிறகு, அந்தக் கிராம மக்கள் செய்தது மேலும் வெட்ககரமானது. ஹரிஜனங்கள்மீது பொய் வழக்குப் போட்டுக், காவல் துறையினரை உடனடியாக நடவடிக்கை எடுக்கவைப்பது வழக்கமாக நடைபெறுவது. ஹரிஜனங்களுக்குக் கடுமையான காயம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தபோது, கிராம மக்கள் தாங்கள் பிரச்சினையில் சிக்க நேரும் என்று உணர்ந்தார்கள். அதனால் அவர்கள் நாடாளுமன்ற உறுப்பினரான திரு. பி. கக்கனின் 85 வயது தந்தை திரு. பூசாரி கக்கனை (அவர் கிராமத் தோட்டியாக வேலைபார்ப்பவர்) ஹரிஜனக் கோவிலில் சில பொருள்களை முந்தின நாள் மாலையிலிருந்து காணவில்லை என்று பொய்ப்புகார் கொடுக்கச் செய்தார்கள். அந்தப் பொருள்கள் ஹரிஜன இளைஞர்களிடமிருந்து மீட்கப்பட்டதாக கிராம முன்சீப் காவல்துறையினருக்கு அறிக்கை அனுப்பினார்.

திரு. பூசாரி கக்கனும் அவரது உறவினரான மற்றொரு தோட்டி திரு. எட்டி கக்கனும் இந்தப் பொருள்களைக் கொண்டு வந்து கிராம முன்சீபிடம் கொடுத்ததாகக் கூறப்படுகிறது. அறிக்கை கிடைத்ததும். காவல்துறையினர் வந்து அந்த இளைஞர்களைத் திருட்டுக் குற்றச்சாட்டின் பேரில் கைது செய்தார்கள். அவர்கள் காயமடைந்திருந்ததால் காவல்துறையினர் அவர்களை

மருத்துவமனைக்கு அனுப்பினார்கள். காவல்துறையினரின் செயலைப் பகிரங்கமாகக் குறைகூற நாங்கள் விரும்பவில்லை. ஹரிஜனங்கள் மீது கிராம மக்கள் நடத்திய கொடுமைகள் காவல்துறையினரின் கவனத்தைக் கவரவில்லை என்று சொல்வது மட்டும் போதுமானது !

### உண்மை வெளிப்பட்டது

அந்தக் கிராம மக்கள் தங்கள் செயலை நியாயப்படுத்தும் மனு ஒன்றைத் தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கத்தின் தலைவர் திரு. ஏ. வைத்தியநாத அய்யருக்கு அனுப்பினார்கள். அவர் அதை எனக்கு அனுப்பிவைத்து, அது பற்றி விசாரித்து அறிக்கை கொடுக்குமாறு கோரினார். அதற்கிணங்க, மேலூர் வட்டக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர், மேலூர் வட்ட ஹரிஜன சேவா சங்கச் செயலாளர், சேவா சமாஜச் செயலாளர், நான் ஆகியோர் கொண்ட சிறிய கமிட்டி விசாரணை நடத்தினோம். கிராம மக்கள் ஹரிஜன இளைஞர்களை இரக்கமின்றித் தாக்கிக் காவல் துறையினர் வரும்வரை எட்டுமணி நேரம் மரங்களில்கட்டி வைத்திருந்தார்கள் என்று தெரிய வந்தது. திரு. பூசாரி கக்கனும் பெரிய அம்பலக்காரரும் கொடுத்த புகார்களைத் திரு. வைத்தியநாத அய்யர் பரிசீலனை செய்தார். காவல் துறையினரிடம் தாங்கள் கொடுத்த புகார்கள் பொய்யானவை, இட்டுக்கட்டியவை என்று, அவர்கள் அவரிடம் ஒப்புக் கொண்டார்கள். பெரிய அம்பலக்காரரும் ஹரிஜனங்களுக்கு இழைக்கப்பட்ட தீங்குகளுக்கு வருத்தம் தெரிவித்தார். காவல் துறையினரும் திரு. பூசாரி கக்கன் கொடுத்த புகார் பற்றி விசாரணை நடத்திக் ‘கண்டுபிடிக்கமுடியாதது ‘ என்று கூறிவிட்டார்கள். ஆயினும் அந்தக் கிராம மக்களுக்கெதிராக வழக்கு எதுவும் போடப்படவில்லை. ஹரிஜன இளைஞர்களின் எலும்பு உண்மையில் உடையவில்லை என்று தெரிகிறது. ஆனால், அவர்கள் உடம்பில் கம்பால் அடித்த வீக்கங்களும், கயிற்றால் கட்டிய வரைகளும் பல நாள்கள் காணப்பட்டன. அவர்களில் இரண்டு பேரை மருத்துவமனையில் இரண்டு நாள்கள் வைத்திருந்து எலும்பு முறிவு ஏற்பட்டுள்ளதா என்று அறிய எக்ஸ்-ரே படங்கள் எடுக்கப்பட்டன. அவர்களுடைய கால்களில் பிளாஸ்டர் கட்டுப் போட்டு வீட்டுக்கு அனுப்பப்பட்டார்கள். இரண்டு வாரங்களுக்கு அவர்களால் சரியாக நடக்கமுடியவில்லை.

### இரண்டு விசாரணைகள் நடத்தப்பட்டன :

துணை மாவட்ட ஆட்சியாளரின் உத்தரவுப்படி மதுரைத் துணை நல்வாழ்வு அதிகாரி ஒரு விசாரணை நடத்தினார். மற்றொரு விசாரணை அரசின் உத்தரவுப்படி மதுரை வருவாய்க் கோட்ட அதிகாரியால் நடத்தப்பட்டது. இவற்றின் முடிவுகள் இதுவரை தெரியவில்லை.

## தும்பப்பட்டியில் சிவில் உரிமைகள் மறுப்பு :

தும்பப்பட்டியில் 1948-இல் ஹரிஜனங்கள் பொது ஊருணியிலிருந்து தண்ணீர் எடுத்தபோது கிராம மக்களிடமிருந்து பயங்கரமான எதிர்ப்பு வந்தது. அதுவரை ஹரிஜனங்கள், மனிதர்கள் குளிப்பதற்கும் மாடுகளைக் குளிப்பாட்டுவதற்கும் பயன்படுத்தப்பட்ட ஓர் அழுக்குக் குட்டையிலிருந்து தண்ணீர் எடுத்துவந்தார்கள். சில ஹரிஜன இளைஞர்கள் கடுமையாக அடிக்கப்பட்டார்கள்; ஹரிஜனங்களின் வீடுகளுக்குத் தீவைக்கவும் முயற்சி நடந்தது. இதுபற்றிக் கிராம முன்சீபையும் மற்றவர்களையும் அதிகாரிகள் எச்சரித்ததாகக் கூறப்படுகிறது. தும்பப்பட்டியில் ஒரு டீக்கடையில், ஒரு ஹரிஜனுக்குக் கண்ணாடித் தம்ளரில் காப்பி கொடுக்க மறுக்கப்பட்டது பற்றி 1953 ஆகஸ்ட் 19-ஆம் தேதி காவல்துறைக்குத் தெரிவிக்கப்பட்டது. அந்த டீக்கடைக்காரர் மீது நடந்த வழக்கில், சப்-மாஜிஸ்ட்ரேட், அவருக்கு ரூ10 அபராதம் விதித்தார். கிராமத்தின் முடிதிருத்தும் தொழிலாளி ஹரிஜனங்களுக்கு முடிதிருத்தத் தாம் தயாராயிருப்பதாகக் கூறுகிறார். ஆயினும், ஹரிஜனங்கள் அவரிடம் போவதில்லை. சாதி இந்துக்கள் அவர்களுக்கு விடுத்துள்ள ரகசிய எச்சரிக்கையே இதற்குக் காரணம். சில ஹரிஜன இளைஞர்கள் 1953 ஜூலை முதல் தேதி, அந்த முடிதிருத்தும் தொழிலாளியிடம் சென்றிருந்தார்கள். 1953 ஆகஸ்ட் முதல் தேதி ஹரிஜன இளைஞர்கள்மீது நடத்தப்பட்ட விசாரணை ஹரிஜனங்களின் மனத்தில் பீதியை உண்டாக்குவதற்கான ஏற்பாடுதான் என்று நினைக்கக் காரணம் உள்ளது.

## நமது பொதுவான அனுபவம் :

ஹரிஜனங்கள், தங்களுடைய அடிப்படை உரிமைகளைப் பயன்படுத்தத் துணியும் போதெல்லாம், சாதி இந்துக்கள் அவர்களைச் சாவடிக்கு வரவழைத்து ஏதாவதொரு வகையில் அவர்களைத் தொல்லைக்கும் துன்பத்துக்கும் உள்ளாக்குகிறார்கள் என்பதே நமது பொதுவான அனுபவமாகும். இத்தகைய சம்பவங்கள் மண்குளம், குருவங்குளம், ஆதனூர், பதினெட்டாங்குடி, கருகக் கோட்டை ஆகிய இடங்களில் நடந்துள்ளன. காவல்துறை உயர் அதிகாரிகள் இந்த இடங்களுக்குச் சென்று பார்த்தனர் என்பது நல்ல செய்தி. கொட்டகுடி, கிடாரிப்பட்டி, புள்ளிப்பட்டி போன்ற சில இடங்களில் ஹரிஜனங்கள் சாவடிக்கு வரவழைக்கப்பட்டு எச்சரிக்கப்பட்டார்கள். கீழ்நிலைகளில் உள்ள காவல்துறை அலுவலர்கள் வழக்கம் போலச் சாதி இந்துக்களை ஆதரிக்கிறார்கள். அதனால் சாதி இந்துக்கள், தங்களுடைய காட்டு தர்பார் சட்டத்தைப் பயன்படுத்தி, ஹரிஜனங்கள் தங்களுடைய சமூகத் தாழ்வு நிலையை நினைவில் வைத்துக்கொள்ளச் செய்வதற்குச் சுதந்திரம் கிடைக்கிறது.

நாம் இதைச் சகித்துக் கொள்ள முடியுமா?

ஜாலியன்வாலாபாகில் டயர்ஸ் நடத்திய கொடுமைகளை எதிர்த்துக் கிளர்ச்சிகள் நடத்திய நாம், ஹரிஜனங்கள் இவ்வாறு காட்டுத்தனமாக துன்புறுத்தப்படுவதையும் அவமதிப்புக்கு உள்ளாக்கப்படுவதையும் சகித்துக் கொள்ள முடியுமா என்பது நம் முன்னால் உள்ள கேள்வி. ஜாலியன்வாலாபாகில் ஒரு பொதுக்கூட்டத்தில் கூடியிருந்த ஆண்கள் மற்றும் பெண்கள் மீது கொடுமை இழைத்தவர்கள் அன்னிய ஆட்சியின் அலுவலர்கள்.

இங்கே, இதே போன்ற கொடுமைகளை நம் நாட்டின் கிராம மக்களே சில ஹரிஜன இளைஞர்கள் மீது நடத்தியிருக்கிறார்கள். பொதுவாக எல்லா ஹரிஜனங்களுடைய உள்ளத்திலும் பீதியை ஏற்படுத்துவதற்காக இவர்களைச் சாவடியில் விசாரித்துக் கொடுமைகளை நடத்தியிருக்கிறார்கள்.

அரசாங்கம் செய்ய வேண்டியது :

கிராமங்களில் ஹரிஜனங்கள் உள்ளிட்ட தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட கிராமப் பஞ்சாயத்துக்கள் அரசினால் அமைக்கப்பட்டுள்ளன. அரசினால் அங்கீகரிக்கப்பட்ட இந்தப் பஞ்சாயத்துகள் இருக்கும்போது, இவற்றுக்கு இணையாகச் சாதி இந்துக்கள், சாவடிப் பஞ்சாயத்துக்களை நடத்த ஏன் அனுமதிக்க வேண்டும்? இந்தச் சாவடி நீதிமன்றங்கள் கிராமங்களில் உள்ள பிற்படுத்தப்பட்ட ஏழைச் சமுதாயங்களின் சமூக, பொருளாதார, அரசியல் முன்னேற்றத்துக்கு அபாயமாக உள்ளன. இந்தச் சாவடி நீதிமன்றங்களை அரசு தடை செய்தாலன்றிக் கிராமங்களில் உள்ள ஹரிஜனங்களுக்குச் சுதந்திரம் இருக்காது, அவர்களின் நிலையும் உயரமுடியாது. சாவடி நீதிமன்றங்களில் ஹரிஜனங்கள் விசாரிக்கப்படுவதைத் தடைசெய்யும் வரை ஹரிஜனங்களின் சிவில் உரிமைகள் பறிக்கப்படுவதை ஒழிப்பதற்கு நாம் செய்யும் முயற்சிகளெல்லாம் வீணேயாகும். தீண்டாமையை ஒழிப்பதற்கு அரசு 3 லட்சம் ரூபாய் செலவிடுவதற்குமுன் சாவடிகளில் ஹரிஜனங்கள் பழிவாங்கப்படுவதை நிறுத்தி அவர்கள் மனிதர்களாகத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்வதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். கேரளத்தில், பொது இடங்களில் தீண்டாமை என்பது பழங்கதையாகி விட்டதற்குக் காரணம், அந்த மாநிலத்தில் சாவடி நீதிமன்றங்கள் இல்லாததேயாகும்.

ஒரு வேண்டுகோள் :

கிராமங்களில் உள்ள ஹரிஜனங்களைத் தாழ்ந்த சாதியினராகவும் அடிமைகளாகவும் நடத்துவதன் மூலம் அவர்களுக்கு நாம் செய்கின்ற

மிகப்பெரிய அநியாயத்தை நாம் உணரச் செய்தவர் மகாத்மாகாந்தி. அவர் மட்டும் இல்லையென்றால், நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள ஹரிஜனங்கள் சாதி இந்துக்களின் கீழ் படுகின்ற துன்பங்களைத் தாங்க முடியாமல் இந்து சமூகத்திலிருந்தே வெளியேறியிருப்பார்கள். மகாத்மா காந்தி ஹரிஜன மக்களுக்குச் சாதகமாகப் பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதற்காகப் புனாவில் வரலாற்றுப் பெருமை மிக்க உண்ணாவிரதம் நடத்தி இப்போது 21 ஆண்டுகள் ஆகிவிட்டன. இந்த ஆண்டுகளில் மிகப்பெரிய விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது என்பதிலும் இப்போது மக்களிடம் ஹரிஜன இயக்கத்திற்கு மிகுந்த அனுதாபம் காணப்படுகிறது என்பதிலும் சந்தேகம் இல்லை. ஹரிஜனங்கள் சமூகத்திலும் சிவில் வாழ்க்கையிலும் எல்லா உரிமைகளையும் பெறச்செய்வதற்கு அரசு உறுதிபூண்டுள்ளது. ஹரிஜனங்களின் நிலைமையை மேம்படுத்துவதற்கு அமைதியான முறையில் மேற்கொள்ளப்படும் சட்ட பூர்வமான எல்லா முயற்சிகளுக்கும் அரசு முழு ஒத்துழைப்பு அளித்து வருகிறது. ஆயினும் கிராமங்களில் இன்னமும் ஹரிஜனங்களுக்கெதிரான உணர்வு நீடிக்கிறது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஹரிஜனங்களைத் தீண்டத்தகாத தனியான சாதியாக நடத்தாத வகையில் கிராமங்களில் உள்ள சாதி இந்துக்களிடம் மனமாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் என்று பொது நலத்தொண்டர்கள் அனைவரையும் நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். தீண்டாமையை ஒழிப்பதற்கும், ஹரிஜனங்கள் இந்து சமூகத்தின் ஒருங்கிணைந்த பகுதியாக நடத்தப்படுவதற்கும் பாடுபட வேண்டும் என்று எல்லாத் தலைவர்களையும் கேட்டுக்கொள்கிறோம்.

*தெற்குச் சங்கம்,*
*தலைமை அலுவலகம்: மேலூர்*
*ஸ்வாமி ஆனந்த தீர்த்தர், எம்.ஏ., மண்டல அதிகாரி,*
*அகில இந்திய ஹரிஜன சேவக் சங்கம்.*

□□□

# சிறப்புப் பெயரகராதி

ஐஐஐ

